# விசயதிவிட்டர்

இது

'ஸ்ரீ கிருஷ்ண தூது,' 'சிசுபாலன்,'

'சத்திய வசனன்' முதலிய நூல்களின் ஆசிரியரும்,

சென்னைத் தொண்டை மண்டலம் துளுவ வேளாளர்

உயர்தரக் கலாசாலைத் தமிழ்ப்பண்டிதராக

இருந்தவருமான,

மே - சக்கரவர்த்தி நயினார்

இயற்றியது

(புதுக்கிய பதிப்பு)

கருணாநிதி டெப்போ

1/6, வெங்கடேச மேஸ்திரி தெரு,

சௌகார்பேட்டை, சென்னை

பதிப்புரிமை] 1933 [விலை அணா 11

# பொருளடக்கம்

# முகவுரை

---

பண்டைக் காலத் தண்டமிழ்ப் பனுவல்களை முறை யறிந்து வகுத்தமைத்த செந்தமிழ்ப் புலமை வாய்ந்த பெருமக்கள் அப்பனுவல்களுட் காப்பியப் பகுப்பின வாகிய நூல்களைப் பெருங்காப்பியமெனவும் சிறு காப்பியமெனவும் இரு கூறு படுத்து வழங்கினார்கள். அவற்றுள் சூளாமணி என்னுந் தூய நூல் சிறு காப்பியங்களுள் தலைசிறந்து விளங்குவதாகும். அந்நூலின் சொல்நோக்கும் பொருள்நோக்குந் தொடைநோக்கும் நடைநோக்குங் கற்றார்க்குக் கழிபேருவகை விளைக்கத்தக்கனவாம். ஆயினும், இந்நாள் தமிழ் மொழியுள்ள நிலையில் செய்யுளுருவத்தில் அந்நூலின் திறங் கண்டு மகிழ்வார் சிலரே ஆவர். ஆகலின், மாணவர் பலரும் மனமகிழ்ந்து கற்று முதனூலின் மாண்பினை ஒரு சிறிதுணர்ந்து, அந்நூலினைச் செய்யுள் வடிவிலேயே கற்றுக் கழிபேருவகையுற அவாவுமாறு நண்பர் செந்தமிழ் வாணர் திருவாளர் சக்கரவர்த்தி நயினாரவர்கள் தெள்ளிய மதுரஞ் சொட்டும் நற்கவிகளின் தீஞ்சுவை கெடாது அதனை இனியதும் எளியதுமான உரை நடையில் 'விசயதிவிட்டர்' எனும் பெயருடன் இயற்றி மாணவர் உலகிற்கு உதவி மகிழ்ந்தனர். ஆகலின், இந்நூல் மாணவர் பலரும் முன்னூல் கற்றற்கு அவாவைத் தூண்டும் வகையில் அமைந்துள்ளது.

ஆங்கில மொழியில் சீரிய கவிஞர்கள் தேடி வைத்த செம்பொருளாம் பழங்காவியங்களின் சுவையினை அனைவரும் உணர்தற் பொருட்டு அக்காவியங்கள் உரைநடையிலும் பல நல்லறிஞர்களால் எழுதப்பட்டுப் பெரிதும் பயனளித்து வருதலை உணர்ந்த தமிழ் மக்கள் அத்துறையில் முயன்று இனிதமைத்த இந்நூலினை மாணவர்க்கு உதவுமாறு செய்வதால், இந்நூலாசிரியர் இது போலும் நூல் பல இன்னம் எழுதுதற்கு இவரைத் தகு முறையில் ஊக்கியவர்கள் ஆவார்கள் என்பது ஒருதலை.

நாமகள் கழகம்,
புரசைப்பாக்கம்,
சென்னை, 2-6-31

தமிழ்ப் புலவர்,
மே. வீ. வேணுகோபாலப் பிள்ளை.

ஸ்ரீ

# விசயதிவிட்டர்

அல்லது

# சுரமை நாட்டுச் சூளாமணிகள்

---

## I

### விசயதிவிட்டர் குமாரகாலம்

பூமகளும் நாமகளும் பொருந்திப் புகழ்பரவிய இப் பரத கண்டத்திலே பூர்வம் எல்லா வளங்களும் பெற்று எழில் மிகுந்து விளங்கியது சுரமை நாடு அந்நாட்டிற்கோர் அணியாயிருந்தது அதன் தலைநகராகிய போதனமா நகரம் அந்நகரம் மாட மாளிகைகளின் எட்டத்தாலும், அணிபணி நிறைந்த கடை வீதிகளின் நெருக்கத்தாலும், அந்தணர் அரசர் வணிகர் சூத்திரர் என்னும் நால்வகை வருணத்தாரின் கூட்டத்தாலும், மக்கள் பெற்றுள்ள மாந்திப் பெருக்கத்தாலும் விண்ணவர் நகரத்தினும் விஞ்சி விளங்கியது

இத்தகைய நலம் பொருந்திய அழகிய நகரத்தைப் பயாபதி என்னும் அரசன் தன் அரசிருக்கையாகக் கொண்டு அந்நாட்டை நீதி வழுவாது ஆண்டுவந்தான் அவனது ஆட்சிக்குட்பட்ட அந்நாட்டுக் குடிமக்கள் அவலம் என்பதே அறியாது களி சிறந்து விளங்கினர் அரசனுக்கு இறை இறுத்தல் தத்தம் தரும நெறி

யென்க் குடிமக்கள் தாங்களே அரசனுக்கு ஆற்றலொரு கடமை செலுத்திவந்தனரே யன்றி, அரசன் அவர்களை வருத்தி இறை சிறிதும் வாங்கவில்லை. அதன் காரணம் பற்றியே அம்மன்னனுக்குப் பிரசாபதி யென்னும் பெயர் அமைந்தது போலும்! அப்பெயர் அவனுக்குப் பொருத்தமானதே.

அவன் இங்ஙனம் சிறப்புற்று வாழும் நாளில், அவனது தவப்பயனும், மனைவியர்கட்குச் சிறப்படையும் வண்ணம், தேவர்கள் வாழும் கற்பக லோகத்தை அரசாண்ட தேவர்களில் இருவர் அவனுக்கு மக்களாக அவதரித்தனர். அவருள் மூத்தவன் நிலா உமிழும் வெண்மதிக் கடவுளின் வண்ணமுடைய பலபத்திரனைப்போல விளங்கினன். இளையவனோ காயா மலர் போலும் நீல நிறத்துடன் கண்ணபிரானைப்போல விளங்கினன்.

தேவ அம்சத்திற் பிறந்த அக்குமாரர்களைக் கண்டு அரசன் அகமகிழ்ந்து, அந்தணர்க்கும் ஆதுலர்க்கும் அநேக தானங்கள் செய்து விழாக் கொண்டாடி, மூத்த புதல்வனுக்கு விசயன் என்றும், இளைய புத்திரனுக்குத் திவிட்டன் என்றும் நாமம் சூட்டினன். அப்புதல்வர்கள் நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமுமாக வளர்ந்து வித்தியாப்பியாசத்திற்குரிய பருவத்தை அடைந்ததும், அவர்களை அரசன் நல்லாசிரியர்பால் சேர்த்து, அரசகுமாரர்க்குரிய பல கலைகளையும் பயில்வித்தனன். அக்குமாரர்கள் ஆசிரியரிடம் கற்கவேண்டிய பல கலைகளையும் எளிதிற் கற்றுக் காளைப் பருவம் அடைந்தனர்.

அப்பருவத்தில் அவர்கள் தோற்றம் வேனிற் கடவுளையும் வெல்லும் தரத்தா யிருந்தது. அவர்களைக் கண்டு அரசன், "பெருமைவாய்ந்த அரிதாகிய அறிவறிந்த மக்கட் செல்வத்தின் யாம் பெற்றோம்!" என்று எண்ணி, ஆனந்த சாகரத்தில் அழுந்தித் திளைப்பானாயினன்.

இங்ஙனம் நிகழும் நாட்களில் ஒரு நாள், பயாபதி யரசன் துயிலுணர்ந்தெழுந்து, நித்திய கடவுள் வழிபாடியற்றிய பின்னிரு குமாரர்களும் அருகே வர, அரச பரிவாரத்துடன் ஆஸ்தான மண்டபத்தை அடைந்தான். ஆண்டடைந்த அரசன் தன் மந்திரி புரோகிதர்கள் அவரவர் ஆசனத்தில் அமரவும், அவர்களுக்கிடையே நடு நாயகமாய் அமைந்திருந்த அரியாசனத்தில் அமர்ந்தான். அவன் புத்திரர்களும் தந்தைக்கு அருகிலுள்ள ஆசனத்தில் அமர்ந்தார்கள். இவ்வாறு சிறக்க அமர்ந்ததும் அரசன் வாயில் காப்போனை நோக்கி, "ஏழு நாழிகை அளவும் நமது சபையை நாடி எத்தகையார் வரினும் அவரை உள்ளே வரவிடுவாய்" என்று கட்டளையிட்டுப் பாவலர் நாவலர்களுடைய இன்னுரையில் ஈடுபட்டிருந்தான்.

அப்பொழுது சோதிடக் கலை வல்லோனும், முக்காலச் செய்தியும் முறைப்படி உரைப்போனுமாகிய அங்கதன் என்னும் நிமித்திக னொருவன் அரசவை குறுகி, வாயில் காவலனைக் கண்டு, "அவனி காவலரை இதுபொழுது காணப்பெற இயலுமோ?" என்று கேட்க, கடை காவலன் அரசன் ஆணைப்படி அவனை உள்ளே செல்ல விடுத்தனன். நிமித்திகன், 'இஃதே ஒரு

நறசகுனம்' எனக கொணடு அரசவை புகுநது அரச னைக கணடு வணஙகினன அரசன அந்நிமித்திகனுககு ஓா ஆசனததைக குறிபபாற காட்டி அமாசு செயத னன நிமிததிகன அரசனை வாழததி ஆசனததில அமாநது, தான கறற சோதிட நூலின வலலமையைக காட்டச சமயம பாாததிருநதனன

தான கருதியவாறு நிமித்திகனுககுச சமயம வாயககவும, அவன மூனறு காலமும முழுதும ஆராய ந்து, அரசனை நோக்கி, "அரசா பெருமானே, சென்ற கஙகுற பொழுதில தாஙகளொரு கனவு கணடாகள அககனவில விசுமபினினறு ஆண யானை யொனறு இழிநதுவநது நஙகளது செலவமாய விளஙகும இளைய புகநிறைநிய கடலநிற வணணனுககு வெணதாமரை மாலை சூட்டிக தனனிட மடைநத தோறறததினைக கண டாகள அதன பயன யாதெனில, விசயாதர வேநத னொருவன தன அருநதவப புதலவியை ஈனறு அழைககுவநது தஙகள இளைய காளைககு மணஞ செயது கொடுததுப போவான எனபதேயாகும இதன உணமையை இனறு முதல ஏழு பகலுககுள தாஙகள அறிவீாகள விஞசையா தூதன ஒருவன இவவேழு பகல சென்றபின திருமுகம ஏநதிய கரததுடன தஙக ளது புடபமாகாணடம எனனும நநதன வனததில வநது தஙகுவான அதனைத தாஙகள கணடு தெளிக" எனறு கூறினன

சென்ற இரவில தான கணட கனவினைச சோதிட நூல வலலமையால கண்டு அதன பயனையும ஆராய்நது சொனனமைககு அரசன பெருவியபபடைநது, நிமிதது

னுக்கு அவன் மனம் மகிழுமாறு பொருளீந்து, அவனைக் கொண்டாடினன்.

அரச சபையிலுள்ளோரும் நிமித்திகனது சோதிடக் கலைவல்லமைக்கு வியப்படைந்து அரசனை நோக்கி, "அரசரே, நிமித்திகர் குறித்தபடி தங்கள் இளைய குமாரன் அத்தகையனே யாவன். அவன் இம்மூவுலகங்களையும் ஒரு குடைக்கீழாளுவன் என்பதற்கோர் ஐயமுமின்று" என்று போற்றினர். சபையிலுள்ளார் இவ்வாறு கூறிப் பேசத்தொடங்கி யிருக்கும்பொழுது நாழிகையைத் தெரிவிக்கும் நாழிகை முரசமொன்று அடிக்கப்பட்டது. அதைக் கேட்டதும் அரசன் நாழிகையின் அளவை யறிந்து, அவையிலுள்ளோர்க்குத் தத்தம் இருப்பிடஞ் செல்ல விடை கொடுத்தனுப்பிவிட்டுத் தன் அமாத்தியருடன் மந்திர சாலையை யடைந்தனன்.

ஆண்டு அடைந்த அரசன் அமைச்சரை நோக்கி, "அமாத்தியரே, இன்று நமது அவையில் நிமித்திகன் எனது கனவினால் விளையும் பயனை வகுத்துக் கூறியது நீவிர் யாவிரும் அறிவீரன்றோ? அது விஷயத்தில் உமது ஆராய்ச்சி எவ்வாறு இருக்கிறது? உரைப்பீர்" என்றனன். என்னலும், மந்திரிகள் மன்னனை நோக்கி, "மகாராசாவே, தங்கள் இளைய குமாரன் திவிட்டன் இப்பூவுலக முழுவதையும் ஒரு குடைக்கீழ் அடக்கி யாளுவானென்று அவன் பிறந்த அப்பொழுதே சோதிட நூல் வல்லார் சொல்லக் கேட்டிருக்கின்றோம். அதுவேயு மன்றி, நம் ஐயன் கரத்தில் சங்க ரேகையும் சக்கர ரேகையு முள்ளன. அதனால், அவன் சங்க பாணியனான திருமாலின் அம்சமாவான் சக்கரத்தை

யும் இனி ஏதாவான என்பதிற் சங்கையில்லை. நிமித்திகன் உரைத்தவாறே விஞ்சைய வேந்தன் தன் மகளைக் கூட்டி வந்து மணஞ் செய்து கொடுத்துச் செல்வானாயின் அதனினுஞ் சிறந்தது இவ்வையத்தி லொன்றுமில்லை. பார் வேந்தரும் நமது ஆட்சிக்கு அஞ்சித் தாமாகவே வந்து பணிவர். இப்பொழுது நிமித்திகன் உரைத்த பொழிலிடத்தே பளிக்கு மண்டப மொன்று இயற்றி அலங்கரித்து விஞ்சையர் தூதன் வரவை எதிர் நோக்கி யிருக்கத் தரும காந்தனை அப்பொழி லிடத்தே காவல் வைப்போம்'' என்று மொழிந்தனர். அரசனும், 'நல்லது அப்படியே செய்வோம்' என றிசைந்துகூறித் தருமகாந்தனுக்குப் புட்பமாகாண்டத்தி லிருக்க உத்தரவு கொடுத்து அந்தப்புரஞ் சென்றான்.

தருமகாந்தனும் மன்னன் ஆணைப்படி மணமலர் செறிந்த புட்பமா காண்டத்தை யடைந்து, இராப்பகல் இமை கொட்டாமல் விஞ்சையர் தூதன் வரவை எதிர் நோக்கிக் காத்துக்கொண் டிருந்தனன்.

II

## இரத நூபுரம்

விஞ்சையர் உலகெனப்படுவது மேருமலைச் சாரலிலே யுள்ள தொரு மலை. அது வெள்ளி மயமானது, எப்பொழுதும் சந்திரனைப் போன்று பிரகாசத்தை யுடையது, பாரதகண்டத்திலும் பரந்த இடத்தை யுடையது, கடலைத் தீண்டி மேலுயர்ந்து போய்க் கதிரவன் ஒளிப்பரப்புந் திக்கெல்லாம் விளங்கி நிற்பது. அதன் சிகரங்கள் மேக மண்டலத்தையும் ஊடுருவி நிற்கும். அம்மலையிடத்தே அமரருலகத்திலுள்ள கற்பகச்சோலைகளைப் போலப் பல்தருமலர்ச் சோலைகள் விளங்காநிற்கும். அம்மலையின் பல பாகங்களிலிருந்து இழிந்தோடிவரும் அருவிகளிலே வித்தியாதர மங்கையர் நீராடுவதனால் அந்நீர் எப்பொழுதும் மல்லிகையின் மணமே கமழ்ந்து கொண்டிருக்கும். அங்கு மலரும் மலர்களெல்லாம் பொற்றாமரையைப் போலக் கண் கவரத் தக்கனவா யிருக்கும்.

இத்தகைய நலன்களை யுடையதான மலையின் தென்றிசையிலே இரத நூபுரச் சக்கர வாளம் என்னும் பெரிய பொன்னகரமொன்றுண்டு. எல்லாச் சிறப்புக்களையும் பெற்று ஒப்புயர்வற்று விளங்கும் அந்நகரத்திற்கு அரசன் சுவலனசடி என்பவன். அவன் அறமே உருவாய் அவதரித்தவன். அவனது ஆட்சியின் சீர் மூவுலகும் கொண்டாடும் பான்மையுடையது. அத்தகையானுக்குப் பட்ட மகிஷி வாயு வேகை என்பாள். அவள் அரவிந்தச் செல்வியினும் அழகு வாய்ந்தவள்,

கலைகளினும் பொறுமையுடையவள், நற்குணங்களுக்கெல்லாம் உறைவிடமானவள். இத்தகையாளை வாழ்க்கைத் துணைவியாகப் பெற்று இறைவன் காலத்தை இனிதாகக் கழித்துவருகின்ற நாளிலே, இறைவி வாயுவேகை கருவுற்றுப் பத்தாவது திங்களிலே அருக்கக்கீர்த்தி என்னும் பாலனைப் பெற்றெடுத்தாள். அதன் பின்னர்ச் சில காலஞ் சென்று கற்பகவல்லிக்கொடி போன்ற பேரழகுடைய சுயம்பிரபை என்னும் சுந்தரியைப் பெற்றுள். அக்கன்னிகா ரத்தினம் பிறக்கப் பின்பு இறைவனுக்கு எண்ணில்லாச் செல்வங்கள் உண்டாயின, இருநிதி படைத்த இறைவரனைவரும் வந்து வணங்கும் பெருமையும் உண்டாயிற்று. பெண்களுலகத்திற்கும் அவளால் பெரும்பேர் பரவிற்று. அந்நாரி மணி பேதைப் பருவங் கடந்து பெதும்பைப் பருவத்தினை எய்திப் பின்பு மங்கைப் பருவத்தை யடைந்து மணி விளக்காய்த் திகழ்ந்தனள்.

அப்பொழுது வசந்த காலம் வந்தது. அதனை யறிந்த சுயம்பிரபையின் செவிலித்தாய் வசந்தமாதிலகை என்பாள் அரசனிடம் வந்து, 'பொழில் விளையாட்டை நினைவூட்ட வசந்த காலம் வந்தது!' என்றுரை சடியரசன் அது கேட்டு மனைவியையும் மக்களையும் மற்றுமுள்ள தோழியர் காப்பாளர் முதலியவர்களையும் சிவிகையின்மீதும் தேரின்மீதும் களிற்றின்மீதும் விமானங்களின்மீதும் ஏற்றிக்கொண்டு தன் நகரினின்றும் நீங்கி மநோ வனம் என்னும் சோலையைச் சார்ந்தனன்.

கோமான் அவ்வனத்தை யடைந்ததும் தன்னுடன் வந்த மகளிரொடு பொழில் விளையாடல் செய்து,

வனத்திலுள்ள அசோகந் தளிர்களைக் காட்டி, 'இவை கள் உங்கள் கைகளைப்போலும்' என்றும், 'குருக்கத்திக் கொடிகள் உங்கள் இடையை நிகர்க்கும்' என்றும், 'மாந்தளிர்கள் உங்கள் மேனியை மானும்' என்றும், 'முருக்கிதழ்கள் உங்கள் வாயைப் பகைக்கும்' என்றும், 'குயிலிசை உங்கள் வார்த்தைகளை இசையும், நீலோற்பலமும் செங்கழுநீரும் அரவிந்தமும் உங்கள் அழகிய கண்களை ஒக்கும்' என்றும் அவர்கள் மனமுவப்பப் பேசி அம்மனோ வனத்தின் சிறப்புக்களைக் கூறினன். சுபமிரையும் தன் தோழிமாருடன் புனல் விளையாடியும் பூக்கொய்தும் கண்ணி தொடுத்தும் புதுமையான விளையாடல்களைச் செய்து களி சிறந்த பின்பு தந்தைபால் வந்து சேர்ந்தனள். அரசன் அவர்களை யெல்லாம் உடன் கூட்டிக்கொண்டு அப்பொழிலின் நடுவிடத்தே யமைந்துள்ள அருக்கக் கடவுளின் பொற்கோயிலை யணுகி அதனை மும்முறை வலம் வந்து வாயிலில் வந்து நின்றுன் நிற்றலும், மாமணிகளால் இழைக்கப்பட்ட வாயிற் கபாடம் தானே திறப்புண்டது; பிறவிப் பிணி தீர்க்கும் பெருமான்றன் பிழம்பொளி காணப்பட்டது. உடனே காவலன் மெய்ம்மயிர் பொடிப்பக் கரமிரண்டும் சிரமேறக் குவிய, நாத்தழு தழுப்ப,

"அணியாதும் ஒளிதிகழும் ஆரணங்கு திருவூர்தி
கணியாது முழுதுணர்ந்த கடவுளென் றறையுமே,
கணியாது முழுதுணர்ந்த கடவுளென் றறைந்தாலும்,
அணிஞால முடையானை அறிவாரோ அரியரே!

"பகைகாறும் அயிற்படைகள் பயிலாத திருமூர்த்தி
இனைமாற வென்றுயாத இறைவனென நறையுமே,
இனைமாற வென்றுயாத இறைவனென நறைந்தாலும்,
அவனருளல் முடையானை அறிவாரோ அரியரே!

"திருமறுவு வலனணிந்து திகழ்கின்ற திருமூர்த்தி
ஒருமறுவும் இலையெனப் பொழியாம லுணர்ந்தனமே,
ஒருமறுவும் இலையெனப் பொழியாம லுணர்ந்தனினும்,
அருமறையை விரித்தானை அறிவாரோ அரியரே!"

என்று அருகக் கடவுளின் பெருங்கருணையையும் சீர்த்தியையும் கூறித் தோத்திரஞ் செய்தான்.

அரசன் இவ்வாறு ஏத்தி இறைவனது அடியீரிட்ட பூவினை முடியிற் சூடிக் கபாடம் பக்கனஞ் செய்து கோயிலின் முன் வாயிலண்டை வந்தனன். அப்பொழுது நிகம்பாராகிய இரு சாரணர் விண்ணினின்றும் இழிந்து பண்ணவன் கோயிலை வலம் வந்து,

"விரைமணந்த தாமரைமேல் விண்வணங்கச் சென்றருய
உரையணங்கி யாம்பரவ வுளமகிழ்வா யல்லை,
உளமகிழ்வா யல்லையெனினும், உலகெல்லாம்
களமகிழ நின்றுயக்கட் காதலொழியோமே!

"முருகணங்கு தாமரையின் பொய்யமலர்மேற் சென்றருய
அருகணங்கி யேத்தி யாமகிழ்வா யல்லை,
அதுமகிழ்வா யல்லையெனினும், பெயராக்
கதிமகிழ நின்றுயக்கட் காத லொழியோமே!

"மணமயங்கு தாமரைமேல் வானவணங்கச் சென்றருய
குணமயங்கி யாம்பரவக் கொண்டுவப்பா யல்லை,
கொண்டுவப்பா யல்லையெனினும் குளிர்ந்துலகம்
கண்டுவப்ப நின்றுயக்கட் காத லொழியோமே!"

என்று அருகக் கடவுளை வாயார வாழ்த்தி வணங்கி னார். அதன் பின்னர் அவர்கள் அக்கோயிலின் அணித்தாயுள்ள அசோக மரத்தடியின்கீழ்ப் பொருந்தி யிருக்குமொரு சிலாதலமிசை ஏறி அமர்ந்திருந்தார்கள். சடியரசன் இதனைக் கண்ணுற்றுப் பய பக்தியுடன் சாரண முனிவர்கள் சமுகஞ் சேர்ந்து அவர்களது அடியின்மீது தனது முடியை வைத்து வணங்கி நின்ற னன். சாரணர்கள் அரசனுடைய விநய வணக்கத் திற்கு மனமகிழ்ந்து ஆசிகூறி இருக்கவென்று கையமர்த் தினார்கள். அரசன் தன் மக்களிருடன் அமர்ந்து முனி வருட் பெரியாரிருவருடைய முகத்தை ஏறிட்டுப் பார்த்து மீட்டும் வணங்கி, 'அடியேன் அறிய விரும்பு வது ஒன்று உண்டு' என்று தனது மனோபீஷ்டத் தைக் குறிப்பிட்டனன். சாரணர் அவன் மன விருப் பத்தை ஞானக் கண்ணாலுணர்ந்து, அவனை நோக்கி, "அரசே, நினது விருப்பம், 'தீவினையாகிய பிறவிப் பகையை ஒழிப்பதற்கான உபாயத்தைக் கூறும் இனிய உரையை எனக்கு உபதேசியுங்கள்' என்பதேயாம்" என்றனர். அரசன் தனது மன விருப்பத்தைச் சாரணர் ஓர்ந்து உணர்ந்து உரைத்தமைக்கு மிக மகிழ்ந்து சிரமேற் கை கூப்பி, 'அதுவே எனது விருப்பம்!' என்றனன்.

என்றும், சாரணர் வினையினது திறத்தையும் கூறுபாட்டையும் விளக்கமாக எடுத்துக் கூறி, அத னை நீக்கும் வாயில் வாலறிவன் நற்றாள் தியானமே யன்றி வேறின்று என்று போதித்தார். அவரது விழுமிய போதனையினால் இறைவன் ஞானம் அடைந்து தெளிந்தனன். அவனது மனைவியும் அறிவுடைய ளாயினள். அப்பொழுது சாரணர்களுடைய அறவுரை

யைக் கேட்டு அகமகிழ்ந்திருந்த சுயம்பிரபையும் மனம் நெகிழ்ந்து, அவர்கள் முன்னிலையிலேயே சக்கர வாளம் என்னும் அரிய நோன்பொன்றினை நோற்கச் சங்கற்பித்தக்கால் இதனின் சகந்தனர், அபிநந் தனர் என்னும் இயற்பெயருடைய சாரணர் இருவரும் அரசனை ஆசிரவதித்து விசும்பின் வழியாகச் சென்ற னர் அரசனும் அப்பெரியோர்களை வணங்கி அருகக் கடவுளின் ஆலயத்தை வலங்கொண்டு தன் பரிவாரங் களுடன் நகர மடைந்தான்

யாவரும் நகரமடைந்தபின் சுயம்பிரபை முன்னர்ச் சாரணர் முன்னிலையில் சங்கற்பித்துக் கொண்டபடி சக் கரவாள மென்னும் உயர்ந்த நோன்பினை அனுட்டித்து முடித்து, 'மூவுலகிலும் இப்பெண் திருவிற்கு இணை யில்லை!' என்னும்படி பேரழகும் பெரும் கீர்த்தியும் அடைந்து, தான் நோன்பு பெற்ற அவ்விடத்திற்றானே அருகக் கடவுளுக்கு ஆலயம் அமைத்து அவரை வழி பட்டு, அன்பு கசிய, ஆனந்தக் கண்ணீர் வழிய நின்று,

"ஆதியங் கடவுளை அருமறை பயந்தனைப்
போதியங் கிழவனைப் பூமிசை யொதுங்கினை
போதியங் கிழவனைப் பூமிசை யொதுங்கிய
சேதியஞ் செல்வ!நின் திருவடி வணங்கினம்!

"காமனைக் கடந்தனை காலனைக் காய்ந்தனை
தேமலர் மாரியைத் திருமறு மார்பனை
தேமலர் மாரியைத் திருமறு மார்பனே
மாமலர் வண்ண! நின் மலரடி வணங்கினம்!

"ஆரருள் பயந்தனை ஆழ்துயர் அவித்தனை
ஒரு வாழியை யுலகுடை யொருவனை

ஒரு வாழியை யுலகுடை யொருவனே
சீருண மொழியினை இருவடி தொழுதனம்!"

என்று துதி கூறி நின்றனள். அதன் பின் அவள் ஆதியங்கடவுள் அடிகளிற் பூசித்த சேடத்தினைச் சிரமேற் றாங்கிக்கொண்டு தந்தை சமூகஞ் சென்று கொடுத்து வணங்கினள். வணங்கிய மகளை மன்னவன் வாரி எடுத்து உச்சி மோந்து, "பெண்ணருங்கலமே, நீ பிறந்த பின்னாகான் என் அரசும் குடியும் விளக்க முற்றன. வெவ்விய பகைவரும் மற்றும் வேந்தரும் என் அருளுக்கு எதிர் நோக்குகின்றனர். உன்னால் யானடையும் பெருமை அளவிட்டு உரைக்கற் பாலதோ!" என்று புகழ்ந்து கூறிப் பாராட்டிப் பின்பு அவளை நோக்கி, "என் கண் மணியே, நீ பன்னாளாய் உணவின்றி நோன்பெற்றித் தேகம் மெலிந்திருக்கின் றாய். நீ இப்பொழுது தாயகம் சென்று *பாரணை பண்ணு வாய்" என்று பரிந்துரைத்து அந்தப்புரஞ் செல்ல விடுத்தனன்.

அங்ஙன மனுப்பியபின் அரசன் தன் மகளின் நற் குண நற்செய்கைகளையும் எழிலையும் நோக்கி,

"மண்ணருங் கலமெலாம் வலியின் வவ்வினும்
விண்ணருங் கலமெலாம் விதியின் எய்தினும்
பெண்ணருங் கலமிது பெறுதல் யாவுடாக
கெண்ணருந் தகைத்தென இதயத் தெண்ணினன்."

அவ்வாறெண்ணிய அரசன் தன் மகள் விவா கத்திற்குரிய பருவ மடைந்திருப்பதை யுன்னி மணஞ் செய்யுங் கவலையை மேற்கொண்டான். ‘விசுதியாக

*பாரணை—உபவாசமிருந்து உண்ணல், to break one's fast.

வுலகிலுள்ள கொல்குடி அரசர்களில் எவனிட்டுல் யப் பெண்மணிக்கு உகந்தவன்?" என்பதைக்குறித்து ஆழ்ந்து ஆலோசிக்கலாயினன். அய்யனம் அவன் விதர்ப்பா தர வுலகிலுள்ள அரச புத்திரர்களை யெல்லாம் சிந்தைக்குக் கொண்டுவந்து ஆராய்கின்றபோது ஒருவனேனும் தன் மகட்கியைந்த இலக்கணமுடையோனாகக் காணப்பட வில்லை. அரசன் தன் புத்திரி விஷயத்தில் இத்துணைக் கவலை கொள்ள வேண்டியது எதற்கெனில், புத்திரியின் வாழ்நாள் இனிது கழிதற்பொருட்டே. தாய்தந்தையர் இது காரியத்தில் ஆராயாது விளையாட்டுப்போலச் செய்வார்களாயின், அது பின்பு வினையாக வந்து முடியும். பெண்களின் பிற்கால வாழ்வு முழுவதும் பெற்றோர் கையிலடங்கியிருக்கின்றமையினாலே, அவர்கள் பெண்ணின் நலத்தைக் குறித்து மிகவும் ஆலோசித்துச் செய்ய வேண்டுவது அவசியமே. பெற்றோர் தாம் பெண்ணுக்குப் பிரியமில்லாத ஒரு பேதையை மணவாளனாக்கினும் அப்பெண் தனது விருப்பமின்மையைக் குறித்துத் தன் நொந்த நெஞ்சில் புழுங்கி யழுவாளே யன்றி, 'இவன் எனக்கு வேண்டாம்' என்று வெளிப்படச் சொல்லாள். பொன்னின் நடுவே பதித்தற்குரிய மாணிக்கத்தைச் சிறுபிலக்காயத்தின் மத்தியிற் பதித்தாலும் அது மதிக்கத்தகாத பொருந்தியிருப்பினும் அதன் எழில் குன்றிக் கிடக்குமன்றோ? பதிப்போர் அதனைக் குறிக்கொண்டு பதித்தால் அஃது எவ்வளவு எழிலுடன் விளங்கும்! அதுபோலவே பெற்றோரும் தங்கள் மகட்கேற்ற மணமகனையே நாடி மணஞ்செய்தால் அக்குடும்பம் சிறப்புற்று வாழுமல்லவா? இதையே சடையரசன் பலகாலும் உன்னி, "இத்தகைய காரியத்தை அறிவுடையோர்பால் ஆராய்ந்தே செய்ய வேண்டும்,

'அசதணா ஒழுககமும அரசா வாழககையும
மாதிர மிலலையேன மலரு மாணபில'

ஆதலின், நம மநதிரிகளுடன இதை ஆலோசிககுதலே அமைவுடைததாகும்'' என்று தனககுள தீாமானிக துககொணடு ஏவலாளாகளை விளிதது, ''மநதிரிகளை மந திர சாலைககு அழைதது வருக'' எனக கடடளை யிடட னன ஏவலாளா அஙஙனமே சொல ஏா உழவரிடஞ சென்று அரசன ஆணையைத தெரிவிததனா

## III

## மந்திர சாலை

அரசன் ஆணைப்படி அமைச்சர் யாவரும் மந்திர சாலையை அடைந்து அரசனை வணங்கித் தத்தம் ஆசனத்தில் அமர்ந்தனர். அரசன் அவர்களை நோக்கி, "அறிவின் மிக்க அமைச்சர்காள், நிலவுலகத்தைப் புரக்கும் திருப்பார் புண்ணியராயினும், நுண்ணறிவுடைய நூலோர் பொருளுணர்த்தினலல்லது தாமே அறியும் ஆற்றலுடையரல்லர். அவர் தாணையின்றிச் செய்யும் சூழ்ச்சியும் அவர்களுக்கு இல்லை. எத்துணைச் சிறப்புடைய மன்னராயினும், அவர்க்குப் பழி பாவம் வாராமற் காத்து நல்வழிப் படுத்துவோர் நூல்களைக் கற்று ஆராய்ந்தறிந்த அமைச்சரேயாவர். அவர்கள் மணி முடி கவித்த மன்னருக்கு மனமும் கண்ணும் வாழ்க்கையும் வலியும் சால்பும் அற்றமில் அரசும் கோலும் ஆவர்கள். அரசு என்னும் சகடத்திலுள்ள அந்தக்கடியை அரசன் என்பவன் ஒருவனே தாங்கி இழுக்கின் அது நடவாது. ஒரு பக்கம் மன்னனும் மற்றொரு பக்கம் அவன் மந்திரிகளும் தாங்கி இழுக்கிற்றான் அரசசகடம் இயங்கும். அரசன் எப்பொழுதும் அமைச்சர் சொல் வழி நடக்க வேண்டும். அத்தகையாரை அமைச்சர்கள் நல் வழியில் ஊக்கக் கடமை பூணுவார்கள். அரசன் எக்காரியம் செய்யினும் அதை அமைச்சரிடம் உசாவியே செய்தல் வேண்டும்.

'செறிந்தவர் தெளிந்த நூலார் சிறந்தவை
தெரிந்து சொன்னால்
அறிந்தவை யமைத்துச் செய்யும் அமைதியான்
அரச னாவான்,
செறிந்தவர் தெளிந்த நூலார் சிறந்தவை
தெரிந்து கூறி
அறிந்தவை யியற்றுந் திறத்தும் அமைதியார்
அமைச்ச ராவார்'

ஆதலின், நான் உங்களோடாராய்ந்து ஒரு காரியமும் செய்த தில்லாது அரசனா யுலகத்தை நன்னடைப் படுத்தி ஆளுதற்குக் கோலவலியுஞ் சூழ்ச்சியும் வேண்டும். கோலவலி அரசனுக்கு அழகு செய்வதாயினும் அதனினுஞ் சூழ்ச்சியே சிறந்தது. கோலவலியில்லாத பெண்டிருஞ் சூழ்ச்சியுடையாராதலின் அவர்களும் அரசியராவார்கள். அரசனுக்குப் பொருந்தியுள்ள ஆற்றலைவிடச் சூழ்ச்சியே சிறந்ததாகலின், அக்கோலுடைய அமைச்சர் வழிச் செல்லும் அரசனே பேராற்றலுடையவனாவான். அவனுக்கு அரிது இவ்வுலகத்தி லொன்றுமில்லை. சூழ்ச்சியுடைச் சிறந்த அமைச்சரோடு அரசன் ஆராயாது ஒருகாரியஞ் செய்யப் புகின், மந்திரத்தாற் கட்டுண்ட நாகம் மந்திரம் உச்சரிப்போனது வழுவால் கட்டைவிட்டு அவனுக்கே தீங்கு புரிவதற் கெழுந்தது போலாகும். சூழ்ச்சி யொன்றானே இவ்வுலகத்தை அடிப்படுத்தும் ஆற்றலுடைய அமைச்சர்களே, உங்களிடம் நான் பல சொல்லி ஆவதென்னை? நீங்கள் என்னை இறைவனாக்கி இம்மை பக்கமும் காத்துவருதலா லன்றோ நான் இத்துணைச் சிறப்புடையவனா யிருக்கின்றேன்! இது நிற்க.

இப்பொழுது உங்களை நான் இங்கு வரவழைத்ததற்குக் காரணம் ஒரு முக்கிய விடயத்தைக் குறித்து

ஆலோசிக்க வேண்டுவதேயாகும். அஃதின்றெனில், குன்றின்மேலிட்ட தீபம்போல் எமது குடியை விளக்க வந்த புத்திரி சயம்பிரபையின் எழிலுக்கும் குணத்துக்கும் தக்க கொழுநன் எங்குளான் என்பதை ஆராய்தலே ஆதலின், நீங்கள் நம் பெண்மணிக்கு உகந்த மணாளன் மன்னர் குமாரருள் எவனிருக்கின்றானென்பதை ஆராய்ந்து எனக்கு அறிவிப்பீர்களாக'' என்றனன்.

அரசன் அங்ஙனம் கூறவும், அமைச்சர்கள் அரசனை நோக்கி, "அரசரே, உமது கோத்திரம் இவ்வுலகத்தில் நீடூழி நிலவுக" என்று வாழ்த்துக் கூறி, அரசன் மொழிந்த விடயத்தைக் குறித்து ஆராயத் தொடங்கினார்கள். அவர்களுள் நூல் பலவாராய்ந்து தணிந்த அறிவுடைய சச்சுதன் என்னும் பெரிய மந்திரி சொல்வானாயினன்:

"ஐயரே, சூரிய காந்தக் கல் சூரிய ஒளியால் அனலைக் கக்கும், சந்திர காந்தக் கல் சந்திர ஒளியால் தண்ணீரைக் கக்கும், அவைபோலவே நாங்களும் உமது சன்னிதியில் சிறப்படைகின்றோம். அரசனிடத்தி லெவர்களாலாவது ஒன்றுமில்லையாகேயின்று தப்பால் உராயப்பட்ட சந்தன மரம் வாசனை மிகுதல்போல, புண்ணியம் வாய்ந்த அரசர்கள் கவிழ்வார்முய அமைச்சர் முதலாயினோரை ஆதரிப்பதனாலன்றோ அவர்கட்குப் புகழும் அவனியோர் வணங்கும் பெருமையும் உண்டாகின்றன? அலை கடல் சுடுவதாயின் அதனை ஆற்றுநீர் வேறுண்டோ? அஃதேபோல, செங்கோல் மன்னன் கொடுங்கோலனாயின் அவனுக்கெதிர் மாற்றம் புகன்று அவனை யடக்குவாருண்டோ? அன்றேல்

உலகம் வெறுமபும் அவனுடைக்கு உட்பட்டோர், "கொடுங்கோல் மன்னன் வாழும் நாட்டிற் கடும்புலி வாழுங் காடு நன்றே" எனக் கூறி யகல்வர் உலகத்தார் பார சுருங்களில் இங்ஙனம் வண்ணம் காப்பவன் அரசன் அவனடி நிழலாற் உலகத்தாரைக்குப் புக விடம் வேறில்லை உலகத்தாருக்குக் கண்கள் மூன்றுண்டும் அவற்றில் ஒன்று சூரியன், ஒன்று கலவி, ஒன்று காவலன் இம்மூன்றில் ஒன்றில்லையாயினும் உலகம் நடவாது அரசன் கல்வியறிவோடு கூடி விளங்குவானால் அவன் உலகத்தார்க்கு இரண்டு கண்க வாகின்றான் அப்பொழுது ஆதித்தனிலும் அரசனே உலகத்தார்க்கு அதிகப்பட்டவ னாகின்றான் உலகத்திலே அரியவையெனப்படுபவை இரண்டு உண்டு அவை ஐம்பொறியடக்கித் தவம் புரிதலும், அவனியை வணங்கி அரசு புரிதலுமாம் அவை யிரண்டும் தத்தம் செய்கையினினாலும் பிழையாயின் பெருந்துன்பத்தை விளைக்கும் ஆதலால், அரச பாரம் தாங்குதல் அரிது அப்பாரத்தைத் தாங்கும் அரசரை ஒப்பார் இவ்வுலகில் ஒருவரும் இலர் அரசர்க்குக் கூறும் இலக்கணங்களெல்லாம் ஒருங்கே அமையப் பெற்று அவனியைத் அரசு ஆற்றியே, உம் முன்னிலையில் யாம் உலக நீதிகளை எடுத்துப் பேசுதல் பல்நூல்களைக் கற்றுத் தெளிந்த புலவர் முன்னே புன்மொழி புகலுவோன் செய்கை போலும் உமது திருக்குலம் விளக்க வந்த புத்திரி இரத்தினத்திற் கேற்ற மணமகனை ஆராயத் தலைக்கின்றேன், கேட்டருள்வீராக

"இந்த விந்தியாத்ரி வலசிலே உத்தரசேடியிலே இரத்தின பல்லவம் என்னுமொரு நகருளது அந

நகரத்தை ஆட்சிபுரிந்த மயூரகண்டன் தேவி நீலாங்கனை பெற்ற புதல்வன் அச்சுவக்கிரீவன் என்பான் அவன் தக்க சுற்றத்தாராலும், குலத்தின் பெருமையாலும், கற்றுள்ள வித்தையின் திறத்தாலும், கருதிய காரியத்தை முடிக்கும் ஆற்றலாலும், இவ்வுலக முழுவதையும் கண்டிப் படுத்தித் தனக் கொப்பாரின்றி விளங்குகின்றான். அவனுக்கு அறக் கடவுளும் அஞ்சும் திறத்தாராகிய நீலரதன், நீலகண்டன், வச்சிரகண்டன், சுகண்டன் என்னும் தம்பியர் நால்வ ரிருக்கின்றனர். அவரன்றி, வரும் பொருளுரைக்கும் நுண்ணறிவு படைத்த அரிமஞ்சு என்பான் அவனுக்கு அமைச்சனாயமர்ந்துள்ளான் இன்னும், மூன்று காலத்தின் செய்திகளையும் முட்டின்றி உரைக்க வல்ல நிமித்திகன் சதவிந்து என்பானும் அவன் வசமிருக்கின்றான் அவன் இவர்களைத் துணையாகக் கொண்டு ஏக சக்ராதிபத்தியம் செலுத்தாநின்றமையின் விஞ்சையருலகமிருந்துள்ள அரசரெல்லோரும் அவனுக்குத் திறை செலுத்திவருகின்றனர் நம் பெண் மணி பிறந்த பின்பு தான் அவன் நம்மிடம் பொன், மணி முதலிய திறைப் பொருள்களை வாங்காதொழிந்தனன் அதன் காரணமுணர்ந்தோர்க்குத் தெரிந்ததே ஆகலால், நம் மகளை சுயம்பிரபையை அவனுக்கே அளித்தல் நன்று. அதனால், நம்மை இவ்வித்தியாதர வுலகங் கண்டு அஞ்சும் இல்லையேல், அவன் நம்மைக் கோபிப்பான் அவனது கோபத்திற்கு நாம் ஆளாவது உறுதியற்ற செயலாகும் இவற்றை யெல்லாம் ஆலோசித்துப் பார்க்கின்ற அளவில் அவனுக்கே நம் புத்திரியை மணஞ்செய்து கொடுக்கல் நலமெனத் தோன்றுகின்றது. இஃது என்ற அபிப்பிராயம் குற்றமுள்ளதேல் பொறுத்தருளாய்'' என்றனன்.

இங்ஙனம் சச்சுதன் கூறப் பவச்சுதன் என்னும் மற்றொரு மந்திரி அரசனை நோக்கி, "அரசே, பல கலைகளை ஆராய்ந்து அவற்றின் நுண் பொருள்களைக் கண்டு கூற வல்லானும், காரியாகாரியங்களைச் சீர் தூக்கி ஆராய்ந்து உரைக்க வல்லானுமாகிய மதி மந்திரி சச்சுதன் உரைத்தவை யாவும் உண்மையே. ஆயினும், அவ்வச்சுவகண்டனிடம் யானொரு குற்றங் கண்டிருக்கின்றேன். அதனைக் கூறாமன்றேன் யாவர் மறுக்கினும் நான் அதற்கு உடன்படேன். அக்குற்றம் யாதெனின், அவனுக்கு வயது ஊழிக் காலம் கடந்துவிட்டதேயாம். இஃதொரு பெருங்குற்றம். அவனுக்கு ஐந்நூற்றுவர் புதல்வர் பிறந்திருக்கின்றனர். அவருள் மூத்த குமாரனை இரத்தின சண்டன் என்பான் இளவரசுப் பட்டம் பெற்று அரசர் எவரும் அஞ்ச வாழ்கின்றான். அச்சுவகண்டனுக்குப் பின் அவனுடைய மூத்த குமாரனை இரத்தினகண்டனே அரசாட்சிக்கு உரியவனாவான். நம் நங்கைக்குச் சாதகம் கணித்தவர்கள் அவள் ஓர் அரசிளங் குமாரனுக்குப் பட்டத்துத் தேவி யாவாளென்றும், அவள் வயிற்றில் பிறக்கும் சேய் உலகெல்லாம் வணங்க ஒரு குடைக்கீழிருந்து அரசாளுவனென்றும் கூறியிருக்கின்றார்கள். ஆதலின், நம் பெண் மணி அவ்வச்சுவகண்டனுக்கு உரியளல்லள்" என்றான். அரசன் அது கேட்டு, பவச்சுதனை நோக்கி, "உனது கருத்து அங்ஙனமாயின் நம் நங்கைக்கேற்ற நாயகன் வேறு யாவனுளன்?" என்று வினவினன்.

அதற்கு அவன் அரசனைப் பார்த்து, "அரசே, இம் மலைக்கு மேற்பக்கத்திலுள்ள கின்னர கீதத்தை

கையுடன் அரசனை வணங்கி, 'இதுவே தகுதி' என்றனர். அப்பொழுது சுதசாகரன் என்னும் பெயரிய நூல் வல்லோன் அரசனை வணங்கி உரைப்பானாயினன்.

"வேந்தே, இப்பொழுது பவசுதன் அரசவைக் கண் உன்முன் கூறிய குற்றங்கள் யாவும் உண்மையே ஆயினும், அவனுக்கு விரோதமாக அனங்கசுந்தரனை மணம் முடிக்க வல்லான் ஒருவனுமில்லை. அங்ஙனம் முடித்தால் அவன் பகை நமக்கும் வந்து சேரும். அது கூடாது. அவனுக்கு மாறாக மணம் முடிக்க வேண்டின், இவ்வுலகத்தை யெல்லாம் ஒரு குடை நிழற்கீழ்ப் புரக்கும் சுரேந்திரகாந்த மன்னன், மற்றையாரினும் வலியன், மேகவாகனனென்றொருவனுளன். அவனுடைய தேவி மேகமாலினி என்பாள். அவர்க்கு அருந்தவத்தால் இப்பாரிடம் அடிமையாக்கிக்கொள்ள வல்ல விசுவன் என்னும் காளை அவதரித்திருக்கின்றான். அவன் தேவருலகை யாண்டு மண்ணுலகத்தோர்க்கு உய்யும் வழியைக் காட்டத் தோன்றியவன். அவன் பிறந்தபின் இவ்வையகம் துன்பம் நீங்கி இன்பத்தை யடைந்திருக்கின்றது. அவனுக்கு மாற்றார் எவருமிலர். அவனை நயந்து வல்லிக்கொடி போல்வாள் சுயம்பிரபை யென்பாளாயினள், மாலைப் பொழுதில் தோன்றும் மதியமும் ஞாயிறும் போல அவர் விளங்குவர். அவனுக்கு ஜோதிமாலை என்னும் பெயரிய தங்கை உண்டு. அவள் நற்குணங்களெல்லாம் உறைவிடமானவள். பொறையில் பூமகளை நிகர்ப்பவள், புத்தியில் கலைமகளை ஒப்பவள். அப்பெண் திருவை உம் புதல்வர் ஏதினம் அருக்ககீர்த்திக்கும், சுயம்பிரபையின் அவ்விசு

வணுக்கும் மணஞ் செய்தலே சாலச் சிறந்ததாகும்" என்று சாற்றினன் அவனைக் கையமைத்து, அரசன் தோழரில் ஒருவனான சுமந்திரி என்பான் சொல்லத் தொடங்கினன்

"மன்னரே, அச்சுவ கண்டன் வயது சென்றவனாதலின், அவன் மனத்தாலும் மணவினையைக்குறித்து எண்ணுதல் தகாது, மணஞ் செய்தலுங் கரும மன்று மங்கை சுயம்பிரபைக்கும் அது பெருமையைத் தாராது. மற்றை யரசர்களோ வெனின், அவர்களெல்லாம் அச்சுவ கண்டனுக்கு அடங்கியவர்கள் அவனை விரோதித்துக்கொண்டு இம் மங்கையை மணக்கும் ஆற்றல் அவர்களில் எவருக்குமில்லை எழில் மிகுந்த சுயம்பிரபையை எவ்வரசனுக்கேனும் மணம்புரியா திருப்பதும் மாண்புடைத்தன்று சக்கரன் எடுத்துக் கூறிய சுரேந்திரகாந்தத்து அரசன் குமாரன் விசுவன் என்றுக் கூறிய அரசிறும் போரட்டவ னென்ப தலைமையே. ஆயினும், அவனினும் அறிவையா இலம்பலன் ஒரு பொருட் படுத்தாவன், காமக்க காயங்க அருகக் கடவுளின் தன்மையன், உலக வாழ்வை வெறுத்து, உம்பர் போற்றும் அருகன் தியானமே அகத்திலிருத்து பவன் அவன் பிதா அவலத்து ஒயல எத்தகைய தென அறியவேண்டிச் சித்திர கூடத்திலுள்ள அருகக் கடவு ளாலயத்துக்குச் சென்று பூசனை செய்து, ஆண்டு ஓர் பக்கத்தில் வீற்றிருக்கும் மும்காலமு முணரும் ஞானியாராகிய அசோதர முனிவரை வணங்கி, தன் மகனுக்கு இனி நிகழப்போவதைனை அறிந்து உரைக்க வேண்டுமென வினயத்துடன் கேட்டனன்.

"அம்முனிவர் அரசனை நோக்கி, 'சுமேந்திர காந்த மன்ன, நீர் வளம், நில வளம் முதலிய பல வளங்களும் பெற்றுயர்ந்த பல கிரியை யாண்டவன் சய சேனன் அவனுக்குத் தேவி பிரீதிமதி அத்தேவி பெற்ற பிள்ளை விசய பத்திரன் என்பான் மதம் பொருந்திய யானையினும் மிக்க வலியன் அவன் அரசு வாழ்வைப் பொருள் படுத்தாது நீத்துத் தவங் கிடந்து, பின்பு அத் தவப் பயனால் இந்திர லோகத்தை யடைந்து, அவ்வுலகத்தைப் பதினேழு கடற்றிருகை வருட மளவும் அரசாண்டுவந்தவன் அவனே இப்பொழுது உமக்கு மகனாகிய விசுவ கண்டன் என்னும் அரசிளங் கோவா யவதரித்துள்ளான்

" 'விண்ணுலகத்திலே அமரர் போகம் நுகர்ந்த அவன் இம்மண்ணுலகத்திலே பொருந்திய அரசர் போகத்தை விரும்பான், தவஞ் செய்து சிவகதி யடையவே சிந்தை செய்வான்' என யாம் அம்முனிவர் கூறக் கேட்டிருக்கின்றோம் ஆதலால், அவன் நம் கங்கைக்கு நாயகன் ஆகற்பாலனல்லன் அவனும் நம் மகட்கொடையை ஏலான் இனி இவற்றையெல்லாம் விட்டு, முரசு வாத்தியங்கள் முழங்க, முடி மன்னர் குழாங்கள் நெருங்கச் சுயம்வர மொன்றினை ஏற்பாடு செய்யினும், வயோதிகனான அவ்வசுவ கண்டனே மணம் புரியத் துணிவான் மற்ற மன்னரெவரும் அவனுக்கு மாறாய் மணம் புரியத் துணியார்

"நாம் செய்யும் செய்கை இவ்வாறாகுமென்பதை யறிதற்பாலம் அல்லேம் நாம் ஒன்று நினைக்கத் தெய்வம் ஒன்று நினைத்தது என்னும்படி நாம் கருதிச் செய்யும்

காரியம் வேறியாதிருப்பினும் தெரியும். ஆதலால், நாம் எதனையும் செய்வதற்கில்லை. ஆயினும், நம் குலத்தாராக கொல்லா முன்னாள் தொடங்கி இந்நாள்காறும் மேல் வருவனவற்றை முன் ஆய்ந்து கூறும் சதவிந்து என ஓர் நிமித்திகன் ஒருவனுளன். அவனிடம் சென்று நம் நங்கைக்கேற்ற நாயகன் எங்குள்ளன் என்பதையும், அந்நங்கையின் திருமணம் எவ்வாறு நிறைவேறுமென் பதையும் பற்றி விசாரித்தால், மணமகன் இங்குள்ளன் என்பதையும், இத்திருமணம் இவ்வாறு நிறைவேறு மென்பதையும் அவன் ஆராய்ந்து திட்டமாய்க் கூறுவன். அதன் பிறகு நாம் மேல் நடக்கும் காரியங்களைக் குறித்து ஆலோசிப்போம்" என்றனர். ஏனைய மந்திரிகளும் இதுவே செய்யத்தக்கதென ஒரே முகமாய்க் கூறப் பின்பு அரசனை நோக்கி,

"ஏந்திரவனைய நீரோய், இனிப்பிறி தெண்ணல் வேண்டா,
மந்திரத்தொரு மாயின், வருவன அறியலாகா"

ஆகலின், நாங்கள் அரண்மனைக் கெழுந்தருளிச் சதவிந்து நிமித்திகனிடம் செல்லச் சமயம் பார்ப்பதே அமைவுடைத்தாகும்" என்றனர். அரசன் அவர்கட் கெல்லாம் தகும் இருப்பிடஞ் செல்லச் செல்வு கொடுத்துத் தான் அரண்மனை யடைந்தான்.

அப்பொழுது சூரியன் உச்சியிலிருந்தான். அரசன் மத்தியானக் கடனை முடித்து, உணவருந்திச் சிறிது இளைப்பாறியிருந்தனன். அது பொழுது நாழிகையைத் தெரிவிக்கும் முரசம் அடிக்கப்பட்டது. மன்னன் நாழிகை கழிவதை யுணர்ந்து, சதவிந்து நிமித்திகன் வீட்டிற் செல்ல நன்முகூர்த்தம் பார்த்து, ஆடையாபரணாலங்கிருதனாகிப் புறப்பட்டனன். அவனைச

ஞ்சூழ்ந்த வாளையும் தடியையும் கையிற் றாங்கிய மெய்
காப்பாளர் போயினர். அவனது உறுதிச் சுற்றத்
தாரும் அவனைப் பின் தொடர்ந்து சென்றனர். அரசன்
கம்பீரக் கோலத்துடன் சத்திரத்தின் மாளிகையை
நெருங்கினன். சத்திரத் தலைவன் நோக்கி அரசன் வரு
வதை உணர்ந்து எதிர் சென்று வணங்கி அழைத்து,
“எங்குலம் விளங்க இங்கு அருளின் வந்த எம்பெரு
மானே, உமக்கு எப்பொழுதும் வெற்றியாக கடவது!”
என வாழ்த்துக் கூறித் தன் மனையிலுள்ள அலங்கார
கூடத்தில் பீடம் அமைத்து அமரச் செய்தனன். அப்
பொழுது அவன் பக்கலிருந்தோர் அரசன் குறிப்
பறிந்து அப்புறம் சென்றனர். சித்திரிகன் அரசன்
தன்னை நாடி வந்த காரணத்தைச் சோதிட நூல்
வல்லமையா லுணர்ந்து பின் வருமாறு அரசனை நோக்
கிக் கூறலுற்றான்: “மன்னர் மன்னரே, தாங்கள் மனத்
தில் நினைத்து இவ்விடம் வந்தது தங்கள் திருக்குமா
ரத்தியின் மண வினையைக் குறித்தாகும். தாங்கள்
இந்நகரத்தில் சுற்றி வீதிவாய் வரும்போது ஒரு
பெண்மணி எதிர்கொண்டு வந்தாளன்றோ? அவள் திரு
மகளாவாள். இச்சகுன விசேடத்தாலும், தங்கள் புதல்
வியின் கோள் நிலை மேம்பாட்டாலும், அவளுக்கு ஏற்
படும் மேன்மைகளை என்னால் நவிற்றச் சொல்ல வியலாது.
ஆதி நாளிலே தரும சக்கரவர்த்தி தாங்கிய அருகக்
கடவுள் அருளிய மாபுராணத்திலே இப்பொற்கொடிக்
குப் புருடனாக வரும் அரிஞ்சுமானனது சரித்திரம்
கூறியிருக்கின்றது” என்றனன்.

இங்ஙனம் ஆரியனான சித்திரிகன் கூறவும், சடியரா
சன் புளகாங்கிதனாய் அக மகிழ்ந்து அச்சித்திரிகனை

நோக்கி, "ஆரிய குலோத்தம, மாபுராணத்திலே என் திருமகளுக்குக் கணவனாய் வருபவனது சரிதம் எங்ஙனம் சொல்லப்பட்டிருக்கிறது? அதனை எனக்குக் கூறுவாயாக" என்றனன். எனலும், சதவிந்து, "மகாராசரே, மூவகை யுலகிற்கும் நடுவே யுள்ளதாகிய பூவுலகம் கருமலோக மென்பதும், அஃது ஏழு தீவுகளாகப் பகுக்கப்பட்டுள்ள தென்பதும், அவ்வேழு தீவுகளி லொன்றாகிய சம்புத்தீவின் நடுவே மேருவும் அதனைச் சூழ்ந்து ஏழு குல மலைகளும் உள்ளன வென்பதும், இவை யல்லாமல் அத்தீவிலே ஏழு நதிகளும் பதி னான்கு கடல்களும் ஏழு கண்டங்களும் பொருந்தி யுள்ளன வென்பதும், அக்கண்டங்கள் ஏழினும் பரத கண்டமே சிறப்புடைத் தென்பதும் கூறப்பட்டிருக்கின்றன. அப்பரத கண்டம் போக பூமியாய் மூன்றாமூழி காலம் இருந்த தென்றும், அதன் பின்னுழியிலே பிரமாக்கள் தோன்றிச் சூரிய சந்திராதிய பிரபஞ்சங்களைப் படைத்தாரென்றும், மூன்றாவது ஊழியின் முடிவிலே உலகிலுள்ள ஆன்மாக்கள் உய்யும் பொருட்டுச் சோதி மூர்த்தியாய ஆதிநாதர் அவதரித்தன ரென்றும் உரைக்கப்பட்டிருக்கின்றன. அப்பொழுது அறவாழி யுருட்டிய ஆதிநாதர் அருளாழி வேந்த பரதன் என்பவன் அப்பரத கண்டத்தை ஆண்டுவந்தனன். அவன் அம்மூர்த்தியை வேண்டுதல் செய்து, தனக்குப் பின் நிகழ்வனவற்றை வினவியபோது, அவர் அவனை நோக்கி, 'யான் முதலாக இருபத்து நால்வர் நாதர்கள் நீ முதலாகப் பன்னிருவர் சக்கரவர்த்திகள் கேசவர் முதலாக ஒன்பதின்மர் வாசுதேவர், அவர்க்குப் பகைவர் பிரதி வாசுதேவர் ஒன்பதின்மர் உன் மகன் மரீசி என்பான் போதன மாநகரத்து அரச

ளுவான அவனே கேசவாககு முதலவன அவன குலத திலே மற்றுமொரு வாசு தேவன தோனறி, வாசு தேவாககுப பிரதி வாசு தேவனுக வுளள அசுவகரீ வனை ஒரு கனனிகையின பொருட்டுச சங்கரிதது, அவன சையாழியை ஏநதி உலகைக காப்பான' என்று கூறி யருளினார். அமமா புராணததில உரைககப்பட டிருக்கின்றது அககாலை சுவாக்க காட்டினை விடுத துப பூமியிலே போதனமா நகரததிலே பிரசாபதி யரச னுடைய இளைய குமாரனுகப பிறநது, திவிட்டன என னும பெயரோடு விளஙகுகினறான அத்திருக்குமா ரனே சயமளை கனனிகா ரத்தினததிறகுரியவன அவன தனகள புஜவலிமையை மைநதுபின, வாசு தேவனுக அபிராமான அசுவககிரீவன ஆகியயும அவனது ஆழியையும வெனறி, உலகம் சுக்கின சேடிகளா இணை யையும நாயகனே அரசனாக கருவான" என்று மொழிந்தனன அரசன அவவிசேடததைக கேட்டு ஆனநத சாகரததில முழுகிய இனபமுறறயினன

பின்னும் திபிக்கெனர சடியாசனை நோக்கி, "ஆ ரியரே, நான புதியவை யாவும உணமை யெனபதற கடையாளமாக உமக்கு மருமகனுப வரும திவிட்ட குமா ரன இளமையும ஒரு மாதததுக்குள ஒரு சிஙகததின வாயைப பிளப்பான அதைக கொணடு மற்றவை யெல லாம உணமையே யெனறு தெளிவீர" என்றனன அரசன திபிதததின சோதிடக கலா வலலமைக்கும, சொலலும ஆற்றலுக்கும அவனை மெச்சி, அவனுக்குச சோதிமாலை எனனும வள நாட்டினை ஆளக்கொடுததுச சூரியன அஸ்த கிரியில சேரும சமயததில தான வாயு வேகை வரியும அரணமனை போயப புகுநதனன வாயு

லிலே தெய்வத் தாமரைமீது விற்றிருக்கும் இலக்குமியேயாம். அவள் கடல் வண்ணனாகிய வாசுதேவனுக்கே உரியவளாவாள். இவை முழுதும் எனக்கு உன்னாலே வந்த பெருமையாகும்."

வாயுவேகை அவ்வுரைகளெல்லாம் கேட்டு அகம் பூரித்து, முகத்தின் முகிழ் நகையோடு அரசனை வணங்கி, "எம்பெருமானே, மக்கள் அறிவுடையவர்களாயும் அழகுடையவர்களாயும் விளங்குவதற்குத் தந்தையரே காரணராவர். இத்தகைய சிறப்புகளெல்லாம் தங்களா லுண்டாயது. மக்கள் பெருமை யடைவது தந்தையாரா லன்றோ? என்னும் என்றும்" என்று உபசார மொழிகள் கூறினள். அரசன் தன் மனைவியின் இன்மொழி கேட்டு மனங்களித்து மஞ்சப் பாயலிலே நித்திரைபோயினன்.

அரசன் மறுநாட் காலை எழுந்து, தன் குமாரன் அருக்ககீர்த்தியையும் அமைச்சரையும் வரவழைத்து, அவர்களுக்குத் தான் முன்னை நிமித்திகனிடங் கருதிச் சென்றதையும், அந்நிமித்திகன் ஓர்ந்துணர்ந்து தனது கருத்தை வெளிப்படுத்தியதையும், சுயம்பிரபையின் திருவையும், அவளுக்கு நாயகனாகவரும் திவிட்டனின் பெருமையையும் எடுத்துக் கூறினன். அவற்றைக் கேட்ட அமைச்சர், "மகாராசரே, உம் செல்வப் புத்திரி செந்தாமரை மலரில் வீற்றிருக்கும் செல்வியேயா மென்பதற்கோ ரையமுமின்று. இனிச் செய்ய வேண்டுவது யாதெனில், அத்திவிட்ட குமாரன் தந்தையாராகிய போதனமா நகரத்தரசருக்குத் தூதுவிடுத்தலே யாகும். அவ்வினை மேற்கொள்ளத் தக்கவன் மரீசி

எனபவனே அவன சகல நூலகளையும ஐயநதிரிபறக
கறறவன, கறறவாகேடகும விைடகடகெலலாம தகுநத
படி விடை பகரும ஆறற லுடையான, தூதாககு
ரெய பமையாத வேணடிய அனபு, அறிவு, ஆராயநத
சொலவனமை யாகிய மூனறையும பெறறவன அவ
னே தூதாக அனுபபிலவ, நமது குலப பெருமையை
மிகககமாக எடுககுக கூறி, நாம கருதிய காரியததை
யும தெரிவிததுமுடிதது வருவான" எனறனா சடி
யபபனும அதுவே செயயத தககதெனக கொணடு,
மிகிபை யெழுததுக தன கையால வரையப பெறற
திருமுகததைக கொடுதது அவன செயய வேணடியவை
களையும கூறிப போதனமா நகரளு செலல விடுததனன
ஆரியனும மீரியும அசசீன வரைநத திருமுகததைக
கைபபறறிக கொணடு, விசயபாருகப செனறு, போதனமா
நகரை யடைநது புடபமாகாணடபம எனனும பூமபொழி
லிடை இறுககினன

IV

## மரீசியின் தூது

தூது சென்ற மரீசி புட்பமா காண்டமென்னும் பொழிலிடை இறங்கி அவ்வனத்தின் வனப்பை வியப்புடன் பார்த்துக்கொண்டிருந்தான். அப்பொழில் இனிய மணங் கமழ்த் தேன் மாரி பொழிந்தாற் போல மது வொழுக, மலர் மலிந்து நிற்கும் வகுளம், தேமா, நாகம், புன்கு, சந்தனம், சண்பகம், குரவம், அசோகம், இத்தி, இருப்பை, தாழை புன்னை முதலிய மரங்களை நெருங்கப் பெற்று எப்பொழுதும் தண்ணென்றிருந்தது. மல்லிகை, முல்லை, அனிச்சம், மாதவி, கொகுடி, ஓடை, கோங்கம், புன்னாகம், இலவம், பாதிரி, கேக்கு முதலியவைகளின் மலர்கள் கும்மென்று நறுமணம் வீசிக்கொண்டிருந்தன. வண்டுகள் இசை பாடுவார் போலப் புது மலர்கள் தோறுஞ் சென்று ரீங்காரஞ் செய்துகொண்டிருந்தன. மாந்தளிர் கோதும் குயில்கள் சுதி கூட்டுவார்போல இனிய குரலிற் கூவிக்கொண்டிருந்தன. நாகணவாய்ப் புட்கள் இன்னிசை கேட்டுக் களித்துக் கொண்டிருந்தன. இவற்றையெல்லாம் மரீசி மன உல்லாசத்துடன் பார்த்துக் களித்துக்கொண்டு, ஆண்டு ஒரு பக்கத்திலிருந்த பொய்கைக் கரையை நண்ணினன். அப்பொய்கை தனது கரையோடு பொருந்தின திவலைய பனிநீரைத் திரைக் கரங்களால் வாரித் தெளித்து, தன் கரையிலுள்ள மலர் மரங்களின் கிளைகளால் அவன்மீது மலரைத் தூவி, சுரும்பினங்களினால் அரும் பண் பாடுவித்து, இளந்தென்றலை எழுப்பி, அவனை

எதிர்கொண் டழைத்து அவன் அவ்விய றகை வனப்பின் விநோதங்களைக் கண்டு மகிழ்ந்துகொண்டே அப்பாற் சென்றனன். அங்கே அசோக மரத்தடியின் கீழ் இயற்றப் பட்ட மணிச் சிலா தலத்தைக் கண்ணுற்றான். அதனடியிற் பயாபதி யரசனால் விஞ்சையர் தூதன் வரவின் நிமித்தம் காவல் வைக்கப்பட் டிருந்த தருமகாந்தனிருந்தான். அவன் மரீசியை, 'விஞ்சையர் தூதன் இவனாகத்தா னிருக்க வேண்டும்' என்று சில குறிப்புகளா லறிந்து, சிலா தலத்தைக் கண்டு வியந்து நிற்கும் மரீசியின் பாதங்களில் மலர்களிட்டு வணங்கி, "இச்சிலா தலமிசை எழுந்தருள்வீராக" என்று விநயமாக வேண்டினன். அது கேட்ட மரீசி, "இஃதென்ன! இஃதென்ன!!" என மனத்திற்குள் வியந்து, தருமகாந்தனை நோக்கி, "ஐய, இது மானுடர் தங்கும் இடமென்று நான் கருதவில்லை, இதனை நம் இறைவன் அருகக் கடவுள் கோயில் கொள்ளும் இடமென்று கருதினேன்" என்றான். தருமகாந்தன், "சுவாமி, அப்படி யன்று, எம் இறைவர் பயாபதி மன்னருடைய இளைய குமாரன் திவிட்ட ராஜ நம்பிக்கு மணம் பேச ஏழு பகலுக்குள் ஒரு விஞ்சையர் தூதன் திருமுகங் கொண்டு இப்பொழிலிடை வந்து தங்குவானென்று அங்கத நிமித்திகன் அரசர்க்குப் புகன்றமையால், எம்மரசர் தமது வரவை எதிர்கொள்ள என்னை ஈங்கிருக்கி, தாங்கள் இங்கெழுந்தருள இதனையும் இயற்றினர்" என்றனன். மரீசி, "அங்ஙனமா?" என்று கூறி அச்சிலா தலமிசை அகமகிழ்வுடன் ஏறியமர்ந் திருந்தனன். தருமகாந்தன் அவனுக்குப் பலவித உபசாரங்கள் புரிந்து அவனை மகிழ்வித்துப் பின் அவனது வரவை அரசனுக்குத் தெரிவித்தனன்.

அரசன் விஞ்சையர் ஊர்தனூ வரவு கேட்டுப் பெருமகிழ் வடைந்து, 'அவனை இன்பப்பை பாற்றுக' என வயந்தமா திலகை, கலியாணிகை, வயந்தசேனை, கமலமாலதை என்னும் இப்பெயருடைய கணிகையர் நால்வருக்குக் கட்டளையிட்டனன். பொற்றட்டில் பனிநீர், சந்தனக் குழம்பு, மாலை, சிற்றுண்டி, பேருண்டி முதலியவை ஏந்திய ஏவல் மடந்தையர் தம்மைச் சூழ்ந்து வர அவர்கள் அன்னம்போல அசைந்து நடந்து மரீசியின் பக்கத்தே யடைந்தார்கள். அடைந்தவர் அவன் முன்னர்ச் சென்று அவனுக்கு முடிமுதல் அடிவரையில் பனிநீரைத் தெளித்துச் சந்தனம் பூசி, நறுமலர் மாலை சூட்டி, கொணர்ந்த சிற்றுண்டிகளை உண்ணும்படி வேண்டினார்கள். அப்பொழுது அவர்கள் அந்நிலையை விசாரிக்குந் தொழிலினை மேற்கொண்டார்கள். மரீசி இவ்வுபசாரங்களை யெல்லாம் கண்டு, 'இதுவே அமரபோகம்!' எனக் களித்தனன்.

இவன் இங்ஙன மிருக்க, பயாபதி யரசனுடைய ஏவற்படி விசயதிவிட்ட குமாரர்கள் காற்படையுஞ் சூழ, இரு புறமும் கவரி வீச, வெண்மதிக் கடவுளும் கருங் கொண்மூவும் செம்பொன் மலைமீது சிறக்க வீற்றிருந்து வந்தாற் போலப் பட்டத்து யானையின் மீது இவர்ந்து, பாடுவாரும் பல்லாண்டு கூறுவாரும் முன்னும் பின்னும் வர, மரீசி இறங்கியிருக்கும் புட்பமா காண்டத்தை யடைந்து மரீசியைக் கண்டார்கள். மரீசி சிறந்த கோலத்துடன் வந்த அரசகுமாரர்களைக் கண்டு பொருக்கெனத் தனது இருக்கையினின்று மெழுந்து கை கூப்பி வணங்கினன். அதனைக் கண்டு அரசகுமா

ராகளில் மூத்தவனான விசய குமாரன் அவனைப் பார்த்து, "ஐயன்மீர், நீர் அருங்குண மெல்லாமுடையீர். எங்கட்குக் குரவ ராகவும் விளங்குகின்றீர், மேலும், விருசையீர் அங்ஙன மிருக்க நீவிர் எம்மைப் பணிந்த தென்னே?" என்று வினவினன். மரீசி அவர்களைப் பாதாதி கேசம் வரை மலர நோக்கிச் சாமுத்திரிகா இலக்கணங்க ளெல்லாம் அவர்களிடம் ஒருங்கே அமையப் பெற்றிருப்பதைக் கண்டு தனக்குள் வியந்து, அவர்களைப் பார்த்து, "குமாரர்களே, நீங்கள் விண்ணுலகை நீத்து மண்ணுலகம் உய்யும்படி அவதரித்துள்ளீர்கள். இப்பொழுது நீங்கள் மானிடவுருவைப் பெற்றிருந்தாலும் தேவர்களே யாவீர்கள். முற்பிறப்பில் யான் நல்வினை செய்தமையா லன்றோ இன்று உங்களைக் கண்டு வணங்கும் பேற்றினைப் பெற்றேன்!" என்று கூறி மீண்டும் ஒரு முறை வணங்கினன். அங்ஙனம் வணங்கிய மரீசியின் கையை அவ்விரு குமாரர்களும் பற்றி, 'உமது உபசாரம் அமைக. எந்தையார் நும்மை அழைத்து வரச் சொன்னார். ஆதலால், இப்பட்டத்து யானையின் மீது ஏறியருள்க" எனக் கூறி அவனை அவ்வரச உவாவின்மீது ஏற்றிக்கொண்டு, பலவித வாத்தியங்கள் முழங்கவும், மங்கையர்கள் பொற்சுண்ணம் சிதறவும், வந்தியர்கள் புகழ் கூறவும் மிக்க சிறப்புடன் அரண்மனையின் வாயிலைக் குறுகினார்கள்.

அதனை யறிந்த வாயிற் காவலன், ஓடோடியுஞ் சென்று அரசனுக்குத் தெரிவித்தான். அரசன் அமைச்சர்களுடனே அரசியல் மண்டபமாகிய அலங்கார மண்டபத்திற் புகுந்து செம்பொன்னால் இழைக்கப்பட்ட

அரியாசனத் தமர்ந்தனன் அமைச்சர்களும் அவ ரவர் ஆசனத்தில் இனிதமர்ந் திருந்தார்கள் இங்ங னம் அமர்ந்ததும் அரசன், 'விஞ்சையர் தூதனும் விசயதிவிட்டனாயும் உள்ளே அழைத்து வருக' என வாயில் காவலனுக்குக் கட்டளையிட்டனன் வாயில் காப்போன் வெளியிற் சென்று செய்தி யறிவிக்க யாவரும் உள்ளே புகுந்தனர் விஞ்சையர் தூதன் தாரகைக் கணங்கட்கிடையே விளங்கும் தண்மதிக் கடவுள்போல் அரியாசனத்து வீற்றிருக்கும் அரசனைக் கண்டு வணங்கினன் அரசன் அவனுக்கோ ராசனங் காட்டி இருக்கச் செய்து குசலம் வினவினன் மரீசி மகிழ்வுடன் சில வசனங்கள் பேசிப் பின்பு ஆசனம் விட் டெழுந்து, தன் னரசனுடைய வெள்ளிமலையைத் திசையை நோக்கி வணங்கி, அரக்கு முத்திரையிட்ட திருமுகத்தைச் சடி யரசன் சமுகம் நீட்டினன் அப் பொழுது அரசன் இலேககன் முகம் நோக்க, அவன் அக்குறிப்பறிந்து அத்திருபகத்தைத் தன் கரத்தில் வாங்கி, முத்திரையை நீக்கி, அதிலுள்ள வாசகத்தை ஒரு முறை நோக்கி, மனத்திற்குள் வாசித்துப் பழகிப் பின்பு அரசன் முன் பின் வருமாறு வாசித்தான்

'போதனமா நகரம் புரக்கும் பயாபதி மன்னர் காணக் கிதழியாதர உலக வேந்தர் இந்த நூபுர மன் னர் வரையும் திருமுகம்

'அரசருக்குச் செல்வமும் மேன்மையும் குடிகளும் எல்லாம் மிக்கோங்குக நம் இளைய குமாரன் செல்வச் சிரஞ்சீவி திவிட்ட நம்பிக்கு எம் குமாரத்தி சௌபாக் கியவதி சுயம்பிரபை வாழ்க்கைத் துணைவியாக நிய

மிக்கப்பட்டாள். ஆதலால், தம் மருமகள் சயம்பிர பையை நமது சமுகம் அழைப்பித்து இளைய நம்பிக்கு மணஞ்செய்திடுக. இனி எம் கன்னிகை நம் மகனுக்கே உரியவளாவாள். தாமும் மண மகனும் மண மகளும் நீடூழி வாழ்க'

இலேகனை இவ்வாறு வாசித்து முடிக்க, பயாபதி யரசன், 'விந்தியாதர ரென்போர் நம்மினும் பல்வாற்றானும் உயர்ந்தோ ரல்லரோ? அவ்வேந்தர் நம் இளைய புதல்வனுக்குத் தம் தெய்வப் புதல்வியை மணஞ் செய்து கொள்க எனத் திருமுகம் தீட்டி யனுப்பிய தென்னே? இத்தன்மை மணவுறவுக்கு மன்னர் அடையக் கூடியதா? இது மிகவும் ஆச்சரியத்தைத் தரத் தக்கதா யிருக்கிறது! நமது நல்வினை இருந்தவாறு என்னே! என்னே!!' என்று தனக்குள் வியந்து, மகிழ்ந்து ஆனந்தப் பரவசனாகி, விஞ்சையர் திருமுகத்திற்குப் பதிலுங் கூற மறந்து, செயலற் றிருந்தனன். அப்பொழுது மரீசி, 'நம் அரசர் விடுத்த திருமுகத்தை இவன் நன்கு மதித்து நன்மொழியொன்றும் கூறாமல் வாய் வாளாமை மேற்கொண் டிருக்கின்றானே! இவனது செருக்குத்தான் இருந்தவாறு என்னே!' என்று மனத்திற் கொண்டு, கோபத்துடன் பயாபதி மன்னனை நோக்கி உரைப்பா னாயினன்.

"நராதிபரே, எத்தகையராயினும் மனிதரிடம் ஒரு காரியத்தின் நிமித்தமாக வலிய வந்து மொழிந்தால், அவர்கள் மனிதரால் இகழப்படுவார்கள் என்று உலகம் கூறுவது உண்மையே. தேவரே யாயினும் அவரை அவர் தம்முள் ஒருவராகவே மதித்து நடப்பர்.

இது மனிதரது இயற்கை இதன் அனுபவத்தை இன்று உம்மிடம் கண்டேன் பித்த நோயினால் சுவையிழந் திருப்போர்களுக்குப் பசுவின் பாலைப் புகட்டினாலும் அவர்கள் அதன் உருசியை அறியமாட்டார்கள் மேலும் அத்தீம்பால் அவர்களுக்கு வேம்பாகும் அதுபோலவே, வித்தியாதரருடைய சிறப்பினைப் பொள்ளல் யாக்கையை யுடைய மனிதர் எங்ஙனம் அறியப்போகின்றனர்? எஞ்சலில்லாத எழிலையும் பெருஞ் செல்வத்தையும் பெற்றுவாழும் விஞ்சையரது மேம்பாடு மனிதர்க்கு உரைக்கற்பாலதோ? மும்மதமும் பொழியும் யானையி னது போராற்றலை அதன் கன்று அறியுமோ? எம்மவர் பெருமை இம்மாநிலத்தவர்க்கு வரக் கிடந்தாலும் வருமோ? மண்ணுலகத்தில் உள்ளோர் எத்தகைச் சிறப் பினை யுடையவ ராயினும் நுண்ணறிவு படைத்தவ ரல்லர் அரசரே, வெள்ளியம்பெருமலை வேந்தர் உம் மிடம் வலியத் தூதனுப்பியபடியா லன்றோ நீர் அவரை எள்ளி ஓர் உரையும் கொடாதிருந்தீர்?’’ என்று கன்று பேசினன்

இம்மொழிகளை யெல்லாம் அமைதியுடன் கேட் டுக்கொண்டிருந்த பயாபதி மன்னன் மரீசியை நோக்கி, “ஐய, யான் ஒன்றும் உரையாது வாய் வாளாமை மேற்கொண்டதனால், நும்மரசர் திருமுகத் தையும் உம்மையும் அவமதித்தே னென்றெண்ணிக் கோபங் கொள்ள வேண்டா வித்தியாதர ரென்பார் எம்மினும் பன்மடங்கு மிக்கார் அவர் இமையா நாட் டம் பெற்ற தேவரே யெனினும் அமையும் அவரது செல்வம் மனிதர்க்குக் கிடைப்பது அரிது அதனைப் பெற வேண்டு மாயின் பல காலந் தவங் கிடந்து பெறல்

வேண்டும் அது எளிதிற் பெறற்பாலதன்று நீர் கூறிய படி இப்பொன்னால் யாக்கையுடைய எமக்கு விஞ்ஞை யாது செல்வம் அகப்படுவது அரிது என்பது உண்மையே நீர் வந்து உரைத்ததையும், வித்தியாதர வேந்தர் திருமுகத்தையும் கனவில் நிகழ்வனவாக யான் இதுகாறும் கருதினேனே யன்றி, நனவிற்றான் இவ்வாறு நிகழ்கின்றன வென்று கருதினேனல்லேன் அன்றியும், நும்மரசர் எனக்குக் கொடுத்த பெருமையையே எண்ணி எண்ணி இத்திருமுகத்திற்குத் தகுதியான கண்ணிய வார்த்தைகள் எவை புகல்வதென்றும் அறியா திருந்தேனே யன்றி வேறன்று" என்றான்.

இறைவன் இவ்வாறு உரைக்கவும் மரீசி, 'ஆ! என்ன பாவம் செய்தேன்! அரசன் மனத்திற் கருதிய மாண்பை யோராமல் புன்மொழி என்னென்ன புகன்றேன்! பொறையிற் பெரியன் இப்பூபன் வெறியி லுற் சிறியன் யானே' என்று தனக்குள் நொந்து, அரசன் 'என்னினும் வித்தியாதரரோ மிக்கோர், அவரே எல்லா முடையார்' என்று எண்ணுவதை மாற்றி, வித்தியாதரரும் மனிதர்களே யென்பதை நிரூபித்துக் காட்டி, அவனது ஐயத்தைப் போக்கவேண்டு மென உளத்திற் கொண்டு, அரசனைப் பார்த்து, "அரசரே, எனக்குள்ள அவசர குணத்தை எனது செயலினால் காட்டிக்கொண்டேன் பொறுமையிற் பெரியீராகிய நீவிர் இச்சிறியேன் இழைத்த சிறுமையினைப் பொறுத் தருள்க. விஞ்ஞையர் தமது வித்தையினா லன்றி வேறொன்றினும் மனிதரினும் மிக்கோரல்லர். அவர்களும் மனிதர்களே. வேற்றுமை யொன்றும் இல்லை.

“அரசரே, யான் பவபுரம் என்னும் நகரத்தை ஆளும் மன்னன் பவன் வேகனுடைய மனைவி வாயு வேகை என்பாளின் உடன் பிறந்தவன். என்னுடைய பெயர் மரீசி என்பது. என் தந்தையார் கல்விகேள்விக ளில் மிகுந்த அஞ்சுமான் என்பவர். தாய் கலைமகளி னுஞ் சிறந்த அருசிமாலை. நான் என் தாயினிடத்தில் கற்ற நூல்கள் பலவாகும். அவற்றுள் உலக சரித்தி ரம் பலவற்றையும், உலகாளும் மன்னரிலே பண்டைக் காலந் தொட்டு இன்று வரையிலு முள்ளவர்களது வர லாற்றையும் ஆதியோடந்தமாக அறிந்திருக்கின்றேன். அவ்வரலாற்றில் இரண்டொன்றைத் தங்கள் சமூகம் அறிய எடுத்துரைக்கின்றேன், கேட்டருள்க.

“ஆதி நாளில் அரசகுலம் ஐந்தையும் உண்டாக்கி அவற்றிற்கு அவசியமான நெறிமுறையும் விதித்தருளிய அறவாழி யந்தணன் நாள்வழி யொழுகிய காசி நாட்டு வேந்தன் கச்சன் என்பவ னொருவ னிருந்தான். அவ னுக்குத் தேவி சுதஞ்சனை என்பாள். அவர்களுக்கு அரச சிங்கமெனத் தக்க நமி என்னும் புத்திரனொருவ னிருந் தனன். அவன் அரச வாழ்வில் வெறுப்புற்று உலகுய் யத் தருமம் பகன்ற நம் நாதன் திருவடித் தியானமே பொருளாகக் கொள்பவன். ஒரு நாள் அவன் அருகப் பெருமான் தியானசமாதியி லாழ்ந்து மெய்ம்மறந்து அன்பு மேலீட்டினால் அப்பெருமான் பெருமையைக் குறித்து,

‘அலகிலா ஞானத் தகத்தடங்க முங்கி
உலகெலா மின்னுள் ஒளித்தாய் நீயே,
ஒளித்தாய் நீயே உயிர்க்கெல்லாங் கண்ணாய
அளித்தாயுங் காத்தாய் நீயே வாழி யறவேந்தே!

'அழனுறும வெஙகதிரோன ஆணவல ராது
கிழனுறு மூாததியாய நினருயு நீயே,
நினருயு நீயே நிறைபொருள எலலேககண
சென்ருயும வெனருயு நீயே வாழி திருமாலே!

'நிறைதரு கேவலததோய னினனடியாாக கெலலாம
குறைதலில இனபங கொடுபபாயு நீயே,
கொடுபபாயு நீயேயென குற்றேவல வேணடாய
விடுததாயு நீததாயு நீயே வென்ற பெருமானே!'

என்று கானம பாடித துதிததனன இபபாடடைக கேடடுக கலலும உருகிறறு, கானப் புடகளும வானததி னின்று மிழிநது செயல மறநதன, விலஙகுகள பலவும நிலம பெயாநதோடாது நிலேததுநினறன, படட மாமும தளிாததன, நீரம வலல கினனாரும ஏதமடைநதவா போல மயஙகினா, அமாரும தமது அமிருததததை மறநது இககானுமிருதமே உணடு திளேததனா

''அககாலததில பனனக லோக மனனவனுன ஆதி சேடன ஆணடடைநது, பாம பத காதல பத மலரை வலம வநது வணஙகினுன வணஙகி, அவன செயல மறநது சிறவான தியானமே கொணடு நினற மனனனே நோககி, 'வேநதே, நீ அறப பெருஙகடலாகிய நம அருக கட வுளின அடிததியான யோகததி லாழநது அவ:து அளவிலாப பெருமையை எடுததுப புகழகின் றனே உனககு வேணடுவது யாது?'' என்று கேட் டருளினன பணமிசைப படாநத சிநதையனு யிருநத பாாததிபன நமி அசசிநதனேயை மாறறித தன முன் காடசி கொடுததுக கடாக்ஷிகக வினவும ஆதி சேடனே வணஙகி, 'சுவாமி, விணணுலகத துளளவா தாம

வேணடிய வேணடியாஙகுப பெறுமாறுபோல அடிய னும இமமணணுலகததில வேணடும நலமெலலாம சிததிக கபபெற வாநதாதருளப பிராததிககினறேன' எனறு குறிததனன பணதாரும பணணவா தனமையினை யுணடாககவலல மாதிரம பகாரது, நன மனைவியும வெளளிமலையும அளிதது, 'எனறுங குறையாச செல வம பெற்று விணணவரே போல வாழநதிடுக' என வாநதநது பனனக உலகஞ் சென்றனன எமமாசரும அககமி குலததுத தோனறியவ ராதலின மனிதரே யாவா. நீவிரும குலததின நலததினுலும செலவததின பெருககினுலும சீரததியின சிறபபினுலும எமமாசரை ஒபபீர நீவிரிருவீரும உறவு முறை கொணடாடின அது பாலொடு தெய கலநதாறபோனற நீரமைததா கும" எனறு கூறினன

அபபொழுது அசசபையிலிருநத அரசனுடைய புரோகிதன மரீசியை நோககி, "நலல வலலீர, நுமமாசா குலவரலாறறை நூலிலுளளவாறு உணாததினீர யானும எமமனோா குல விருததாநததை உரைககினறேன, கேடடருளக ஆதியில உலகமெலலாம எவனுல படைக கபபடடனவோ, எவன அவறறையெலலாம வகுததுக காததுவணககினுனே, திருமகள எவனது மாாபகஞ சோநது உறைகினறுளோ, எவன நமமைப புணணிய லோகம மேவ அருள செயவானே, அவன திரு வருளினுலே உதிததவா ராகத மணிகளுள ஒருதக வாகு வலி எனனும மனனன அவன உலகு காதது உணடாககிய அரசு கருமததைகயே இனறளவுமா அரசா கள பினபறறிக கறறு அரசாளகினறாாகள அமமன னன அரசபாரததைத தனமகனுக்குக கொடுததுக கயி

**லாச மலை** சென்று நெடும்பகலாய நிர்மலத் தியானத்தில் நின்று கடுந்தவம் புரிந்தனன் அப்பொழுது அவனது சலியாது நின்ற நிலையினால் அவனை மரமெனக் கருதி வல்லிக் கொடிகள் அவன் உடல்மீது பரவிப் பின்னிக்கொண்டன குருவிக் கூட்டங்கள் அவனது சடா பாரத்தைக் கூடெனக் கருதிக் குடியேறி முட்டையிட்டுக் குஞ்சு பொரித்துக் குலவி வாழ்ந்தன இந்நிலையில் அம்மன்னன் நெடுங்காலம் நின்று கடுந்தவம் புரிந்து மோக்ஷ லக்ஷ்மியைப்பெற்று அமரர்க்கும் அரியனானான் அவ்வரசு வழியின் குலத்தவரே எம் அரசரும்'' என்று கூறினன்

ஆண்டு அரசவையிலிருந்த யாவரும் இரு குடித் தொடர்பும் கேட்டு மயிர் சிலிர்க்க ஆனந்தக் கண்ணீர் சொரிய அருக்க கடவுளின் திருவருட் பெருமையைப் புகழ்ந்தனர் அவ்வமயம் அரசன் வாயெடுத்துப் பேசுவதற்கு முன் மரீசி, ''அங்ஙனம் அரிய தவமியற்றிப் பெரும்பேற்றினைப் பெற்ற வாகு வலி என்னும் நுங் குல அரசர் நங்குல முதல்வனாகிய நிருபன் கச்சனுக்கு மருகர் என்று மாபுராண நன்னூல் கூறுவதை நான் நன்கறிவேன் இப்பொழுது இப்புராதன குலத்துத் தலைவர்கள் இம்மண வினை காரணமாகக் கூட்டோந்தத்தைக் குறித்து எம்மனம் பெருமகிழ்வடைகின்றது'' என்று கூறினன்

இம்மொழிகளைக் கேட்டு அரசன் இறும்பூதெய்தி, இறைவனை மனத்தால் வணங்கி வாழ்த்தி உரைப்பானாயினன் ''அறிவின் மிக்கவரே, உம்மினும் உலகை நூல்களும் குலங்களும் குல முறையும் உள்ளிட்ட பல

வாய் விஷயங்கள் அறிந்தோர் எவருமிலர். அரசாட்சி யென்னும் எந்திரத்திற்கு மந்திரிகளே கண்கள், மக்களே கால்கள், தோழரே புயங்கள், ஒற்றரே செவிகள், உணர்வே நூல்கள், வாயே தூது இவற்றின் அமைச்சருக்கு ஓதிய இலக்கணங்க ளெல்லாம் அமையப் பெற்று நின்ற ஒருவன் தூதுவ னாயின் அவன் சூழ்ந்து சொல்ல மாட்டாத பொருளுமுண்டோ? யாது சம்பவிப்பினும் அதற்கேற்ற உபாயந் தேடி அரசனைத் தேற்றி அறிவு கொளுத்திப் பாதுகாக்கப் பிறரால் கூடுமோ? இவ்விலக்கணங்க ளெல்லாம் ஒருசேர வமையப் பெற்ற உம்மைத் தூதுவராக அடைந்த வேந்தர் வேந்தர் யருதிய எத்தனைதான் எய்தப் பெறார்? நம் மன்னர் எம்மைச் சுற்றமா நினைத்து நும்மைத் தூதராக விடுத்தது எமக்குப் பெரும் பயனாகும் இனி உம் முன் நான் கூற வேண்டுவதொன்றும் இன்று எல்லாம் நீர் உணர்வீர் இன்று முதல் என் நினைவு விருஞ்சைய வேந்தரிடத்தே பொருந்திக் கிடக்கும், வேறிடஞ் செல்லாது நுமரசருக்கு இன்று தொடங்கி எம் மக்கள் குற்றேவலுக் குரியவராவார்கள் வேண்டுமாயின், அவர்களை ஆண்டு அழைத்து வேண்டிய பணிகளைப் பெற்றுக் கொள்ளட்டும் யானும் மாறிலேன்'' என்றனன்.

என்னும், மரீசி பயபக்தி மன்னனைத் தொழுது, "யான் விருஞ்சையருலகஞ் செல்ல விடை தந்தருள்க" எனக் கேட்க, மன்னன் அத்தூதன் பொறுக்கலாகாப் பொன்னருங்கலங்களை அவனுக்குச் சூட்டி, அன்றைப்

பொழுது தனனகததே நிறுததி, அறுசுவை யனனம படைததுப பல ஆடல பாடலகளால அவனை மகிழச செயது, பிறறை நாள பெரியோா பின செலல விடுகக, மீசி விசுமபாருகச செனறு, விஞசைய ருலகின தென றிசைச சேடியாகிய சுவலனசடியின சுநதா நகரை யடைநதனன

## V

### சீய வதம

மரீசி இரத நூபுரககை படைநத அரசனது அரணமனே வாயிலகள மூனறையுங கடநது அரசனேக கணடு வணஙகினன அவனுககு அரசனை கைக்குறிபபால அணியாசன மொனறைக காட்டி அமரச் செய்தனன மரீசி ஆசனததி லமாநததும மன னன அவனே மலர நோககி அவன முகப பொலிவி னுலே அவன சென்ற காரியம சிததி பெறறதென யூகிததறிநது மகிழசசி முகததுடன விளஙகினன அப பொழுது மரீசி மனனனே நோககி வணஙகி, "மனனா மனனரே, வெறறி பொருநதிய நும கழலகள நீடூழி வாழக, நீயன செலக, உமது புகழ உலகமெஙகும பரவுக" எனறு வாழததும, "கருதிச சென்ற காரியம கை கூடி வநதது" என மஙகல முடிவனையும முதலிற கூறினன

பினனா அவன பயாபதி மனனன கலவிகேளவி களில மிகுநத பாரினே நோமையுடன புரபபதையும, அவன செயத தவ வனமையால அரியே றெனன அவ தரிததிருககும விசயதிவிடடா அறிவு ஆறறல அஙக விலககண விசேடஙகளேயும, அவருளளும இளேய காளே யான திவிடட நமபி திருமாலின யொததவ னென பதையும, அவனே உலகமெலலாய ஆள அரசனுய அவ தரிததிருககினறு னெனபதையும தெரிவிததனன 'அந நமபியை அடையும குலமஙகை செயத பாககியமே பாக

கியம்' என்று அவன் புகழ்ந்து, 'நம் நங்கைக்கு அரசம் பியே ஏற்றவன், அரசமிக்கு நம் அணங்கே ஏற்றவள், இவர்களிருவரும் மணப்பது இவ்விரு குலமும் முன் செய்த புண்ணியப் பயனே யாகும்' என்று கூறி முடித்தனன்

இங்ஙனம் மரீசி தான் தூது சென்று மணவினை முடித்து வந்த விடயங்களைக் கூறக் கேட்ட மன்னன் சுவலனசடி பெருமகிழ் வடைந்து அவனுக்கு இரு நிதி வழங்கி அவனை அவன் இல்லம் போக விடுப் பின்பு, "யாம் இதனைக் குறித்து இனி யாது செய்வது?" என்று தன் மந்திரிமார்களுடனிருந்து ஆலோசிக்கலாயினன் அப்பொழுது அமைச்சர்கள், "அரசரே, நம் சதவிந்து நிமித்திகன் அறிவிட்ட நம்பி இன்னும் ஒரு மாதத்திற்குள் ஒரு சீயத்தின் வாயைப் பிளப்பன் என்று கூறியிருக்கின்றா னல்லவா? அதனை அறிவதற்கு நம் ஒற்றர்களிலே ஒருவனைப் போதனமா நகர மனுப்பி அறுதியிட்ட திங்களளவும் அங்ஙனே இருக்கச் செய்வோம் பின்பு செய்தி யறிந்து மேல் நடப்பனவற்றை ஆராய்வோம்" என்றார்கள் அரசனும் அவர்கள் கருத்தின்படியே ஒற்றன் ஒருவனைச் சுரமை நாட்டிற்கு அனுப்பிவிட்டுத் தன் மனமொத்த சுற்றத்தாருடன் உவகையங் கடலுள் ஆழ்ந்திருந்தனன்

வெள்ளி மலையிலே தென்றிசைச் சேடி யாசனது செய்தி இங்ஙன மிருக்க, உத்தர சேடியிலே அச்சுவ கண்டன் என்னும் அரசனது ஆட்சி முறையையும் ஆண்டு நிகழ்ந்த பிறவற்றையும் இனி ஆராய்வாம் அச்சுவ கண்டன் தன் நாமம் கூறினும் மாற்றார் மனம்

அடங்கும்படி மன்னர் பலரை வென்று ஏக சக்கரேசுவரனாய் எண்டிசையினும் தன் பெயர் விளங்க வீற்றிருந்தனன். அவன் இங்ஙனம் விளங்கிய காலத்தில், 'எனக்குப் பகைவர் இனி எவருளர்?' என்ற இறுமாப்பினால் அரசியலை அமைச்சர்பால் ஒப்புவித்து, மன்னர் முறைமை முற்றும் மறந்து வீண் விளையாட்டுக்களில் அவன் காலங்கழித்துவந்தான். ஆகையால் நிலமடந்தை அவனோடு பிணங்கி அவனை விட்டகல அமயம் பார்த்திருந்தாள். அதனை நன்குணர்ந்த சதவிந்து என்னும் அரச புரோகிதன் அரசனை அணுகி, அவனுக்குச் சில உறுதியுரைகள் உரைப்பானாயினன்:

"மன்னர் மன்னரே, நீர் புறப்பகைவர்களை வென்று மண்ணுலகமும் புகழ் மாட்சியுடன் ஆட்சி புரிகின்றீர் எனினும், காம குரோத லோப மோக மத மாற்சரிய மென்னும் அறுவகை உட்பகைகளையும் வென்றீரல்லீர். அவற்றை வென்றாலன்றோ ஆட்சிக்கு உறுதிப்பாடாகும்? உட்பகை வென்ற வேந்தரை உடைக்கும் பகைவர் உலகில் எவருமிலர். அவர்களும் நாட்டினர் நானிலமும் தனக்கு செழிக்கப் பொன் மாரி பொழியாநிற்கும். அறிவென்னும் பரிதி கண்டு அலர்ந்த செல்வச் செழுந் தாமரைமீது செருக்கென்னும் பனித்துளி சிறிது வீழுமாயின் அஃது அழகு குலைந்து கருகி வாடி யழியும். ஒருவன் தன் நிலையினின்றும் திரிந்து தீச்செயல்களாற் களி கூருவானாயின் அவன் கெடுதல் திண்ணம். நீர் இந் நீதியெல்லாம் நன்கறிந்திருக்கின்றீர். யான் உமக்குப் பல்காலும் இடித்துரை கூறும் கடப்பாட்டினைப் பூண்டுளேன். ஆதலின், யான் கூறும் உறுதிமொழியைச் சினவாது கேட்டருள்க" என்றனன்.

என்னும், மன்னன் அச்சுவ கண்டன், “நன்று, சொல்லுக” எனக் கூறிச் செவி சாய்த்தனன். சதவிதத்து மேலுஞ் சொல்வானாகி, “அரசர்க்கரசரே, பூமியில் போதனமா நகரமென்றொரு நகருளது. அது விஞ்சைய ருலகத்தினையும் வெல்லும் மாண்மைத்தாய்ப் பல வளங்களும் பெற்று விளங்குகின்றது. அதனைப் பயாபதி மன்னன் என்போன் ஆட்சி புரிந்துவருகின்றான். அவனுக்கு விசயன் திவிட்டன் என்னும் இரு குமாரருளர். அவருள் அநங்கனைப் பழிக்கும் அழகும், அந்தகனும் அஞ்சும் ஆற்றலும் படைத்து இளையோனாய் விளங்கும் திவிட்ட குமாரனே நமக்கு வெல்லற்கரும் பகையா யிருப்பன் என்று ஒரு புன்சொல் நிமித்தம் எனக்குப் புலப்பட்ட அஃது அடியேனை வருத்தா நிற்கின்றது. ஆதலால், தாங்கள் அதற்கேற்றவைகளை ஆராய்ந்து முன்னெச்சரிக்கையாக இருப்பீர்களென்று பிரார்த்திக்கின்றேன்” என்றான்.

அச்சுவ கண்டன் இம்மொழி கேட்டதும் நச்சரவம்போற் சீறி, கண்கள் நெருப்பெழ விழித்துக் கையோடு கை தாக்கி, “ஆ! ஆ!! வெகு நன்றா யிருக்கின்றது! வெல்லுதற்கரிய விச்சாதர வேந்தரை யெல்லாம் வென்று வாகைசூடிய என்னை மற்றப் பகை படர்ந்து என் செய்ய வல்லது? விண்ணை யளாவிய மேரு கிரியை விசிறியினின்றெழும் சிறிய காற்று அசைத்து விடுமோ? மண்ணில்வாழ் மானிடப் பேதைகளோ என்னைப் பகைப்பவர்கள்? அவர்களால் என்னை வெல்லுதற்குக் கூடுமோ? பருத்த வரைகளையும் பிளக்கத் தக்க மத யானையின் மருப்பு மெல்லிய வாழைத் தண்டினால் மழுங்குமோ? தானவர் தானையையும் வெற்றி

கொண்டு விறிய என் தோள்கள் மனிதர் சேனையைக் கண்டு மயங்குமோ? பிரசண்ட மாருதம் வீசி யடிக்கும் பொழுது சிறிய மேகக் கூட்டம் அதனெதிர் செல்லுமோ? புகையெழும் என்து சீற்றத்தின் முன் அற்பப் புல்லிய பகைவர் எதிர் நிற்பரோ? இந்திரன் வச்சிராயுதத்தை ஏவினால் அது மாமலைச் சிகரங்களை யெல்லாம் வெட்டி வீழ்த்துவது போல, எனது சக்கராயுதம் நினைத்த அக்கணமே சென்று அமரர் தோளையும் துணித்து வீழ்த்தும் ஆற்றலுடையது அன்றியும், என்னிடமுள்ள வித்தையைச் செய்ய நான் இச்சை கொள்வேனாயின், அச்சமின்றி அதன் முன் நிற்பாருமுளரோ? இதனை நீ அறியாயோ? உனது சோதிடம் இவ்விஷயத்தில் பொய்யாகலா மென்றே நினைக்கின்றேன் ஆயினும், புலவர் சொல்லைப் போற்றி நடவாதவன் என்று என்னை இப்பொழுது உலகம் பழிக்குமென அஞ்சுகின்றேனே யன்றி மற்றெதற்கும் அஞ்சுகின்றேனல்லேன். ஆதலால் நீ இதனை அமைச்சருடனிருந்து ஆராய்க" எனக் கூறி யனுப்பினன்.

மன்னன் இவ்வாறு கூறியதைச் சதவிந்து நிமித்திகன் மந்திரிமார்களுக்கு அறிவித்தனன். அவர்கள் ஒருங்கு கூடி இதைக் குறித்து ஆலோசிப்பாரானார்கள். "நெருப்புப் பொறி எள்ளளவா யிருப்பினும் அதற்குப் பற்றுக்கோ டொன்றுண்டாயின் அது கனன்று உலகையுஞ் சுட்டு நீறாக்கும். அதுபோலப் பகையுஞ் சிறிதாயினும், இடம் பொருள் ஏவல் இனிது வாய்க்குமாயின் அது வலிய பகையையும் வென்றுவிடும். ஆதலால், இப்பகையை அது தோன்றிய பொழுதே தொலைக்காமல் வளரவிடின் பின்பு அது

அடககுவதறகு அரிதாய விடும இகனை இபபொழுதே தொலைபபதறகு வழி பாரகக வேணடும" எனறு அவர கள தஙகளுககுள தீரமானிததுககொணடனர பின மநதிரிகளுள தலைவனாக விளஙகு ற அரிமஞசு எனபான அரசனை யணுகி, "அணணலே, இவரகள கூறிய யாவும உணமையே யெனினும யாம அபபகையைத தெரி தறகு முன செயறபாலனவுஞ சிலவுள நிமிததிகனுற குறிககபபடட அமமாநதா நமககுப பகைவாதாமோ அலலரோ எனபதை முனனம தோநது பினபு செயய வேணடியவறறைச செயவோம அஙஙன மினறி,

"பகைய லாதவ ரைபபகை யாககலும
நகையில தீமனத தாரைநண பெனனலும"

பினனாத துனபததை யுணடாககும ஆதலால, சுரமை காடடுபபதி பயாபதி மனனனிடதது யாம இப பொழுது திறைவாஙகி வருமபடி சிலரை யனுபபுவோம அவன அவரகளை மதிதது திறை கொடுததானாயின அவனைப பகைவனலலன எனபோம இலலையாயின, அவன நமககுப பகைவனெனத தோநது அவனை யழிகக வழி பாரபபோம" எனறு உரைததனன

அசசுவ கணடனும, 'இதுவே நனறு' என அவன மொழிக கிசைநது, தூதரகளுககு, 'பயாபதி மனன னிடஞ செனறு திறைபபொருள வாஙகி வாருஙகள' எனக் கடடளை யிடடு ஒரு திருமுகமும கொடுததனுப பினன அவரகள செவவரக்குணடடிய கோலைக காஙகி, இரு புறமும பொறிவைதது எழுதிய திருமுகததைக கைபபறறி விசுமபாறுககச செனறு, விணணையும முட டும உயரநத மாடமாளிகைகளும கூட கோபுரஙகளும

நிறைந்த போதனமா நகரத்தை யடைந்தார்கள். அடைந்தவர்கள் நகரத்தினுட் பிரவேசித்து, அந்நகர் வீதிகளின் ஒழுங்கையும் உயர்ந்த மாடங்களின் பொலிவையும் மாந்தர்க ளணிந்துள்ள அணி பணிகளின் மிகுதியையுங் கண்டு, 'விஞ்சையர் செல்வமும் ஒரு செல்வமோ!' என வெறுப்புற்று வீதிவழிச் சென்று பயாபதி மன்னனது அரண்மனை வாயிலைக் குறுகினர். அங்கே வாயில் காவலன் உருவின கத்தியுங் கையுமாகக் காவல் புரிந்து கொண்டிருந்தனன். அவர்கள் வாயிலோனைக் கண்டு, “கடை காப்போய், விஞ்சைய ருலகையாளும் அச்சுவ கண்டனுடைய தமர்களோ சிலர் வந்திருக்கின்றன ரென்று உம் மரசனுக்குத் தெரிவிப்பாய்” என்று உரைத்தார்கள். அவன் அங்ஙனே சென்று அரசனுக்குத் தெரிவிக்க, அவன், “அவர்களை உள்ளே வரவிடுவாய்” என்றனன். வாயிற் காவலன் அவ்விஞ்சைய தூதரிடம் வந்து கூற, அவர் அரசன் சமூகம் சென்று வணங்கி அச்சுவ கண்டன் கொடுத்தனுப்பிய திருமுகத்தை நீட்டினார்கள். அரசன் அதைப் பெற்று வாசகன் கையி லீந்து வாசிக்கச் செய்தனன். அச்சுவ கண்டன் தூதரும் அக்கடிதத்திலுள்ள வாசகத்தையே தம் வாயினாலும், “ஆடகச் செம்பொன் ஆயிரங் கோடியும், சங்க ராசியும், சங்கு ஈன்ற முத்துக்களும், பவளங்களும், அகிற் கட்டைகளும், பீதாம்பரங்களும், முத்துக்களையுடைய வேழ மருப்புக்களும், வெண்சாமரைகளும், இன்னும் பிற அருங்கலங்களும், பல பண்டங்களும் எம்மிறைவனுக்குத் திறைப் பொருளாகக் கொடுத்தனுப்புக. இஃது எங்கள் உரையன்று; அரசர்க்கரசனும் ஏக சக்ராதிபதியுஞ் செலுத்தும் எங்கள் சக்கரவர்த்தியினது ஆஞ்ஞை’ என்றார்கள்

இதனைக் கேட்ட பயாபதி மன்னன் வேறொருவன் எறிந்த கல்லைப் புறத்தே நீக்காமல் கடைவாயினுள்ளே அடக்கி வைக்கின்ற வேழமே போலத் தன்னகத் தெழுந்த சினத்தை உள்ளடக்கிக்கொண்டு, "ஒருவன் கலையறிவும் நற்குலமும் நற்குணமும் நல்லொழுக்கமும் ஒருவாறும் பழிக்கலாகாப் பெருந்தகைமையும் பெற்றுள்ளா னெனினும், அவனும் வேறொருவன் கூறுவன கேட்டுப் பணிபுரிந்து வாழ இறைவன் அமைத்துள்ளான். மிக்க புகழுடைய மன்னன் உவப்பச் செய்வன செய்து அவன் கீழ் வாழ்கின்ற நமது இவ்வரசும் ஓர் அரசாகுமா? இவ்வாழ்வும் ஒரு வாழ்வாகுமா? இதனைக் கண்டும் இவ்வற்ப வாழ்வில் வைக்கும் ஆசையைத் தவிர்த்தோமல்லேம். இது சால அழகிது! நம் முன்னோர்களும் இவ்வச்சுவகண்டனுக்கு இறை செலுத்தியே முறை செலுத்தியிருக்கின்றார்கள். நாமும் அவ்வாறே செய்து, இவன் பகைக்கு ஆளாகா திருப்போம்" என்று மனத்துட் கொண்டு, கோலங் கையுமாய் நிற்கும் கேசரரை நோக்கி, "விஞ்சைய தூதர்களே, உங்கள் அரசன் விருப்பப்படியே யாம் எல்லா மளிக்கின்றேம். அவற்றையும் யாம் கூறும் இனிய வசனங்களையும் நும் மரசனுக்குக் கொடுங்கள்" என்று சொன்னான்.

பின்னர் மன்னன் தான் வேற்றரசனுக்குத் திறை கொடுப்பதான இதனைத் தன் குமாரர்கள் அறிவார்களாயின் அனர்த்தத்துக் கிடமாகுமென்று விஞ்சைய தூதர்களை விரைவினிலனுப்பக் கருதி, அச்சுவகண்டன் வரைந்தனுப்பிய விருப்பப்படி ஆயிரங்கோடிப் பொற்காசுகளையும், சாதிப்பவளம், சங்கீன்ற முத்து, அகிற்கட்டை, யானைக்கோடு, சாமரை முதலிய பொருள்களையும், இன

னும் பல சிறந்த ஆடையாபரணங்களையும் அச்சுவ கண்டன் மன முவக்கும்படி கொடுத்துத் தூதுவர்களையும் சிறக்க உபசரித்து அவர்கள் விஞ்சையருலகு செல்ல விடையும் அளித்தனன். விடை பெற்ற விஞ்சையர்கள் அரசன் அளித்த மானங்களைத் தங்கள் விமானத்தி லேற்றித் திரையிட்டு மறைக்கும் சமயத்தில் அரச குமாரராகிய விசயதிவிட்டர் அதனைக் கண்டனர். கண்டதும் அவருள் இளையவனான திவிட்ட குமாரன் அருகிருந்தவர்களை நோக்கி, "இவர்கள் யாவர்? இங்குள்ள நவ நிதிகளை இவர்களுக்கு அளித்தவர் யார்? இங்கே நடந்தது என்ன?" என்று வினவினன். ஆண்டுள்ளோர், 'உண்மை கூறின் பாது நிகழுமோ!' என்ற அச்சத்தால் ஒன்றுங் கூறாதிருந்தனர். அப்பொழுது அங்கே நின்ற பூதம் போல்வாள் குறமகளொருத்தி அவனை நோக்கி, 'ஐயனே, வித்தியாதர வுலகத்திலே உத்தர சேடியை யாளும் மன்னர் மன்னன் அச்சுவ கண்டன் திறை வாங்கி வரும்படி தங்கள் தந்தையாரபால் சில தூதர்களை யனுப்ப, அவர்கள் இங்கே வந்து நம் மரசரிடம் இப்பொருள்களைப் பெற்றார்கள். இதுவே இங்கு நடந்தது" எனப் பணிவுடன் கூறினள்.

திவிட்டன் 'திறை' என்னும் உரையைக் கேட்டதும் அடங்காத கோபங் கொண்டான். அவன் முடியில் தரித்திருந்த இரத்தின கிரீடத்தினின்றும் முத்துதிர்வது போலக் கோபத்தினால் நெற்றியினின்று சிறு வியர்வை துளித்தது. தன் முடியின் மீது அடியுண்ட பட நாகம் போன்று அவன் தன்னிரு கண்களை நெருப்பெழ விழித்தது, கோபச் சிரிப்புச் சிரித்தது,

"என்னே எம மாச வாழககை! உலகததில உழவுத் தொழில புரிநது வாழந்து அரசாககு வரி செலுததி அவா வழியொழுகும குடி மககள போல யாமும வேறொரு வேநதனகீழக குடியா யிருநது, அவன கேட்ட திறைப பொருளைக கொடுதது வாழவோமாயின இவவாழககை மிக அழகிதே!" எனப பேசி, விஞைசய ாகளை நோககி, "மயககததையுடைய விஞைசய தூதாகாள, யாஙகள திறை கொடுததாற பிழைகது வாழலாம, இலலையேல வாழுதல இலலை யெனின, தோளினுலும வலிபெறற இததாளினுலும ஒளி வீசும இவவாளினுலும யாஙகள யாது பயனைப பெற விருக் கினறோம்? தன பாாவையினுனே விடம பரவச செய யும திட்டி விடம எனனும பாமபினது பட நடுவிலி ருககும மணியைக கொளளக கருதிய மடமையன போனறவன தும மனனன அருமபெரும பொருள களின மேல தும்மாசன ஆசை யுடையனுயின, இனி இச செருககினுலும படையின பெருககினுலும அசசு றுததிப பொருள கவாதல அரிதினும அரிதாகிவிடும பணடைக காலததிலே பலமிலலாக பாா வேநதரிடத திலே ஆளனுா சககாததைச செலுததி அசசுறுததிப பொருள கவாநத ஏழைகாள, எமமையும அவவாறு வெருட்டித திறை வாஙகுவதை விட்டு நலவழி தேடி உயிா வாழக கடவீாகள அனறெனில், நும அரசன வறிதே அவவரையினம் இருபபதில என்ன பயன? எணடு வாதது அவன வேணடியவறறைக கேட்டால யாம பாஞ்ஞொபகாரம செயது சுவாகக லோகததையும ஆளத தருவோம" எனறு பல வீர வாாததைகள கூறினன பினனும அவன, "உஙகள அரசனை நான மகளிா போலப பினனால இகழநதுரைபபதில பய

ளென்னே? நீங்கள் உங்களரசனிடஞ் சென்று, யாங்கள் திறை யிறுப்ப தில்லையென்றும், திறையிறுத்தார் மாட்டுத் திறை பெறுவோன் முறைப்படி நடக்க முயன்று கொள்க வென்றும், நாங்கள் அதற்கெல்லாம் சித்தமா யிருக்கின்றோ மென்றும் அறிவியுங்கள்" என்று தூதர்கள் மன நடுக்கங் கொள்ளுமாறு கூறி, திறைப் பொருள்களை மீட்டுக்கொண்டு, அவர்களை, "உங்கள் வழி பார்த்துச் செல்லுங்கள்" என்றனன் அவர்கள் பெரிதும் அச்சமடைந்து வெட்கி, 'நம் அரசனுக்கு இப்பகை மிக்க வலிதாயிற்று' என நினைந்து விமான மூர்ந்து விண்ணிற் பறந்து விந்தியாதர வுலகை யடைந்தார்கள் பயாபதி மன்னன் திறைப் பொருள் மீண்டதையும் திவிட்ட குமாரன் வீரமாய்க் கூறியதையும் அறிந்து, 'இனி என்ன விளையுமோ!' என ஏங்கி, எண்ணமிட்டுக் கொண்டிருந்தனன் விசயதிவிட்டர் உல்லாச மனத்தராய்த் தம் காரியம் பார்த்துச்சென்றனர்

வெறுங்கையர்களாய்ச் சென்ற விஞ்சைய தூதர்கள் தங்கள் வேந்தனிடஞ் சென்று நிகழ்ந்தவற்றைக் கூறுவதற்கு அச்ச முடையவர்களாய், சமயத்திற்குத் தக்கவாறு சூழ்ந்து அறியும் பேரறிவினைப் படைத்த அமைச்சன் அரிமஞ்சு என்பானைக் கண்டு நடந்தவற்றைக் கூறினார்கள் அறிவிற் சிறந்த அரிமஞ்சு அதனைக் கேட்டு, "நம் மன்னன் இச்செய்தியைக் கேட்பானாயின் சிறிதும் பொறுமை கொள்ளான். ஆதலின், இதனை அவசரப்பட்டு அரசனிடம் தெரிவிக்காமல், நாமே இவ்வலிய பகையைத் தொலைப்பதற்கு வழி பார்க்க வேண்டும். திவிட்டனோ இளையன், நல்லது கெட்டது தெரியாமல் வாய்க்கு வந்தவாறு பேசியிருக்கின்றனன்

அவனை ஒரு மாயக்காட்டி மலைக் குகையிலுள்ள சிங்க மொன்றிற்கு இரையாக்க வேண்டும்" என்று தனக்குள் தீர்மானித்துக்கொண்டு, விஞ்சையில் வல்ல அரிகேது என்னும் வித்தியாதரனை வரவழைத்தான். அவன் வந்ததும் அவனுக்கு அவன் நடந்த செய்திகளைக் கூறி, அவன் ஒரு மாயச் சிங்க வடிவெடுக்குமாறு ஏவி, மேற்செய்ய வேண்டுவனவான காரியங்களையும் பணித்துப் போதனமா நகருக்குச் செல்ல விடுத்தனன்.

அரிகேது ஒளி விட்டுப் பிரகாசிக்கின்ற அக்கினிச் சுவாலை போலும் மயிரொழுங்கினையும், மலைகளையும் கிழித்துப் பிளக்கும் வலிய நகங்களையும், இளம்பிறைச் சந்திரனை யொத்த ஒளி வீசும் வளைந்த பற்களையும், நெருப்புப்பொறி கக்குவன போன்ற கண்களையும், இடியேறென அதிரும் பெருவாயினையு முடையதாய்ப் பயங்கரத்தை விளைக்கத் தக்க அரிமா உருவெடுத்து, வெள்ளி மலையினின்று நீங்கி, இமய வரை கடந்து, சுரமை நாட்டை யடைந்து, பெருங்குரலெடுத்துக் கர்ச்சித்தனன். அதனால் மண்ணும் விண்ணும் நிலை கலங்கிக் குலுங்கின, காட்டிலுள்ள செடி கொடிகள் பொடியாயின, வேழமாதி மிருகங்கள் வீறிட்டலறின, கருங்கற்கள் புடைபட்டாற்போலப் பொடியாகிச் சிதறின. மாக்கள் இடியோசை கேட்ட பாம்பென மயங்கிப் பறக்கடித்துச் சோர்ந்து பார்மீது விழுந்தனர்.

அரிகேது இங்ஙனம் சென்ற பின்னர், பயாபதி மன்னனிடம் முன்னம் தூது சென்ற காலவரையும் அரி மஞ்சு அழைத்து, "நீங்கள் மீண்டும் போதனமா நகருக்குச் சென்று, திவிட்ட குமாரனிடம் சிங்கத்தின் செய்

திறையைக் கூறிப் பயமுறுத்தி வாருங்கள்" என ஆணையிட்டு அனுப்பினான். அவர்கள் அவ்வமைச்சன் ஆணைப்படி, சிந்து நதி பாயும் சுரமை நாட்டின் தலை நகராகிய போதனமா நகரத்தை யடைந்தார்கள். அப்பொழுது விசயதிவிட்டர் கரி பரி தேர் காலாட்கள் சூழக் கண்ணியமாய வீதி வழியே பவனி வந்துகொண்டிருந்தனர். அவர்களைத் தூதர்கள் வணங்கி, அவர்களுள் திவிட்டனை நோக்கி, "அரச குமாரரே, உம் தந்தையார் தந்த திறைப்பொருளை நீர் தடுத்துப் பற்றிய செயலையும் கடுத்து மொழிந்த உரையையும் எம்மரசனுக்குத் தெரிவித்தோம். அவன் நன்று நன்றெனக் கூறி நகைத்து உருத்தனன். யாங்கள் அப்பொழுது, 'இங்ஙனம் செய்தவன் மிகவும் இளைஞன்' என்றோம். அவ்வளவில் அரசன் தனக்குப் பெருமையும் போற்றலும் ஆணை செல்லும் பேறும் உள்ளனவென நினைந்து, வேறொன்றும் செய்யாது, 'சிறுவன்! அறியாம லுரைத்தான்!' எனக்கொண்டு கோபந் தணிந்து, எங்களை நோக்கி, "நீங்கள் போதனமா நகருக்குச் சென்று, நமக்குக் கட்டிய கப்பப் பொருளை மறித்த சிறியனைக் கண்டு, 'எம்மரசர் உனது நாட்டை அழிக்க ஒரு சிங்கத்தை ஏவியிருக்கின்றார், நீ பலவானாகில் அவ்வரியைக் கொன்று வெற்றி கொள்க' என்று கூறி வரும்படி கட்டளையிட்டருளினன்" என்றார்கள்.

இதனைக் கேட்டதும் திவிட்ட குமாரன் கோபம் மேலெழக் கண் சிவந்து, அருகிருந்தோரை நோக்கி, "இவர்கள் கூறியபடி நமது நாட்டில் வயமா வொன்று புகுந்து நாட்டினரை வருத்துகின்றதோ?" என்று வினவினன். ஆண்டிருந்தோரும், "ஆம்! ஆம்! ஐயனே,

யாவராலும் கொல்லுதற் கரிய கோளரி யொன்று நமது சுவை காட்டிற் புகுந்து, கோடையிடி யெனக் கர்ச்சித்துக் கணக்கிலா உயிர்களைப் பருகிப் பருவரு முழையுள் வாழுகின்றது" என்றார்கள் என்றதும் திவிட்ட குமாரன் விஞ்சைய தூதரை நோக்கி "விஞ்சையர்களே, யான் இன்னே சென்று, என்னிரு கைகளுமே பெரும் படைக் கலன்களாகக் கொண்டு, அச்சியம் வீய அதன் முழைபோன்ற வாயைப் பிளப்பன் அங்ஙனம் பிளவா விடின், உங்கள் அரசன் பேயன்போலச் சிறு பிள்ளை யென்று எள்ளிக் கூறிய வசையற்ற சிறியவனே யான் ஆகக் கடவன்" என்று சூளுரை புகன்று, கனைத்த தொடாத நால்வகைப் படைகளையும் உழையரையும், 'என்னுடன் வாரார்கள்' என விலக்கித் தனியாய் வயமா உறையும் வரை நோக்கி நடந்தனன் தம்பி அங்ஙனஞ் செல்வதைப் பொறுக்க தண்மதி வண்ணனாகிய விசயனும் திவிட்டனைத் தொடர்ந்தான் தம் தந்தை மடிமீதும் தாதிசோர் மலர்மீதும் தந்தியின் முடிமீதுமே யன்றி வறுநிலம் பட்டறியாத் தம் பாதங்களிற் பருக்கைக் கற்கள் உறுத்த அவ்விருவரும் பாதசாரிகளாய்க் கடந்து, உருமெனக் குமுறி உயிர் பருகும் அவ்வரிமா உறையும் மலைச்சாரலை யடைந்தனர்.

அடைந்த வீரரைக் கண்டதும், அவ்வரிமா எல்லா வுலகங்களும் நடுங்க, மலைகள் பிளக்க, கற்கள் பொடிப்பொடியாய்ச் சிதறிப் பாவப் பெருமுழக்கஞ் செய்தது. திவிட்ட நம்பியும் அதற் கெதிராக அண்ட மெல்லாம் அதிர ஊர்த்து ஆர்ப்பரித்தான் இவ்வாறாய பரிப்பினால் மாயவேடம் கொண்ட சீயம் பயந்து தன்

காபம் பனிக்க ஓட்டம் பிடித்தது. திவிட்ட காளையும், 'அவ்வியமா எங்கே! எங்கே!' என்று ஆர்த்துக் கூறிக் கொண்டு இமயவரையும் எண்டிசையும் இரு விசும்பும் கிடுகிடென நடுங்கக் கடிய வேகங்கொண்டு அதன் பின் தொடரலாயினன். அங்ஙனம் அவன் தொடருவதைக் கண்ட அம்மாயச் சிங்கம் ஆவென அலறி ஒரு முழை யிற் புகுந்தது. திவிட்ட குமாரன் அதனைக் கண்டு தீவிரமாய் ஓடி அம்முழைவாயிற் சோர்ந்து பேரொலி எழுப்பினன். அப்பேரொலியினால் நிலமும் கம்பித் தது; நெடுமலையும் அதிர்த்தது. அக்குகையுள் உறைந்த உண்மைச் சிங்க மொன்றும் துயில் நீத்து எழுந்தது. எழுந்த அது முழையின் முகத் துவாரத்திலிருந்து வரும் பெருஞ் சத்தத்தினைக் கேட்டுக் கடுங்கோபங் கொண்டு, கண்கள் சிவக்க நிமிர்ந்து எழுந்து பேரிடிபோலக் கர்ச் சித்தது. அக்கர்ச்சனையால் அசையா மலையும் அசைந் தது; பிளவாய்ப் பிலமும் பிளந்தது. அதன் கண்ணின் கனலாலும் பற்களின் ஒளியாலும் அக்குகை யிடத்து நெருங்கிய இருள் கெட்டோடிற்று. இவ்வாறு கன்ன றெழுந்த அவ்வியமா கன கூரிய நகங்களை நீட்டி, புழை யென அகன்ற பெருவாயைத் திறந்து, திவிட்ட நம்பி யின் உதிரத்தைப் பருகுவான் வேண்டி அவன் மார் பகத்தைக் குறியாகக் கொண்டு பாய்ந்தது. அதைக் கண்டு இமையா நாட்டம் பெற்ற தேவரும் தம் இரு கண்களையும் கைகளாற் புதைத்து உடல் பனித்தனர். திவிட்ட குமாரனோ சிறிதும் அஞ்சாது, தன் மேற் பாயும் சிங்கத்தினுடைய பிடரியின்மேற் சடக்கெனப் பாய்ந்து மிதித்து, அதன் விரிந்த பற்களைக் கொண்ட மேல் வாயினையும் கீழ் வாயினையும் உறுதியாகக் கை

கனாறப் பற்றி, அஃது இரு கூறுகும்படி கிழித்தெறிந்தான். பராக்கிரமம் படைத்த கோளரி இரத்தம் கக்கிக்கொண்டு பாரீந்து விழுந்து இறந்தது. ஆயிரமாயிரஞ் சிங்கங்களோடு போரிட்டு வென்ற இப்பெருவலிச் சீயத்தைத் திவிட்டன் அறுகம்புல்லைக் கிழிப்பதுபோலக் கிழித்தெறிந்ததைக் கண்டு விண்ணிலுள்ள பண்ணவர், 'ஆ! ஆ!!, இவனது பெருவலிதான் என்னே! என்னே!!' என்று கூறி, வாயில் விரல் வைத்துக் கண் மருண்டு நின்றனர். பேராற்றல் படைத்த திவிட்டன் செய்தற்கரிதாகிய இக்காரியத்தைத் தான் செய்தமைக்குச் சிறிதும் செருக்கடையாது, தன் முன்னோன் விசய விருக்குமிடஞ் சென்று அவனை வணங்கி, "பெரியீர், அடியேன் அவ்வரிமாவைக் கிழித்தெறிந்தேன். இனி நாம் போதனமா நகரம் போகலாம், வம்மின்" என்றனன். விசயன் அம்மொழி கேட்டு மகிழ்வடைந்து, தம்பியைப் பலகாலும் புல்லி, "தம்பி, நாம் இம்மலையடிவாரத்தின் வளப்பினைக் கண்டு பின்பு நமது நகருஞ் செல்வோம்" என்று சொல்லி இளைய நம்பிக்கு அவ்வரையின் சாரலிலுள்ள விநோதங்களை யெல்லாங் காட்டி மகிழ்ச் செய்தனன். திவிட்டன் அவ்வன விநோதங்களை யெல்லாங் கண்டு மகிழ்ந்தபின் விசயன் அவனை யழைத்துக்கொண்டு போதனமா நகரத்தை நோக்கிப் புறப்பட்டனன். வழியில் விசயன் திவிட்டனை நோக்கி, "நம்பி, உலகிலுள்ள சீவராசிகளுக்கு உறும் துன்பங்களைப் போக்கி இன்பம் அளித்தலே இறைமை செலுத்தும் அரசனது கடமையாகும்

'கறறவா, கடவுள தானரு சோததவா, களைகண இலலா,
அறறவா, அதத ஞளா, அனறியும அனைய சீராக
குறறதோா இடுககண வாதால உதவுதற குரிததன ருயின
பெறதவில வுடமபு தனனால பெருமபயன இலலை மனனே '

மனனுயிாகளினது வருததததினைக கணடும, காம சுக
மாக வாழவதனையே பெரிதாகக கொணடு வாழும
மனனாது ஆணமை அவி பெறற அழகு போனது பய
னினறி யொழியும நமது நாடடினை நாசஞ செயது
வாத அரிமாவின உடலைக கிழிதது அனைததுயிருங
காதத நினனைபபோலத தமககுறும துனபததைப
பொருடபடுததாது மனனுயிாத துனபங களைநது காககு
நாதம கீாததியனறோ இநநிலவுலகததில எனறும நினறு
நிலவுறும? ஒருவனுககுப பொருநதிய உடலம இரணடு
உணடு அவை புலாலுடமபும புகழுடமபுமாம முற
கூறிய உடமபு சில கால இருநது அழிவுறுவது பின
னது உலகம போறற எனறும அழியாது சிறபது''
எனறு இனனோனன சில நனமொழிகளைக கூறித
திவிட்டணைப புகழநதுகொணடு செனறனன

அவவிருவரும போதனமா நகாம குறுகும
பொழுது இரவியும அதத கிரிபோ யடைநதான் குமா
ரிருவரும கோபபுறககதே வருதலை யறிநத மநதிரிகள
கரி பரி தோ காலாடகளுடன செனறு வணஙகி,
அவரை அரச யானையின பிடரிமேறறி ஊரை வலஞ
செயவிதது, அரசனது கோயிலின முன கொணடு
வநது நிறுததி அரசனுககு அவாகளது வரவைத தெரி
விததாாகள அரசன, 'அவாகளை உளளே அழைதது
வருக' எனக கடடளையிட, அவாகள அரசவாயிலினறு

பிறந்த அரண்மனை புகுந்து, தம் பிதாவின் கட்டளையின்றிச் சிங்க வேட்டைக்குச் சென்றமைக்காகத் தம்மீது யாது குற்றம் சாற்றப்படுமோ வென அஞ்சி, அரசன் சமுகஞ் சார்ந்து, அவன் அடிகளிற் பணிந்து ஒரு புறம் ஒதுங்கிப் பயத்தோடு நின்றார்கள். அரசன் அவர்களைப் புத்திரவாஞ்சை கொண்டு மார்புறத் தழுவி உச்சி மோந்து மகிழுமளவில் அவர்கள் சிகைகளில் வனச் சருகு படிந்திருத்தலைக் கண்டு, "குமரர்களே, உங்களது குடுமியில் வனச் சருகுகள் படிந்திருப்பதற்குக் காரணம் என்ன?" என்று வினவினன். அதற்கு விசயன், "தந்தையீர், நமது நாட்டில் பெருவலி படைத்த சிங்கமொன்று புகுந்து, நாட்டையும் நாட்டை யடுத்த காட்டையும் பாழாக்கியது. அதனை அச்சுவ கண்டன் தூதர் வந்து அறிவிக்க, திவிட்ட நம்பி இமய மலைச்சாரலை யடைந்து அச்சிங்கத்தின் வாய் பிளந்து அதன் உயிரைப் போக்கினன். அவனோடு அடியேனும் அச்சாரலை யடைந்தேன். அதனாற்றான் எம்மிருவர் சிகைகளிலும் வனச் சருகுகள் படிந்தன. இது விஷயத்தில் தங்கள் உத்தரவின்றி நடந்தமைக்காகத் தாங்கள் எங்களை மன்னித்தருளப் பிரார்த்திக்கின்றோம்" என்று கூறி மீண்டுமொரு முறை வணங்கினன். அரசன் தன் மக்களது ஆற்றலுக்கும் பணிவுக்கும் மிக மகிழ்ந்து அவர்களை நோக்கி, "இனி நீங்கள் கோயிலை யடைந்து பள்ளி கொள்ளுங்கள்" என்று விடை கொடுத்தனுப்பினன். அவர்களும் அவ்வாறே சென்று தங்கள் மலர்ப் பாயலில் படுத்துக் கண்படை கொள்வாரானார்கள்.

# VI

## திவிட்டன திருமணம

திவிட்ட குமாரன கோவரியின வாய பிளநத செயதியைத தூதுவா மூலம அறிநத சுவல னசடி பெருமகிழ வடைநது குமாரயினுேரோடு ஆலோ சிததது, 'சுயமபிரபையைத திவிட்ட நமபிக்கே மணஞ செயது கொடுபபன' எனத தீாமானிததனன தீரமா னிததவன மண விளையை மணணுலகுககுச சென்று போதனமா நகாததில நடததக கருதினன தான அங குச சென்று மீளுமளவும இரத நூபுரததைக காககும பொருட்டுத தன இன்னுயிா நணபாகளாகிய வாதத மரன புரதது வேகதன பிரீதி வாததனன, கநதருவ நகாக காவலன விருககடி, கநதமாதன மனனன திவா கரன, சககரவாளப புரவலன வசசிர தாடன, தேவா வணக காசன இரமிய தரன, விசய கூடச செமமல வேக ரதன, கிருதமாதனத காபதி கருடாஙகதன, சேசபனபுர பூபதி சிததிர தரன ஆகிய அரசெணமரை அவன அழைதது, 'யான மீணடு வருமளவும என நக ரைக காவல செயமின' என நியமிததுப பினனாத தன னருகாயிருேரைப பாாததது, 'நாலவகைப படைகளையும ஒருகப பணணுறுததிக கொணாக' எனக கடடளை யிட்டனன அவாகள அபபடியே சதுரங்க சேனை களையும அலங்கரிதது அவன முன கொணடுவநது நிறுத தினாகள அதன பின, சுயமபிரபையின காவலுக காக அமராபுரத தரசனும சுவலனசடியின தமபியு

மாகிய சுவலன ரதனும், அரிபுரத் தலைவனும் சுவலன சடிக்கு மருமகன் முறையானுமாகிய வியாக்கிர ரதனும், சடி யரசன் புத்திரனாகிய அருக்க கீர்த்தியும் நால்வகைப் படைகளையும் திரட்டிக்கொண்டு வந்து அரசன் சேனை யுடன் கலந்தார்கள். சுயம்பிரபை ஏறிச் செல்லச் சுந் தரமான விமானமொன்றை அரசன் நிருமித்தான். அது பொன்னினாலும் மின்னென்ன ஒளி வீசும் பல மணிகளி னாலும் இயன்று விண்ணிலும் மண்ணிலும் அதற்கிணை யில்லையென்னும்படி விளங்கிற்று. அவ்விமானத்தில் அணங்கனனாள் சுயம்பிரபையை அமர்த்தும்படி அர சன் கன்னிமாடங் காக்கும் சேடியர்களுக்குக் கட்டளை யிட்டனன். சேடியர்கள் சுயம்பிரபை யிருக்கும் கன்னி மாடத்தை யடைந்து அரசனது கருத்தை வெளியிட் டார்கள்.

சுயம்பிரபை சேடியரது மொழி கேட்டுப் பஞ் சணையினின்றும் இறங்கி, ஏவல் மகளிரும் காவல் மக ளிரும் தன்னைச் சூழ்ந்து வர, அன்னமென மெல்ல நடந்து தன் நற்றாய் தங்கும் மனையடைந்து அவளைக் கண்டு அவள் பாதங்களில் விழுந்து நமஸ்கரித்தனள். மின்னற்கொடியெனத் தன் தாள்களைப் பற்றிய மகள் சுயம்பிரபையைத் தாய் வாயுவேகை யெடுத்து முத் தமிட்டு உச்சி மோந்து உவகை பெருக்கி, அவள் அங் கத்திற்குப் பொருத்தமான ஆடையாபரணங்களை யணி வித்துச் சீராட்டி யிருக்கு மளவில், அரண்மனைப் புரோ கிதர் நன்முகூர்த்தம் கூடினமையை அரசனுக்கு அறி வித்தனர். அரசன் அதனை மகட்கறிவிப்ப, அவள் ஐவகைத் தாயர் மெய் விடாது அருகில் வர, காவல் செய்யும் கன்னிகையர் நாற்புறமும் சூழ்ந்து தொடர,

கொஞசி வளாதத கிளி நாகணவாயப புளளாஇயோடும விளையாடும பநது பதுமை முதலியவறறோடும கண ணைப பறிககும மினனலொளி போனற அவவிமானததி லேறி யமாநதனள சடி யாசனும படைகள புடை சூழ, முரசு, சஙகம, கொமபு, சிறுபறை, முழவு முதலிய வாததியஙகள கோஷிகக, அரசு யானையினமீது ஆரோ கணிததனன மறறையரும தததம வாகனஙகளி லேறி ஆகாய வழியாககக கடல பெயாநது சென்ற தெனனுமபடி சென்றனா

இஙஙனம அவாகள விணணூாககச் செல்லும பொழுது, சுயமபிரபையின விமானததில அவளுடன அமாநதிருநத அவள உயிாததோழியாகிய அமிாத பிரபை எனபாள விமானததின சாளர வழியாகப பூமியி லுளள ஆறு, மலை, மிருகஙகள முதலியவைகளி னுடைய தோறற விநோதஙகளைச சுயமபிரபைககுக காட்டி, "நஙகையா திலகமே, அதோ பாா! அககஙகா நதி நமது மலையினும உயாநத பொன மலைச்சாரலினின றும உறபததியாகி வருவதாகும அதன இரு கரை களிலுமுளள சோலைகள கறபகச சோலைகள போனறே பொலிநது விளஙகுவதைக காண. விசுமபாறுகச செல லும நமககு அவை மிகச் சிறியனவாயக காணபபடி னும, அஙகுளளாாககு நமது வெளளி மலையினும விரு பய நெடுமை யுடையனவாயத தோனறும. கஙகை நதி வரையினின்று மடிதது வரும சநதனக கட்டை களைத தன திரைகளாகிய காங்களால சாநதரைககும மடவாள போலக் கரையிலரைதது, மேல பொஙகும நுரைகளாகிய சநதனக் குழமபினை வழிததெறியும விநதையினைச சிநதை யறிய நனறுபபபாா அஙகிரின

வேகமும் அலைகளின் ஒலியும் குணகடல் சேருமளவும்
இவ்வாறே யிருக்கும். அதற் கப்புறம் தெரியும் அந்த
நதி அதே மலையிற் பிறந்து நமது வெள்ளி மலையின்
ஒளிரிய முழைவாய் நுழைந்து செழுமணிகளைச் சிதறிச்
செல்வதாகும் சிந்து நதி. அது தனது அழகிய திரைக்
கரங்களால் நுரைகளாகிய புஷ்ப பந்துகளை அடித்து
விளையாடுவது போலவதைக் காண். குடகடல் சேரு
மளவும் அஃது இயங்கனமாகவே திரை சுருட்டிச் செல்
லும். பாகனைய இன்மொழியாய், இன்னமும் பார்.
மேக மண்டலத்தில் நம் சேனைகள் அதிரச் செல்லு
தலால், இள யானைகளைக் காத்துக்கொண்டிருக்கும்
மலைபோன்ற பெரிய யானைகள் கருக்கொண்ட மேகம்
முழங்குகிறதெனக் கொண்டு, அடங்காக் கோபத்தன
வாய்ப் பிளிறுகின்றன. கனியினும் இனியாளே, அதோ
தெரிகின்றவற்றை உற்றுப் பார். அவையெல்லாம்
நெடுங்குன்ற மலை. கறுத்த பெரிய களிறுகளே அவை
கள் தம் மருப்பினாலே மலைகளைக் குத்தி விளையாட,
அதனாலே மலைகள் சரிய, அவைகளிலிருந்த நவ மணி
கள் ஆற்புறமும் சிதறி ஒளி விட்டு விளங்குவது நமது
மனத்தைக் கவர்கின்றது. பொற்கொடியே, பைங்
கண்ணையும் செம்முகத்தையும் பருத்த துதிக்கையையு
முடைய களிற்றினங்கள் தங்கள் பக்கலிலே பிடிக்கணம்
அடுத்து வரப் பெருமலைகளி லிருந்து சளசளவென்
றோடிவரும் அருவி நீரினைத் தங்கள் தடக்கைகளாலே
புடைத்து நீராடி, அவ்வருவிகளின் கரைகளிலே
கொழிக்கப்பட்டுக் கிடக்கும் செம்மணிப் பொடிகளை
வாரித் தங்கள் மத்தகத்தின் மீதெறிய, குங்குமப்பொடி
யென அவை சிரங்களிடையே படிந்து பொலிவதைக்
காணுதி. கொஞ்சும் கிளிமொழியாளே, நமது

விமானஞ் செல்லும் வேகத்தினால் காணப்படும் மலைக ளெல்லாம் நம்மைப் பின் தொடர்ந்து ஓடி வருவன போலக் காணப்படுகின்றன வல்லவா? அவையெல்லாம் உண்மையில் நம்முடன் ஓடி வருவனவல்ல. இதனை எப்படி அறியலா மென்றால், சலனமுறும் பூமியிலிருக் கும் நமக்குச் சலனமில்லாத சூரியன் சலன முறுவது போலக் காணப்படுவதனா லறியலாம். இதன் தோற்ற மும் செயலும் எவ்வளவு அழகா யிருக்கின்றன! பார்!" என்று இவை போல்வனவாகிய பலவற்றைப் பற்றி வருணித்து வர, யாவரும் சிந்து நதி பாய்ந்து வளம் பல கொழிக்கும் சுரமைநாட் டெல்லையை அடைந்தனர். அடைந்தவர் தம் ஊர்திகளையும் விமானங்களையும் போதனமா நகரம் நோக்கித் திருப்பி, அந்நகரத்தின் அண்மையிலே ஓங்கிய திருநிலையகம் என்னும் பொழி லிடை இறங்கித் தம் யானைகளை மரங்களினும், பரி களைப் பந்திகளினும், தேர்களைக் கொட்டில்களினுஞ் சேர்த்து, தாம் தங்கி யிருக்கப் பல வகையான மண்ட பங்களையும், சுயம்பிரபை தங்கி யிருக்கக் கன்னியர் காவல் சூழ்ந்த கன்னி மாடத்தினையும், பள்ளியம்பலத் தினையும், பண்ணவன் கோட்டத்தினையும் நன்கு சமைத் தனர். சுயம்பிரபை விமானத்தினின்றும் இறங்கித் தனக்கென அமைத்த மாடத்திற் சேர்ந்திருந்தனள். மற்றவர்கள் தங்கள் தங்கள் மண்டபங்களிற் றங்கி இளைப்பாறினார்கள்.

இவர்கள் இங்ஙன மிருக்க, முன்னம் பயாபதி மன்னன்பால் தூது வந்த மரீசி நகரத்துள் பிரவேசித்து அரசனது அரண்மனை புகுந்து அரசனைக் கண்டு வணங்கி, "மண வினையின் நிமித்தம் எம் விஞ்சை வேந்

தன் மகளுடனும் மற்றும் பரிவாரங்களுடனும் இந் நகரை யடுத்த திருமலை யகமெனனும் பொழிலிடத்தே வந்து தங்கி யிருக்கின்றனன்" என்றனன். இம்மொழி கேட்டு இறைவன் உடல் பூரித்து மகிழ்ந்து அருகிருந் தோரை நோக்கி, "நமது நகரத்திலுள்ளார் யாவரும் புத் தாடையும் பொன்னணிகளும் அணிக, போதனமா நகரத்தைப் பொன்னகர மென அலங்காரம் செய்க, எங்கும் மகர தோரணத்தை எடுத்துக் கட்டுக. நாற் சந்திகளிலே பழமணல் மாற்றிப் புது மணல் பரப்பி முத்துப் பந்தரிடுக. ஆடரங்கு சாலைகளில் பாடலொலி எழுப்புக. எங்கும் மணி விளக்கு ஏற்றுக. வாயில் தோறும் பூரண கும்பங்களை நிறைக்க. வீதிகளின் இரு மருங்கிலும் மலர் மாலை நால விடுக. அருகக் கடவுளின் ஆலயங்களில் முப்பொழுதும் திருவிழா விபற றுக. இரவலர் வேண்டிய வேண்டியாங்குப் பெறுதற்கு வருக. தேச தேச அரசர்களை யழைக்கத் தூதுவர்கள் ஏகுக. திருமலை யகத்துத் தங்கிய அரச குமாரியைக் காணற்குரிய பெண்டிரெல்லாம் தம்மைக் கோலஞ் செய்க. அவர்கள் ஏறிச் செல்லப் பிடியானைகளை அலங்காரஞ் செய்க. அங்கலல்லாருடன் படைக்கல மேந்திய வீரர்கள் காவல் புரிந்து செல்லுக" எனக் கட்டளை யிட்டனன். பின்னர்த் தன்னருகு நின்ற மரீசியை விளித்து, "என்னுடனே நம்மவர் இறங்கியுள்ள திருமலை யகப்பாடிக்கு வருக" என்று கூறி, அவனுக்கு ஆடையாபரண முதலிய பொருள்களை வழங்கி அவனை மகிழ்வித்தனன்.

அதன்பின் அரசன் தன் அமைச்சரை யழைத்து அவர்களுக்கு விஜயை வேந்தன் வரவு கூறி, "அவனை

நாம் எவ்வித மரியாதையோடு எதிர்கொள்வது? அவன் பால் நாம் செயற்பாலன யாவை? அவற்றைத் தெரிந்து உரைமின்" என அவர்களை உசாவினன். அவர்கள் அரசனை நோக்கி, "மன்னரே, விஞ்சையர் குலத்தி னாலும், குணத்தினாலும், கொண்ட கோலமா நலத்தி னாலும் நம்மை நிகர்ப்பவர், ஆனால், விஞ்சை கொண்டு போர் புரிவதில் நம்மினும் விஞ்சியவர். ஆதலால், அவ ருக்கு நாம் எவ்வகைப்பட்ட மரியாதையும் செய்யலாம். யாது செய்யினும் ஏதமில்லை" என்றார்கள். அரசன் இவை கேட்டு, "விஞ்சைய வேந்தன் தன் மகளை நம் கிளிட்ட நம்பிக்கு மணம் புரிவிக்க இங்கே மகிழ்ந்து கொணர்ந்த பெருமையாலும், நற்குணமும் நல்லறிவும் மிக்க நீவிர் எமக்கு அமைச்சராய் அமைந்திருத்தலாலும், எம்மினும் தவம் கிடந்தார் எவரு மிலர்" என்று சொல்லி மகிழ்ந்து, அரண்மனை வாயில் சென்று ஆங் குள்ள ஏவல் வீரரை நோக்கி, "பட்டத்து யானை நவிர மற்றக் கைம்மாக்களையும் புரவிகளையும் தேர்களையும் பண்ணுறுத்தி ஈண்டுக் கொணர்மின்" என்று கட்டளை யிட்டனன். அவர்கள் அங்ஙனே சென்று பந்திகளி லுள்ள பாகர்களுக்கு அரசனது ஆணையைத் தெரிவித்தார்கள். யானைப் பாகர்கள் யானைகளைக் கட் டுத் தறியினின்றும் நீக்கி அவைகட்கு அலங்காரமாக அணிய வேண்டிய ஆடையாபரண முதலிய பொருள் களை அணிவித்துப் பிடரியின்மீது பொன்னு லியன்ற பட்டில் மெத்தை வைத்துத் தைத்த அம்பாரியை ஏற்றி, இருமருங்கிலும் மலர் மாலைகளை அருவிபோலப் புரளவிட்டு அலங்கரித்து அரண்மனை வாயிலின் முன் னிடத்தே கொண்டு வந்து நிறுத்தினார்கள். தேர்ப் பாகர்கள் கொட்டிலினின்றும் தேர்களை வெளியிட்டு

திலே கொண்டாகது, அவற்றின் உச்சியிற் கொடிகளைக் கட்டிப் பக்கங்களிலே பல வித அலங்காரச் சீலைகளைத் தொங்கவிட்டுப் பின்னாகக் காற்றினும் கடியச் செல்லும் குதிரைகளைப் பூட்டி, யானை வரிசைகளின் பக்கத்தே அணி பெற இருத்தினார்கள். குதிரைப் பாகர் பக்தியினின்றும் குதிரைகளை வெளியே கொண்டுவந்து, அவற்றின் கழுத்துக்களில் மணிக்கோவை கட்டி, முதுகுகளில் சோகச வேண்டியவைகளைப் பொருத்தமாகச் சேர்த்து, முதுகில் அழகிய சேணம் அமைத்து, அவைகளை யானையணிதோணிகளுக்குச் சமீபத்தே வரிசை வரிசையாகச் சேர்த்தனர். காலாட் படைகளும் வாள் முதலிய படைக்கலங்களேந்தி, வீரக்கழல் கட்டிக், கச்சை வரிந்து, கவசம் பூண்டு, அணி அணியாக வந்தனனர். இவ்வாறு கரி பரி தேர் காலாட்கள் சமுத்திரம்போலத் திரண்டு அரண்மனை முன்னே வந்து நின்றதும், அரசன் மரீசியையும் மந்திரிகளையும் அழைத்து, 'யானைகளின்மீது ஆரோகணித்துச் செல்லுங்கள்' என விடை தந்தனன். அனந்தரம், அரசன் ஆணை மங்கை காரியங்களுக்குச் சித்திர நூல் எனப்போன யழைத்துத் திருநீல் பசும்பொழிலில் இறங்கியிருக்கும் விஜயைசையாக்கும் பொற்காசுக் குவியல்கள், நவரத்தினங்கள், நல்ல வாசனைத் திரவியங்கள், பழ வருக்கங்கள், வெற்றிலைச் சுருள்கள், பாக்குப் பெட்டிகள், பல நறுமலர் மாலைகள், கற்கண்டு, சாக்கரை முதலியவற்றை உபசாரமாக அனுபவம், ககர்தை நாக லோகமே யென்ன அலங்கரித்து மணக்கோலம் செய்யவும் ஆளு ஞாபித்துத் தன் இரு புதல்வர்களையு மழைத்து, 'நீவிரும் வேழமேறி எம்மோடு வருக' என்று கூறிய பாகரை நோக்கி, 'பட்டத்து யானையை அலங்கரித்துக்கொண்டு

வருக' என்றுன் பார்கள் கலிலக்கணம் வாய்ந்த மங்கலகரமாய விளங்கும் அரசுவரிஞருக்கு அணிய வேண்டியவற்றைச் சிறக்க அணிவித்து அரசன் முன் கொண்டு வந்து நிறுத்தினார்கள் அரசன் அவவேழத் தின்மீது இவர்ந்து, வெண்கொற்றக் குடை, கண்ணிலா மதிபோல் மேல் நிழற்ற, வெண்சாமரை அருகிரட்ட, கிருஷ்ணபலராமரைப் போன்ற விசயதிவிட்டர்க ளாகிய குமாரர்கள் பின் தொடர, நால்வகைச் சேனை களும் முன்னும் பின்னும் சூழ்ந்து வர, கட்டியம் கூறு வோர் எச்சரிக்கை கூற, ஈசேந்திரனே யென்னும்படி வெகு சிறப்புடன் திருவிலே யகப்பொழிலை நோக்கிச் சென்றனன். செல்லும் பொழுது, தோற்கருவி, துளைக் கருவி, கஞ்சக் கருவி, நரம்புக் கருவி, மிடற்றுக் கருவி யாகிய பல வகை வாத்தியங்கள் கடலொலிபோல ஆர வாரித்தன. நகர மாந்தர் அப்பொழுது மலர்களை மாரி போல இடைவிடாது சொரிந்தனர். வீதியில் குடை களும் கொடிகளும் மகர தோரணங்களும் ஆலவட் டங்களும் நிறைந்து பகலை இரவாக்கின அவவிர வோடு சண்டைக் கெழுந்தவைபோல, அரசர் முடி களும் குழைகளும் மதாணிப் பதக்கங்களும் மற்றும் பல ஆபரணங்களும் ஒளி விட்டுப் பிரகாசித்து இருளை விலக்கிவந்தன

இங்ஙனம் அரசன் பல வகைச் சிறப்புக்களுடன் வருவதை மரீசியர் னுணர்ந்த விஞ்சையர் மன்னன் தானும் அவவேந்தனை எதிர்கொள்ளச் சதுரங்க சேனைக ளோடும் எழுந்தான் இருவர் சேனைகளும் கங்கை யும் யமுனையும் ஒன்றுகிக் கலந்தாற் போன்று மகிழ்ச்சி பொங்கப் போரவாரத்துடன் கலந்தன அப்பொழுது

விஞ்சையர் வேந்தனது சோகத்தை மானுட மன்னனது சோகமும் ஒன்றுபட்டன. பட்ட காலையில், பயாபதி தன்னிரு கைகளையும் முகுளித்துத் தூக்கினன். விஞ்சைய வேந்தன் அவன் கைகள் கூப்புதற்கு முன்னே அவன் கைகளைப் பற்றி ஆர்வத்தோடு தழுவினன். அது பொழுதே விசயதிவிட்டர்கள் கை கூப்பிக்கொண்டு விஞ்சையர் வேந்தன் பாதங்களைத் தொழுதார்கள். வித்தியாதர மன்னன் அவர்களை அன்போடு வாரியெடுத்து மார்போடு புல்லி ஆசீர்வதித்தனன். அவன் புதல்வன் அருக்க கீர்த்தி பயாபதி மன்னன் பாத கமலங்களை வணங்க, அம்மன்னன் அவனைத் தன்னகலத்தோடு சேர்த்து அன்பு கனிந்த வசனங்களை மொழிந்தனன். அவனுக்குப் பின் விஞ்சைய ராசன் தம்பியாகிய சுவலன ரதனும் மருகனாகிய வியாக்கிர ரதனும் போதனத்திறைவன் பாதங்களை வணங்க அவர்களையும் நன்மொழி கூறி உபசரித்தனன். பின்னர்ப் பயாபதி மன்னன் தம்பியாகிய ஸ்ரீ பாலன் சுவலனசடியின் சுபாதங்களை வணங்க, இவனும் அவனை மார்புறத் தழுவி ஆனந்த மெய்தி, இனிய வசனங்கள் மொழிந்து இனிதுபசரித்தனன்.

இவ்வாறு இரு நிலத்தவரும் ஒருவரோடொருவர் அளவளாவி மகிழ்ந்து கொண்டாடிய பின், விஞ்சையர் வேந்தன் தங்கியிருந்த நவீன மண்டபத்தே யாவரும் புகுந்து, நல்லார் கவரி வீச நவ மணி பதித்த சிம்மாசனத்தே யமர்ந்திருந்தனர். அப்பொழுது சுரமை நாட்டு மன்னன் பயாபதி வித்தியாதர மன்னனை நோக்கி, "விண்ணரசரே, நீர் மண்ணுலகத்துள்ள என்னை ஒரு பொருட்படுத்தி இங்கே வந்தது யான் செய்த தவப்

பயனே யாகும் இப்பேறு மானுடர்க்குக் கிடைப்பது அரிதினும் அரிதாம்" என்று பெருமகிழ்வுடன் பேசினன் விஜைசையா வேந்தன். அது கேட்டு உவகை பொங்கித் தகை பூத்து, "அரசரேறே, விண்ணுலகத்து வாசிகளும் மண்ணுலகத்துள்ள புண்ணிய தீர்த்தங்களை மேன்மையாகக் கருதித் தீர்த்தமாடுதலில்லையோ? நீர் பூச்சியதை பெற்ற புண்ணிய குலமாகிய இக்குவாகு குலத்திலுதித்த தோன்றலென்று மரீசி சொல்ல நான் உணர்ந்தேன். அவனால் நுங்குல வரலாறு முழுதும் அறிந்து மகிழ்ந்தேன். அன்றியும் புராணம் வல்ல புலவர் பெருமக்களும் பொற்பில் பூமகளை யொத்த சுயம்பிரபை நும் இளைய குமாரற்கே உரியளாவளென உரைத்தார்கள். அது கருதி, என் மகளை உம் மைந்தற்கு மணம் செய்து கொடுக்க வந்துள்ளேன். இனிக் காலந் தாழ்த்தாது இம்மண வினையை நிறைவேற்றுவீராக" என்றனன். இவ்வாறு இரு பெருவேந்தரும் விநயத்துடன் ஐக்கியத்தைத் தரும் வார்த்தைகளைப் பேசிக் கொண்டிருக்கும் பொழுது, மலையரசன் மண்ணரசன் மக்க ளிருவரையும் தன் குமாரனையும் பார்த்து, "நீவிர் போதனமா நகரம் புகுக" என்றனன். அம்மூவரும், "அங்ஙனமே யாகுக" எனக் கூறிக் கைம்மாவின் மீதேறிக் கண்ணியமாய்ச் சென்றனர்.

அப்பொழுது தனக்கென அமைந்த கன்னிமாடத்தில் ஏழாவது நிலையில் சுயம்பிரபை தங்கியிருந்தனள். அவளுக்கு அவள் உயிர்ப் பாங்கியாகிய அமிர்தப் பிரபை நகர் வளங் காட்டக் கருதி அந்நிலை மாடத்திலுள்ள சாளரக் கதவுகளைத் திறந்து, சுயம்பிரபையை நோக்கி, "மான் விழியாளே, இம்மா நகர் வனப்பினைக்

காணவில்லையோ?" என, அவள் ஐயனையினின்றும் பைய விழித்து, சாளரத்தின் அருகு அடைந்து, நகரத்தைக் கண்ணுற்றனள். கண்ணுற்றவள் நகர வீதியூடே யானை மீதிவர்ந்து செல்லும் குமாரனைப் பார்த்து, "இவர்கள் யாவர்?" என்பப் பாங்கியை வினவினள். அமிர்தபிரபை அவர்கள் ஒவ்வொருவரையும் சுட்டிக் காட்டி இன்னு ரென விளக்கினள். அமிர்தபிரபை நீல மேக வண்ண னுயக் கண்ணனேபோல விளங்கிய திவிட்ட நம்பியைச் சுட்டும்பொழுது,

'தாமரை அனைய கண்ணும் தடக்கையும் பவழ வாயும்
பூமரு பூவைக் கண்ணிப் புதுமலர் ஒளியுங் காட்டித்
தூமரு நீல மென்னு மணித்துணர்த் தனைய குஞ்சிக்
காமரு காளை கன்னி கண்களைச் சிறைகொண் டிட்டான்.'

அவன் தான் யாது செய்பவன்!

இங்ஙனம் திவிட்ட குமாரன் பேரழகில் சிறைப் பட்ட தனது கண்ணையும் மனத்தையும் சுயம்பிரபை வலிதின் வாங்கி, ஏழ் நிலை மாடத்தினின்றும் இறங்கித் தந்தை யிருக்கும் மண்டபத்தை யடைந்து தந்தையைக் கண்டு அவன் பாதங்களில் வணங்கினள். அக்கும ரியை அவன் தனது மடிமீ திருத்தி உச்சி மோந்து, பிறழ்ந்த அணிகலன்களைத் திருத்தித் தன் முன்னிருக் கும் பயாபதி மன்னனைக் காட்டி, "இவர் உன் மாம னார், இவர் பாதங்களில் நீ வணங்கு" என்றனன். சுயம்பிரபை அது கேட்டதும், பாதச் சிலம்பு கலுக் கெனச் சத்திக்கத் தந்தையின் மடியினின்று பிறங் கிப் பயாபதி மன்னன் பாதங்களைத் தொழுதனள். பயாபதி தனக்கு மருமகளாகும் சுயம்பிரபைக்கு ஆசி

கூறி, அவளை மடியில் அமரச் செய்து, அவளது அழகைப் பாதாதி கேசமவரை பார்த்து, 'திருமகளை யொத்த இவளை அடைபவன் ஏக சக்கரேசுவரனுய் இவ்விரு நிலத்தை ஆள்வான் என்பதற்கோர் ஐயமு மின்று. இப்பெண் திருவை யடைய நம் திவிட்ட குமரன் செய்த பாக்கியமே பாக்கியம்!' என்று புகழ்ந்து பேசினன். பின்னர், மன்னரிருவரும் சுயம்பிரபையைக் கன்னி மாடம் செல்ல விடை கொடுக்க, அவளும் விமான மேறிக் கன்னி மாடம் சேர்ந்தனள்.

அப்பொழுது பயாபதி மன்னன் மனைவி சசிதேவி தன் பரிவார மகளிராகிய மதுகரி, வசந்தசேனை முதலிய ஆயிரத் தெண்மரை யழைத்து, "நீங்கள் அலங்கார கோலத்துடன் அட்ட மங்கலங்க ளேந்தி, நம் இளைய நம்பியை மணக்கும் விஞ்சையர் தேசத்து இராச குமாரியைக் கண்டு குசலம் வினவி வாருங்கள்" எனக் கட்டளை யிட்டனள். அவர்க ளைஞ்ஞூற்று எண்மரும் இழையாயிரம் பொன் பெறும் பட்டாடைகளை யுடுத்திக் கண்ணைப் பறிக்கும் ஒளி வாய்ந்த கனமணிப் பூணுரங்களைப் பூண்டு, பொன்னூட்டு மகளி ரெனனும்படி அலங்கரித்துக்கொண்டு, அரச புத்திரி காணடற் கமைந்த காப்பு மங்கலங்களை ஏந்திச் சென்றார்கள். அவர்களுடன் மாதவ சேனை முதலாய காப்பத மகளிர்கள் மலர் மாலை, தோடு, குண்டலம், முத்து வடமாதிய உபசார மங்கலங்களோடு தொடர்ந்து சென்றார்கள். திவிட்ட குமாரனுடைய ஐவகைத் தாயரும் அவர்கள் குழாத்தில் சேர்ந்தார்கள். இங்ஙனம் இவர்கள் யாவரும் தேர்களிலும் முகத்துப் பல்லக்குகளிலும் ஏறித் திருநிலையமென்னும் பொழிலை யடைந்து சடி

யரசனைக் கண்டு வணங்கி, அனுமதி பெற்றுச் சுயம் பிரபை தங்கி யிருக்கும் கன்னி மாடத்தினை யடைந்தார் கள். அங்கே பொன்னா லியன்ற பூவணையில் பொலிய வீற்றிருந்த அரச குமாரிக்கு அவள் தோழி ஆண்டு வந்தவர்களைக் காட்டி, அவர்கள் இன்னின்னாரென விவரமாய்க் கூறி அறிமுகம் செய்துவைத்தனள். அப்பொழுது மதுகரி, வசந்த சேனை முதலிய பெண்டிர் சுயம்பிரபையை வலம் வந்து தொழுதனர். அவர்க ளெல்லாம் திவிட்ட குமாரனுடைய உழைக்கல் மகளி ரென்றுணர்ந்த சுயம்பிரபை தனக்குள் மகிழ்வு பெற் றதனால், நகைமுகத்தில் புன்முறுவல் தோன்ற, அதனை நாணத்தால் வெளியாகாது மறைக்க ஒரு பூவை யெடுத்து மோந்துகொண்டிருந்தாள். அவளைக் காணச் சென்ற மகளிர் யாவரும் பத்தரை மாற்றுப் பொன்னென்னத் துலங்கிய அவள் மேனி யொளி யினாலும் அணிந்திருந்த அணிகலப் பிரகாசத்தினாலும் தங்கள் கண்ணொளி யிழந்து காண்டற்கு அரிய ராயி னர். அந்தச் சமயத்தில் அவருள் எல்லாக் கலைகளி லும் வல்லவளா யிருந்த மாதவ சேனை யென்பாள் அங்குள்ள பளிங்குச் சுவரின்மீது சுயம்பிரபையின் பிரதி தோற்றம் பொருந்தி யிருப்பதனைக் கண்டு, அத னைப் பலகாலும் பார்த்து, மனத்தில் பதிய வைத்துக் கொண்டு, அவளது அழகிய உருவை ஒரு பலகையில் தீட்டிச் சித்திரித்துக்கொண்டனள். அதன் பின்னர் மாதவ சேனை யுள்ளிட்ட மகளிர் யாவரும் விஞ்சையர் மன்னன் மகளை நோக்கி, “சித்திரப் பாவையீர், நம் மரசியார் எம் கண்களைத் தம் கண்களாகப் பாவித்து, உம்மைக் கண்டுவரப் பணித்தனர். ஆதலால், அவர்க்கு நாம் சொல்லும் வார்த்தை யொன்று அருளிச் செய்

மின்" என்று கேட்டனர். அதற்குச் சுயம்பிரபை மறுமொழி கொடுக்க நாணி மௌன முற்றிருந்தாள். மாதவ சேனை அவளது காரணத்தின் குறிப்பறிந்து அவளை நோக்கி, "மங்கையர்க் கரசியீர், நீர் எங்கள் முன் பேசுவதனால் உமக்குக் குற்றமொன்றும் வாராது, தாராளமாய்ப் பேசலாம்" என்றனள். அதைக் கேட்டதும், சுயம்பிரபை குறுமுறுவல் கொண்டு, தன் பாங்கியின் முகம் நோக்கினள். பாங்கி அமிர்தப்பிரபை அக்குறிப்பறிந்து, சுயம்பிரபையைக் காண வந்த மகளிரை நோக்கி, "அன்னையர்களே, நீங்கள் நம் சிரசை எம் சிரசாகப் பாவித்து நாங்கள் வணங்கியதாக மாமியார் பாதங்களில் வணங்குங்கள்" என்று மறுமொழி கூறினள். அவர்கள், "அங்ஙனமே நும் திருமொழிப் பணிகாரத்தினைக் கொண்டுபோய் நாங்கள் எம்மரசன் தேவிக்கு ஊட்டி இன்புறுத்துவோம்" என மொழிந்து, அவர்களிடம் விடை பெற்றுச் சசி தேவியானவள் உறையும் அரண்மனையை யடைந்து ஆண்டுற்றவைகளைக் கூறி மகிழ்ந்தார்கள். மாதவ சேனை மாத்திரம் தனியே சென்று மன்னன் தேவியைக் கண்டு வணங்கினள். தேவி அவளை அருகி லழைத்து, "உனது கைப்பகத்துள்ளது யாது?" என்று வினவினள். மாதவ சேனை, 'இது நும் மருமகளாருடைய உருவப் படம்' என விடை கொடுத்தாள். சசி தேவி முக மலர்ந்து, "அதனை என்னிடம் கொடு" என வாங்கி, மாதவ சேனை மனமுவக்கும் வண்ணம் பொன், பூஷண முதலிய பொருள்களைக் கொடுத்துப் பின்பு அப்படத்தை நோக்கினள். அப்படத்தில் பொறித்துள்ள உரு அத்தேவியின் கண்களைக் கூசச் செய்தது. அவள் அவ்வுருவத்தைப் பன்முறை பார்த்துப் பார்த்து, "எழுதற

கரிய இத்திருவுருவத்தைத் தூகிலிகை கொண்டு எவ்வாறு சமைத்தீர்? உன் கை வளப்பமே வளப்பம்! உனது நுண்ணிய அறிவின் திறமே திறம்!" என்று மாதவ சேனையைப் புகழ்ந்து, "கண்ணைப் பறிக்கும் இம்மின்னற் கொடியாரின் உருவப் படத்தினை நம் இளைய நம்பிக்கும் காட்டி வருக" எனக் கட்டளை யிட்டாள். அவள் அரசியைப் பார்த்து, "இவ்வுருவைத் தங்கள் திருவருளினாலேயே ஒருவாறு சித்திரித்தேன்" என்று கூறி, "எம் மாமியாரடிகளை யாம் எல்லையில்லாத உரிமையோடு இறைஞ்சியாக நீங்கள் இறைஞ்சுங்கள்" என்று எம்மைப் பணித்த ஒரு மழலைத் தீஞ்சொல் நம் மருமகளின் கோழி வாயிலாக எழுந்ததெனவும் சொல்லிப் பின்பு இளைய நம்பி வாழும் மனையகத்துச் சென்றாள். சென்றவள் திவிட்ட குமாரனைக் கண்டு வணங்கி, "ஏந்தலே, அருங்கலம் அரசர்க்கே யுரித்தாவதன்றிப் பிற ராருக்கும் உரித்தாவதன்று. ஆதலால், இவ்வருங்கலத்தை, நம்பி, பார்த்தருள்க" எனத் தன் கையிலிருந்த படத்தை நீட்டினாள். அவன், 'அஃதென்ன அருங்கலம்?' என்று கூறிக் கையிற் பற்றிப் பார்த்தான். பார்த்தவன் வியப்புற்று, "இவள் விண்ணவர் மகளோ! வித்தியாதர மாதோ! மண்ணுலக மன்னர் திருமகளோ! மற்றும் யாவளோ!" என ஐயுற்று மனவில் மாதவ சேனை மன்னன் குமாரனை நோக்கி, "இவள் விண் மடந்தை யல்லள், ஆலோசித்து எம் மடந்தையள் என்பதை நீரே நிச்சயித்துச் சொல்லுக" என்றனள். திவிட்டன் சற்றுப் படத்தை ஊன்றிப் பார்த்து, "இவள் விண் மடந்தையு மல்லளாயின், மண்ணில் இவ்வெழில் வாய்ந்த மகளிர் எவருமிலர். இத்

லால் இவள் வித்தியாதர வுலக மகளே யாக வேண்டும்" என்று கூறினன். அவளும், "ஆம்! ஆம்!! அவ்வுலக மங்கையே யாவள்" எனக் கூறினள். மன்னன் மகன் அங்கிச்சய வார்த்தை கேட்டதும், அப்பட்டத்திலுள்ள சுயம்பிரபையின் உருவத்தையே நோக்கி நோக்கி வியந்தான்.

அப்பொழுது சூரியன் குடதிசைபோ யமர்ந்தான். சுயம்பிரபை அருகக் கடவுள் ஆலய மடைந்து ஒரு சாமம் யாழ் கொண்டு அப்பெருமான் புகழைப் பாடிக் கழித்தாள், மறு சாமம் அங்குநின்றும் நீங்கித் தன் மாடம் புகுந்து மணிமேல் முற்றத்தி லிருந்தாள். அதே காலத்தில், வித்தியாதர வுலகினின்று வந்தோர் பல விதமான ஆடல் பாடல்களைக் கண்டு கேட்டு இனிமையாகப் பொழுது போக்கிவந்தனர்.

இவர்கள் இங்ஙன மிருக்க, தினகரன் தன் எண்ணிலாக் கிரணங்களைப் பரப்பிக்கொண்டு குண திசை எழுந்தான். பயாபதி மன்னனும் துயில் நீத்தெழுந்து, காலைக்கட னியற்றிப் பின்பு அருகக் கடவுளுக்குப் பெருஞ்சிறப்பெடுக்க, அன்று அருகப் பெருமானுடைய திருவிழா நாளென யாவரும் அறியும்படி பறை சாற்றுவித்தான். அது கேட்டு நகரத்திலுள்ளார் யாவரும்,

"விரைகமழ்நீர் சாந்தரிசி மேதகப்பூந் தாமம்
திருவமுது தீபமொடு தூபம்—தருகனியும்"

ஏந்தி, எள்ளிட இடமின்றி அருகனாலயம் வந்து ஈண்டினர். அரசனும், அவனது உறுதிச் சுற்றத்தாரும் ஆண்டு அடைந்து, ஆகவேண்டிய பூசனைகளை முறைப்

படி நடத்தி முடித்தனர். பின்பு, யாவரும் அருகன் அடிக்கமல நீரைச் சிரசிற்றெளித்துக்கொண்டு தத்தம் இருப்பிடஞ் சேர்ந்தனர்.

மண வினைக்கு முன் செய்ய வேண்டிய இம்மங்கல விழா நிறைவேறியதும், அரசன் திவிட்ட நம்பிக்குத் திருமணம் என எவரும் அறிய முரசறையச் செய்தனன். நகரெங்கும் முரசு வாத்தியங்களும் மங்கல வாத்தியங்களுமே முழங்கின. எங்கும் பார்த்தாலும் தோரணமும் துவசமுமே விளங்கின. பார்த்த விடங்களிலெல்லாம் பாட்டும் ஆடலுமே மிகுந்திருந்தன. எவரைப் பார்த்தாலும், புதிய ஆடைகளையும் பொன்னாபரணங்களையுமே பூண்டிருந்தனர். ஊர் முழுதும் நறுமணமே கும்மென்று சூழ்ந்துகொண்டிருந்தது. அரசன் வீட்டுக் கலியாணத்தைக் குடிகள் தங்கள் வீட்டுக் கலியாணமென்றே பாவித்துத் தங்கள் இல்லங்களையும் முற்றங்களையும் மங்களகரமான வஸ்துக்களால் அலங்கரித்தார்கள்.

இவ்வாறு சிறந்த அலங்காரங்களைப் பெற்று விளங்கிய திருநகருக்கு வெளித்தேச வேந்தர்கள் நால்வகைப் படைகளுடனும் அணி அணியாய் வந்து சேர்ந்தார்கள். அது சமயம் வித்தியாதர வேந்தரும் மண்ணுலகத்து மன்னரும் ஒருங்கு கலந்ததனால் அந்நகரம் பிரளய காலத்து உயிர்கள் ஒடுங்கும் இடம்போன்றிருந்தது. இங்ஙனம் யாவரும் திருமணத்திற்குக் குழுமியதும், குறித்த முகூர்த்த காலத்திற்குள் விவாகச் சடங்கினை நிறைவேற்ற அரசன் காரியங்களைக் கண்காணித்துவந்தான். அப்பொழுது அரசர்களிற் பலர் யானைகளை

அலங்கரித்துக்கொண்டு கங்கை முதலிய புண்ணிய நதி தீரங்களுக்குச் சென்று பொற்குடங்களிலே நீரை முகந்து மங்கல வாத்தியங்கள் முழங்கக் கொணர்ந்து திவிட்ட குமாரனை ஒரு பொற்பீடத் திருத்தித் திருமஞ்சன மாட்டினர். மஞ்சன மாடினபின் திவிட்டன் திருமணக் கோலத்துடன் கலியாண மண்டபம் புகுந்தனன். அதன் பின்னே சுயம்பிரபையும் விஞ்சையருலகத்தினின்றும் கொணர்ந்த தூய நீரில் நீராடிப் பட்டுடுத்தி, மண்ணுலகத்திலே அருங்கலங்களாக விளங்கும் மாணிக்கம் முதலிய மணிகள் பதித்த அணிகலன்களைப் பூண்டு, நறுமலர் மாலை சூடி, விஞ்சை மகளிர் வாழ்த்துச் சொல்ல, பற்பல மங்கல வாத்தியங்கள் கடலொலிபோல முழங்க, விவாக மண்டபத்தைச் சேர்ந்தாள். தம்பதிகள் இவ்வாறு வந்து மணப்பந்தலிலுள்ள பீடங்களில் அமர்ந்ததும், மண வினை செய்யப் புரோகிதன் மணச் சாலையில் ஓமம் வளர்ப்பதற்கென்று குறிப்பிட்ட சுத்தமான இடத்தில் மாவினற் கோலமிட்டு, வெண்முத்த மணலைச் சதுரமாகப் பரப்பி, அதன் மேல் தருப்பையின் நுனித்தலைகளை வடக்கும் கிழக்கும் பொருந்தத் திருத்தி, வலம்புரிச் சங்குகளால் தெளித்து, பின்பு பத்துத் திக்குகட்கும் தெய்வங்களை மந்திரத்தால் வேண்டி யழைத்துக் காவலமைத்துச் சமிதைகளிட்டு நெய் சொரிந்து, ஓமம் வளர்த்தனன். அப்பொழுது பிரகஸ்பதியும் சந்திரனும் கூடிய ஓரை வந்தது. அவ்வேளையில் மங்கல வாழ்த்துடன் பல வாத்தியங்கள் முழங்க, அந்தணர் முதலிய பெரியோர்கள் ஆசி கூற, அக்கினிக் கடவுளையே சாக்ஷியாக வைத்து, விஞ்சையர் வேந்தனாகிய சுவலனசடி தன் மகள் சுயம்பிரபையை நீருடனே தத்தம் செய்து

திவிட்டனுககுக கொடுததான அது பொழுதே திவிட்டகுமாரன அத்திருமகள கழுததில திருமங்கலிய தாரணம செயதனன். அதன பின ஓமாரியன செயய வேண்டிய கிரியை யாதிகளை முறைபபடி செயது கம பதிகளை அககினியை வலமவரச செய்தனன வணணத தில கண்ணனையே யொதத திவிட்டன திருமகள சொரூபியாய நின்ற சுயமபிரபையின் மெலவிரல பிடிதது அக்கினிக் கடவுளை வலம வநதனன. பினபு கனனியின தமரும காளையின் தமரும ஓமாசாரியனுக கும மறறும அநதணா ஆதுலாகளுககும பொன்னும மணியும கொடுதது அவர்களை மகிழச செயது, சபை யோாககுச சநதன புஷப தாமபூலாதிகளை வழங்கினா. அவை முடிநததும, மண மகன மண மகளுக்கு ஆகா யததில கறபுக்குக காட்டாய இலஙகும அருநததியைச் சுட்டிக காட்டி அவளோடும தனது மாளிகைக்கு ஏகினன

VII

## அரசியல்

போதனமா நகரத்தில் இவர்கள் இங்ஙன மிருக்க, விஜயை குலகத்தி லுள்ள இரத்நபுர நகரத்தினின்றும் தூதனொருவன் பூமியில் வந்து, சுவலனசடியைக் கண்டு வணங்கிப் பாரத பரி சுத்தமான திருப்பாற் கடலின் நடுவில் நச்சுத் துளி யொன்று சொட்டியது போலக் கூறுவானாகி, "மன் னரே, விஜயை குலக மானும் அச்சுவ கண்டரோடு மற்றை அரசர்களுங் கூடி, சப்த சமுத்திரங்களும் கரை புரண்டு வருவதே போலப் படை யெடுத்து நம்மேற் போருக்கு வர ஆயத்தப்படுகின்றார்கள்" என்றான்.

சுவலனசடி அம்மொழியை ஒரு பொருட் படுத் தாது நீங்கிச் சிறிதும் மனக் கலக்க மில்லாதவனாய்த் தூதுவனை நோக்கி, "நற்றூத, இங்ஙனம் வரு மென் பதை யாம் பண்டே யறிந்திருக்கின்றோம். அவர்கள் எம்மீது போருக்கு வரினும் வருக, வாராமற் போகி னும் போக. அதைப் பற்றி எமக்குக் கவலையில்லை. முன்னம் எம் மருமகன் திவிட்ட குமாரன் சிங்கத்தின் வாய் பிளந்த அந்நாளில் அச்சுவகண்டனூரிலே யாது நிகழ்ந்தது? அதனை விவரமாகக் கூறுவாய்" என்று கேட்டனன்.

தூதுவன், "அரசரே, அரியேறொத்த தங்கள் மருமகன் திவிட்ட குமாரன் சிங்க வேற்றின் வாய்

பிளந்த வீரச் செயலினை மாயச்சீயமாய் வந்த அரிகேது விஞ்சையரிடம் சென்று கூற, விஞ்சையர் யாவரும் வியப்பும் பயமுங் கொண்டு மெய் நடுங்கினர். அரி மஞ்சு வென்னும் அமைச்சன் அதனை அரசர் அறியா வண்ணம் சின்னாள் மறைத்து வைத்திருந்தும், பின்னர் 'அரசர் இதனை அறிவாராயின், அதனால் யாது ஏதம் விளையுமோ!' என்றஞ்சி, அரிகேதுவை யழைத்து, 'நீயே திவிட்ட குமாரன் செயலினை அரசருக்குத் தெரிவித்து வருவாயாக' எனக் கட்டளையிட்டு அனுப்பினன்.

"பல மன்னர்கள் புடைசூழ அரியாசனத் தமர்ந்து அச்சுவ கண்டர் கொலு வீற்றிருக்கும் அந்தச் சமயத்தில் அரிகேது சென்று அரசர் கழலடி வணங்கி வினயத்துடன் அரசனை நோக்கி, 'அரசர்க்கரசரே, தங்கள் சமூகம் அறிய ஓர் அரிய விடயத்தினைத் தெரிவிக்க வந்தேன். அனுமதி கிடைக்குமாயின், அதனைத் தெரிவிக்கின்றேன்' என்றனன். அரசர், 'அஃதென்னை?' என வினவ, அரிகேது, அரசர் ஆஞ்ஞை பெற்றுப் போதனமா நகரம் சென்ற தூதருக்குப் பயாபதி மன்னன் திறை கொடுத்து நல்லுரை மொழிந்ததும், அதனை யறிந்த அவன் இளைய குமாரன் திறைப் பொருளை மறித்துப் பெற்றுத் தூதரை அவமதித்ததும், அவர்கள் மீண்டு வந்து அரிமஞ்சுக் குரைத்ததும், அந்த அரிமஞ்சு தன்னை மாயச் சிங்கவடி வெடுத்துப் போதனம் செல்ல விடை கொடுத்ததும், தான் சென்று அவ்வூரை யழித்ததும், அரச குமாரர்கள் அதனை யறிந்து அங்கே வந்ததும், அவருள் இளைய குமாரன் தன்னைக் கண்டு துரத்தியதும், தான் அஞ்சி உண்மைச் சிங்கம் உறையும்

முழையினிற் புகுந்து ஒளித்ததும், திவிட்ட குமாரன் அக்குகையின் எதிரே வந்து ஆரவாரித்ததும், அதனால் அக்குகையிலிருந்த கோளரி கோபமூண்டு எழுந்து வந்து அவன்மேற் பாய்ந்ததும், அவன் அப்பெருங் கோளரியின் பிடரியிற் பாய்ந்து உதைத்துத் தள்ளி நாணற் புல்லைக் கிழிப்பதுபோல் அதன் வாயைப் பிளந் ததும், தான் பயந்து மறைந்து ஓடி வந்ததுமாகிய சம் பவங்களையெல்லாம் ஒன்றும் விடாமற் கூறினன். அச் சுவகண்டன் இவற்றைக் கேட்டு, அடங்காக் கோபங் கொண்டு, கண்களில் நெருப்புப் பொறி சிதற, நாற்புற மும் சபையைச் சுற்றிப் பார்த்து, அருகிருந்த கற்றூண் துகளாகக் கையால் ஓச்சிப் புடைத்து, அரி கேதுவை நோக்கி, 'எடா! அரி கேது! நீ அம்மனிதர்களைக் கண்டு மிக அஞ்சினையோ? உன்னைப் போன்றவர்க்கே அம் மானுடப் பதர்களின் ஆற்றல் மலைபோலத் தோன்றும் எம்போல்வார்க்கு அவர்களுடைய வலிமை அணு வாகவுந் தோன்றாது' என்று கோடையிடி போலச் சிரித் துச் சீறினன். அப்பொழுது அச் சபையிலிருந்த விஞ் சையர்களெல்லாம் மெய் விதிர்த்து நடுநடுங்கினர்.

"அச்சுவகண்டன் இவ்வார்த்தைகளைக் கண்ட அரி கேது தன்னுள்ளே நகைத்து, 'இவன் திவிட்ட நம்பியின் ஆற்றலை அறியாமல் இங்ஙனம் குதிக்கின் றான், அரியின் வாயின் ஆம்பற்றுள் போலக் கிழிந்த அவ்வரியேற்றின் முன் இவன் எதிர்க்கும் பொழுது அவனது ஆற்றலைக் கண்டு அஞ்சி அடங்குவான் இப் பொழுது தன் பலத்தையே வியந்து பேசும் இவன் முன் கூறுவதிற் பயனில்லை' என்று எண்ணிக்கொண்டு தன் இரு கரங்களையும் தலைமேற் கூப்பிய வண்ணமாய் அவ

எதிரே நின்றான். அவ்வமயத்தில் வேறொரு விஞ்சை
யன் அவ்விடம் வந்து அச்சத்தோடு அரசரடியிற்
பணிந்து, 'அரசர்க் கரசரே, தக்கிண சேடி யரசர் சடி
யென்பார் தம் சுற்றத்தாருடன் அரசிளங் குமரியை
அழைத்துக்கொண்டு மணவுலகத்திற்குச் சென்று,
போதனமா நகரத்து வேந்தரின் இளைய குமாரனுக்கு
அக்குமரியை மணம் செய்து கொடுத்தனர்' என்று
சொன்னான்.

"அதனைக் கேட்டதும் அச்சுவ கண்டர் செவிகளில்
கைகளைப் பொத்தி, 'இச்சுடு சொல் ஒழிக!' என்று
கூறி, வெகுளிமேல் வெகுளி கொண்டு, கண்களினின்
றும் தீப்பொறியைக் கக்கினர், பல்லை நறநறவெனக்
கடித்தனர், கைம்மேல் கை தாக்கினர், 'இப்பொழுதே
அச்சடி யரசனை மடிக்கலாமா!' எனப் பல முறை ஆத்
திரத்துடன் எண்ணி எண்ணி எழுந்தனர், திக்கெலாம்
அதிர முழங்கினர், பக்கத்தார் யாவரும் நடுங்க உறு
மினர் இங்ஙனம் அவர் கடுங்கோபத்தராகி, 'சடி யரச
னது செய்கை ஏதாயின், அவன் புய பலத்தை நான்
விரைவிலே அழிக்கின்றேன்!' என்று கூறி, அருகிருந்
தோரை நோக்கி, 'சேனா சமுத்திரத்துடன் அரச மண்
டலம் திரண்டு வருக' எனக் கட்டளையிட்டனர் பறை
சாற்றுவோர் நாடெங்கும் சென்று பறை சாற்றி அரச
ரது ஆணையைத் தெரிவித்தனர்.

"அப்பொழுதே விஞ்சையர் வேந்தர் சதுரங்க
சேனைகளோடும் ஆண்டடைந்து அரசரை வணங்கி, அர
சர் கால காலனைப்போலக் கனன்று விளங்குவதையும்,
கண்கள் நெருப்பெனச் சிவந்து தீப்பொறி கக்குவதை
யும், எதிரே வயிரக் கற்றூண் ஒன்று முறிந்து பொடிப

பொடியாய்ச் சிதறிக் கிடப்பதையும், பிறவற்றையும் நோக்கி அச்ச மடைந்து, 'அரசருக்கு இத்தகைய கோபம் இதற்கு முன்னே எப்பொழுதும் வரக் கண்டிலமே! இப்பொழுது இவ்வாறு வந்ததற்குக் காரணம் என்ன? இக்கோபத்திற்கு இலக்காவார் எளியர் எவ ரிருக்கின்றனரோ!' என்று திகைத்துத் தமக்குள்ளே பேசுவா ராயினர் அவர்களுள் சிலர், 'உலகத்தி லுள்ள உயிர்களைக் கவர்ந்து செல்லும் கால நமன்மீது தான் இவர் கண்ணுற்றனரோ!' என்றனர் வேறு சிலர், 'ஊழிக் காலத்தை இன்றே தோற்றுவித்து உலகங் களை வெவ்வேறாக்கி, உயிருள்ளனவற்றை யெல்லாம் ஒரு சேர வாரிக் கடலினுட் பெய்யக் கருதுகின்ற னரோ!' என்றனர் மற்றும் சிலர், 'முன் நடந்த போரில் தேவர்களும் இராக்கதர்களும், 'நும்முடன் எதிர்க்க எங்களா லாகாது!' என நம் அரசரைத் தஞ்ச மடைந்தனர் மண்ணில் வாழ் மனிதர்களோ நம் மன் னருக்கு ஒரு தூசு போல்வார்கள் வானவரோ இவ ருக்கு மாறாக வருபவரில்லர் அங்ஙன மிருக்க இவருக் குக் கோபமூட்டி இவரை எதிர்க்க வருவார் எவரிருக் கின்றனர்?' என்றனர் இன்னும் சிலர், 'இவரது கோபத்தினால் உலகம் நிச்சயம் அழிந்துவிடும், முந்நீர்க் கடலும் முற்றும் உலர்ந்துவிடும், திசைகளெங்கும் தீ மூண்டு எரிந்துவிடும்' என்றனர் இவற்றைக் கேட்ட சிலர், 'மேல் வருவனவற்றை நாம் எங்ஙனம் அறியக் கூடும்? சற்றுப் பொறுத்து உற்றதை அறிவோம்' என்றனர்.

"இங்ஙனமாக அவர்கள் தங்கள் இச்சைப்படி பல பல பேசி உற்றது எதுவென ஆராயுங் காலையில் அச-

சவ கண்டார் அவர்களை நோக்கி, 'வேந்தர்களே, இரத்நூபுரத்து மன்னன் சுவலனசடி யென்பான் என்னை வருத்தித் தன் மகளை மண்ணிலுள்ள ஒரு மனிதனுக்குக் கொடுக்க வலியத் தேடிச் சென்றானாம். அம்மாநுடனோ நமக்குத் திறை செலுத்தாத கருவித்தவன்! நமது அரசியலில் இம் முறைகேடான செயலும் நிகழ்வதோ? இனவே அவர்களது ஆவியைக் கொள்ளை கொள்ள வேண்டும்!' என்று கூறினார். அதற்கு அவர்களெல்லாம், 'இவ்வற்பத்திற்கோ தாங்கள் இங்ஙனம் உரைத்து முனிவது?' எனக் கதறிக் கூறினர். அப்பொழுது அங்கே ஒல்லென்று கடலொலி போலப் பேரொலி யுண்டாயிற்று.

''பின்பு அவர்கள் யாவரும் ஒருங்கு சேர்ந்து, 'நம் அரசருடைய கண்களில் கோபாக்கினி உமிழ்வது கண்டும், நாம் வீணே மலைபோல் வளர்ந்த தோளினைச் சுமப்பதனால் பயன் என்னை? போரிலே சென்று பகைவரை வெற்றி கொண்டு விருது பெறுவோம், இல்லையேல் அப்போர்க்களத்திலேயே இறந்து பட்டு வானுலகேறுவோம், இவ்விரண்டி லொன்று புரியத் துணியுங்கள்' என்பார் சிலர் 'அரசரது உணவு பெற்று ஏவல் செய்யும் வீரர்கள் நாமிருக்க, அரசருக்கு மன வருத்தத்தை யுண்டு பண்ணினவர் உயிரோ டிருப்பரெனில், நாமெல்லோரும் இறந்துவிடவே வேண்டும், இதனினும் வழி நமக்கு வேறு இல்லை' என்பார் சிலர் 'வீண் வார்த்தை பேசிக் காலங் கழிப்பதில் யாது பய னுண்டாகப் போகிறது? நம்மை இதுகாறும் வடுப் படாது காத்து வந்த காவலர் புகழுக்கு வடு வரும்படி நமது தோளில் வடுவின்றிக் காத்தல் தருமமாகுமா? விஞ்சையன்

மகளை மணந்த அந்தக் காளையும் அவன் கேளிரும் நாணப் பெரும்பாடு படும்படி செய்வது நமது தருமம்' என்றனர் சிலர். சிலர், 'இன்னே போர்க் கெழுங்கள், நமர்களுக்கு முனிவு செய்த வேந்தனது முடித்தலையைக் கொணர்வோம், நம் காவலரைக் கடிமணம் செய்யாத கன்னியினும் இனிய மொழியாளைக் கைப்பற்றிக் காவலர்முன் கொண்டு வந்து விடுவோம்' என்றனர்.

"இவ்வாறாக அவர்கள் தங்கள் தங்கள் மனத்திற் கருதியவாறு பேச, அச்சுவகண்டன் மகன் கனகசித்திரன் அவர்களைக் கையமைத்து நிறுத்தி, அரசனை நோக்கி, 'எந்தையீர், தோள் தட்டித் தூணைக் கரங் கொட்டி ஆரவாரித்து, வாள் திடைத்து, நோக்கி நோக்கி, வாய் வீரம் பேசுவது யார்க்கும் எளிதே. பேசிய வண்ணம் பெரும்போரில் பின் வாங்காது நின்று பேரெடுப்பதல்லவோ அரிதாயிருக்கின்றது? இவர்கள் பேசியபடி காரியத்தை முடிப்பார்களென்பது என்ன நிச்சயம்? இத்தக் காரியத்திற்கு நான் செல்வேனானால் தவறாமல் வெற்றியுடன் திரும்பி வருவேன். என்னை எதிர்ப்பவர் தேவரே யாயினும் ஆகுக, அல்லது இராக்கதரே யாயினும் ஆகுக, இவர்களன்றி மன்னவராயினும் ஆகுக, அவர்களுடனெல்லாம் விசைப் போரினாலாவது விற்போரினாலாவது மற்போரினாலாவது போரிட்டு வெல்வேன், அவர்களை யெல்லாம் பிடித்துக் கட்டி வந்து நமது நகர் வாயிலில் நிறுத்துவேன். இதுவுமல்லாமல், உம்மை வஞ்சித்த அக்கன்னிகையையும் அக்கன்னிகையை மணந்த அக்காளையையும் உயிருடன் பற்றி வந்து உமது தாளிற் கிடத்துவேன். அப்படி நான் செய்த பின்னரே உம் சீற்றத்தை மாற்றுக.

நான் பகைவர்க்கெல்லாம் ஆண் சிங்கம் போன்றிருக்க, குள்ள நரியைப் போன்று இவர்கள் என் முன் துள்ளி வீரம் பேசுவானேன்? இது தங்கள் போல்வார்க்குத் தகைமைத் தருமன்றோ? ஆதலின், என்னை இக்கணமே போருக்கு அனுப்புக. வெற்றி பெற்று வருகின்றேன்' என்று வீர வார்த்தைகள் பேசி ஆரவாரித்தனன்.

"அவன் வீர மொழிகளால் அச்சுவ கண்டர் கோடை காலத்தில் கனன்றெரியுங் குன்றில் மழை பெய்தாற்போலச் சிறிது உள்ளங் குளிர்ந்து சீற்றத்தை மாற்றினார். அப்பொழுதே அச்சுவ கண்டருடைய தம்பியான வச்சிர கண்டன் எழுந்து அவரைப் பார்த்து, 'அண்ணா, எங்களுடைய ஆண்மையெல்லாம் அழிந்தனவா? அல்லது நாங்களெல்லோரும் இழிந்தவர்களா? எங்களையும் வெல்லும் ஆற்றலுடைய பகைவர் உண்டாயினரோ? எவ்வகையினரையும் வெல்லும் சக்தி எங்களிடமிருக்கத் தாங்கள் இங்ஙனம் சினந்து தாங்களே பகைவர்மேற் செல்லக் கிளர்ந்ததல் தகுதியாமா? கருங்கடலில் ஓடும் பெரிய மரக்கலம் சிறு குளத்துட் செல்லுமா? நாம் கருதிச் செல்லும் பகைவர் வானவரும் அல்லர், தானவரும் அல்லர், அற்ப மாந்தர். அவர்கள்பால் வித்தியாதர வேந்தர் வேந்தராகிய தாங்கள் போருக்குச் செல்லல் முறைமையன்று. யாம் போய் அவர்களை வென்று வருகின்றோம். நீவிர் எம்மை ஏவுவீராக' என்று வீர வாதம் பேசி வேண்டி நின்றனன். அவனுக்குப் பின் அச்சுவ கண்டருடைய தம்பிமாரும் மக்களும் தளகர்த்தராகியோரும் பலபல விதமாக வீர வார்த்தைகளைக் கூறி ஆரவாரித்தார்கள். அதனால், அச்சுவ கண்டர் கொண்ட கோபத்தை மாற்றி மனவாறு

கல் கொண்டனர். பின்பு அவர் அங்குள்ளார் யாவரையும் நோக்கி, 'அரசு முறையில் அரசன் அயர்வில்லாமற் செய்ய வேண்டிய காரியங்கள் பல விருக்கின்றன'' என்று கூறி, அவர்களை விட்டு நீங்கி மந்திர சாலைக்குச் சென்றனர். ஆங்கு நிகழ்ந்தனவும் யானறிந்துள்ளேன். அவற்றையுங் கூறுகின்றேன், கேட்பீராக,

"அச்சுவ கண்டர் மந்திர சாலையை அடைந்ததும் மந்திர சாலையிலிருந்த மந்திரிகளும் மதிவல்லோரும் பிறரும் எழுந்து வணக்கம் செய்து, தத்தம் ஆசனத்திலமர்ந்ததும், மன்னருக்கு உணர்வும் கண்ணும் மற்றமும் வலியுங் கோலுமாய் விளங்கிய மதி மந்திரி அரிமஞ்சு என்பான் படைத் தலைவர்களையும் மற்றையோரையும் நோக்கி, 'புஜ பலம் மிக்க வீரர்களே, நமது நாட்டிற் பிறந்த அரச கன்னிகையின் பொருட்டு நம் மன்னர்க்குண்டான கோபத்தை நீவிர் யாவரும் கண்டனன்றே? அதற்கு இனி நாம் மேல் செய்ய வேண்டுவனவற்றை ஆராய்ந்து உரைமின்' என்னலும், மேகக்கூட நகரத்தை யாளும் தூமகேது என்பவன் ஆலோசித்து, 'நமது வெள்ளி மலையிற் பிறந்த அருங்கலத்தை நம் மன்னர் மன்னரன்றி மற்றெவர் பெறுதற்குரியார்? நியாய வரம்பு கடந்து நம் மன்னனைத் தவிர்த்துத் தன் மகளை மாற்றடப் பூச்சிக ரீத சடியெனும் மன்னனே மிகுதியும் குற்றம் செய்தவ னாகின்றான்' என்று கூறினன். அதனைக் கேட்ட அனலபுரத் தரசன் அங்கார வேகன் என்பான், 'இந் நூபுரத்து மன்னன் நம்மைப் பெரிதும் இகழ்ந்தனன். அவனைக் கிளைகளோடும் இன்றே கொன்று எமனுலகேற்றுவோம் யாவரும் வம்மின்' என்று அழன்று நெஞ்சினுய ஆரவாரித்துப் பேசி

கான பகைவர்க்கெல்லாம ஆண் சிஙகம போனறிருக்க, குள்ள நரியைப் போன்று இவாகள என் முன் துள்ளி வீரம பேசுவானேன ? இது தஙகள போலவாககு நகைப்பைத தருமன்றே? ஆதலின், என்னை இக்கணமே போருக்கு அனுப்புக. வெற்றி பெற்று வருகின்றேன' என்று வீர வார்த்தைகள பேசி ஆரவாரித்தனன

"அவன வீர மொழிகளால அச்சுவ கண்டா கோடை காலததில கனன்றெரியுங குன்றில மழை பெய்தாற்போலச் சிறிது உள்ளங குளிர்ந்து சீற்றததை மாற்றினா அது பொழுதே அச்சுவ கண்டருடைய தமபியான வச்சிர கணடன எழுந்து அவரைப் பார்த்து, 'அண்ணா, எஙகளுடைய ஆண்மையெல்லாம் அழிந்தனவா ? அல்லது நாஙகளெல்லோரும இழிந்தவா களா ? எஙகளையும வெல்லும ஆற்றலுடைய பகைவா உண்டாயினரோ? எவவகையினரையும வெல்லும சக்தி எஙகளிடமிருக்கத தாஙகள இஙஙனம எண்ணுவது தாங களே பகைவாமேற செல்ல நினைத்தல தகுதியாமா ? கருஙகடலில ஓடும பெரிய மரககலம சிறு குளத்திற் செல்லுமா ? நாம கருதிச செல்லும பகைவா வான வரும அல்லா, தானவரு மல்லா, அறப மாந்தா அவா களபால விததியாதா வேநதா வேநதராகிய தாஙகள போர்க்குச செல்லல முறைமையனறு. யாம போய அவாகளை வென்று வருகின்றோம நீவிா எமமை ஏவு வீராக' என்று வீர வாதம பேசி வேண்டி நின்றனன்.
அவனுக்குப பின அச்சுவ கண்டருடைய தமபிமாரும மக்களும தளகாததாதியோரும பலபல விதமாக வீர வார்த்தைகளைக கூறி ஆரவாரித்தாாகள அதனால, அச்சுவ கண்டா கொண்ட கோபத்தை மாற்றி மனவாறு

கல் கொண்டனர். பின்பு அவர் அங்குள்ளார் யாவரை
யும் நோக்கி, 'அரசு முறையில் அரசன் அயர்விலனாய்ச்
செய்ய வேண்டிய காரியங்கள் பல இருக்கின்றன''
என்று கூறி, அவர்களை விட்டு நீங்கி மந்திர சாலைக்குச்
சென்றனர். ஆங்கு நிகழ்ந்தனவும் யானறிந்துள்ளேன்.
அவற்றையுங் கூறுகின்றேன், கேட்பீராக,

"அச்சுவ கண்டர் மந்திர சாலையை அடைந்ததும்
மந்திர சாலையிலிருந்த மந்திரிகளும் மதிவல்லோரும் பிற
ரும் எழுந்து வணக்கம் செய்து, தத்தம் ஆசனத்தி
லமர்ந்ததும், மன்னருக்கு உணர்வும் கண்ணும் மாற்று
மும் வலியும் தோளுமாய் விளங்கிய மதி மந்திரி அரி
மஞ்சு என்பான் படைத் தலைவர்களையும் மற்றை
யோரையும் நோக்கி, 'புஜ பலம் மிக்க வீரர்களே, நமது
நாட்டிற் பிறந்த அரச கன்னிகையின் பொருட்டு நம்
மன்னர்க்குண்டான கோபத்தை நீவிர் யாவரும் கண்டீ
ரன்றே? அதற்கு இனி நாம் மேல் செய்ய வேண்டுவன
வற்றை ஆராய்ந்து உரைமின்' என்னலும், மேககூட நக
ரத்தை யாளும் தூமகேது என்பவன் ஆலோசித்து,
'நமது வெள்ளி மலையிற் பிறந்த அருங்கலத்தை நம் மன்
னர் மன்னரன்றி மற்றெவர் பெறுதற்குரியார்? நியாய
வரம்பு கடந்து நம் மன்னரைத் தவிர்த்துத் தன் மகளை
மாறுபடப் பூச்சிகீதச் சடியெனும் மன்னனே மிகுதியும்
குற்றம் செய்தவனாகின்றான்' என்று கூறினன். அத
னைக் கேட்ட அனலபுரத் தரசன் அங்கார வேகன் என்
பான், 'இந்த நூபுரத்து மன்னன் நம்மைப் பெரிதும்
இகழ்ந்தனன் அவனைக் கிளைகளோடும் இன்றே
கொன்று எமனுலகு ஏற்றுவோம் யாவரும் வம்மின்'
என்று அழன்ற நெஞ்சினனாய் ஆரவாரித்துப் பேசி

னன். அவனுக்குப் பின் அச்சுவ கண்டருடைய காதற் றோழனாகிய அரிசேனன் என்பவன் எழுந்து, 'நாம் இவ்வனம் காணாத இடத்திலிருந்து வாய் வளப்பம் ஒன்றினாலேயே பகைவரை வெல்லலாமெனில் இன்னும் நன்றாய்ப் பேசுவோம். இதனால் முடியாமல் வில்லெடுத்துப் போர்புரிந்த வொன்றினாலே முடியுமெனக் கருதுவீர்களேயானால் என்னை யனுப்புங்கள். யான் போய் வெற்றி பெற்று வருகின்றேன். அரச நீதியிலே கூறிய சாம பேத தான தண்ட மென்னும் சதுர் வித உபாயங்களில் முதல் மூன்றாய சாமபேத தானங்கள் இறத்தற்கு அஞ்சுவோருக்கும், புஜ பலம் சேனா பலமில்லாதாருக்கு மன்றோ கூறப்பட்டன? அவை நமக்கு வேண்டா. இம்மந்திராலோசனையில் இனி இத்தகைய உபாயங்களை ஆராய்தலை நிறுத்தித் தண்டெடுத்துப் போர் புரிதலாகிய காரியத்தினைப் பின் பற்றுவோம்' என்றனன். அவன் அவ்வாறு மொழிந்தமைக்கு அச்சுவ கண்டர் மிகவும் மகிழ்ந்து, அவனைப் பாராட்டி, 'இப்படைவீரன் மிகவும் நன்றாய்ச் சொன்னான்! வசையில்லாத இவ்வசனமே சிறந்த இசையைத் தருவதாகும்' என்றுரைத்தனர். அப்பொழுது கருடத் துவசன் என்பவன் எழுந்து, 'இப்பொழுது நாம் போர் மேற் கொள்ளுதலே தகுதியெனக் கொண்டோமாயினும், நாம் அவர்களுடனே தொடங்கும் போர் தெய்வப் போரோ? அல்லது மானுடப் போரோ? அதனை முன்னர் ஆய்ந்து உரைமின்' என்றனன். அது கேட்ட நிருநிலயத்த தாசன் ஸ்ரீபாலன், 'அதனை யான் ஆராய்ந்து கூறுகின்றேன் யாவரும் அமைதியுடன் கேட்பீராக வீரர்களே, போர் முனையில் உபயோகிக்கப்படும் படைகள் மானுடப் படை, தெய்வப்படை, சங்கீரணப்படையென மூவகைப்

படும் படைக்கலங்களைப் பிரயோகிக்கும் தொழில்களும் முத்திறத்தனவாகும். அவை அஸ்திர வித்தை, சஸ்திர வித்தை, மாய வித்தை என்பனவாம். அவற்றுள் அஸ்திரமென்பன கைவிடும் படை. அவை அம்பு, எறிவேல், சக்கரம் முதலியன. சஸ்திரமென்பன கைவிடாப் படை. அவை வாள், கதை முதலியன. முற்கூறிய வித்தைகளிலே அஸ்திர வித்தை நால்வகைப்படும், சஸ்திர வித்தை இரு வகைப்படும். இன்னும் இப்படைக்கலங்களின் விகற்பங்களையும் போரின் பகுதிகளையும் உரைக்கப் புகுந்தால் அவை சாலப் பெருகும் ஆதலின், அவற்றை விடுத்து, முன்னெடுத்துக் கூறிய மூவகைப் படைகளுள்ளும் மக்களுடன் போர் செய்தற்கு மானுடப் படையே நெறியெனக் கொளினும், நாம் அவர்களுடன் போர் செய்யுங் காலத்து அவர்களுக்கு உதவியாக விஞ்சையரும் வந்து நம்மை எதிர்ப்பாராகலால், விஞ்சையருடன் பொருவதற்குத் தெய்வப்படையும் மாயப்படையும், மானுடருடன் பொருவதற்கு மானுடப்படையும் உபயோகிக்க நாம் எப்பொழுதும் ஆயத்தமாயிருத்தல் வேண்டும். இவ்வகையாக எவ்வகைப் போரியற்றவும் நாம் தயாராயிருத்தலே நியாயமாகும்' என்றனன். அச்சுவகண்டர், 'அதுவே சரி, அப்படியே செய்யுங்கள்' என்று ஆஞ்ஞாபித்துத் தம் அரண்மனையை அடைந்தனர்.

"அதன் பின் ஆண்டிருந்த அரசர்களிற் சிலர், 'தென்றிசைச் சேடியை அக்கினிக் கடவுளுக்கு இரையாக்குவோம்!' என்று கூறிச் சென்றனர். ஏனையோர் இங்கே போருக்குவர ஆயத்தப்படுகின்றனர். இவற்றையறிந்துகொண்மின்" என்றனன்

விஞ்சைய ஒற்றன் இவ்வாறு சொல்லக் கேட்ட சுவலனசடியரசன் தன் மகன் அருக்க கீர்த்தியையும் மருகர்கள் விசயதிவிட்டர்களையும் பயாபதி யரசன் முதலியோரையும் அழைத்து ஒருங்கு கூட்டி, அவர்களுக்கு உத்தர சேடியில் நிகழ்ந்த விஷயங்க ளனைத்தையும் ஒற்றன் உரைத்தவாறே யுரைத்து, "யாம் இனி மேற் செய்ய வேண்டுவன யாவை? அவற்றைத் தெரிக்குரைமின்" என்றனன். அப்பொழுது ஆண்டு நின்ற வீரர் பலரும் மானத்தில் மிக்க கோபமுடையவராய்ச் சினங்கொண்டு படபடப்புடன் பலபல வீர வார்த்தைகளைப் பேசினர். அந்தச் சமயத்தில் அருக்க கீர்த்தி எழுந்து தன் தந்தையைப் பார்த்து, "பிதாவே, யான் எனது கையில் வில்லேந்தி காங்கி நாணேற்றிட்டுக் கொடுங் கணைகளை விடுவிடென விடுத்துப் பகைவர்க ளுடலத்தைச் சிதற வடித்து எங்கும் உதிர வெள்ளம் புரண்டோடச் செய்வேன். அப்பொழுது எனது போரின் திறத்தை நன்கு காணலாம். இப்பொழுது நான் வாய்ப் பறை யடிப்பதில் வருவதென்ன? போர் முனையில் என்னைக் காண்மின்" என்று கூறி முடித்தனன். அவனுக்குப் பின் விசயன் எழுந்து விஞ்சையர் மன்னனை நோக்கிப் புன் சிரிப்புடன், 'நம்மோடு போர் புரிய வருபவர் தேவர்களாயின் நாம் சிறிது சிந்தித்துச் செய்ய வேண்டும். வெள்ளி மலையிலிருக்கும் வித்தியாதரப் புழுக்கள் வரின் நாம் அவற்றிற்கு அஞ்சுவதா? சிறிதும் அஞ்ச வேண்டுவதே யில்லை. எவர்கள் வரினும் வருக. அவர்களது மார்பமாகிய வயலை எனது கைக் கலப்பையால் தசையுடன் கூடிய இரத்தச் சேறு பொங்கி எழும்படி உழுது, வெற்றியாகிய விதை விதைத்துப் புகழாகிய பயிரை விளைப்பேன்" என்றனன். இவ்வாறே ஏனைய

வீரர்களும் வீரம் பல கூறி ஆர்த்தபின், முடிவிலே இளைய நமபியாகிய கிட்டட குமாரன் தன மாமன பாத கமலங்களை வணங்கி எழுந்து, "மாமா, பலபடட பேசியாவதென்னே? போரிட வரும் சேனைகள் எனக குக கணடு விருசினு னன்றோ, இவர்கள பொருவதற குண்டு? தாங்கள அதைக குறித்துச் சிறிதும் அஞசு தல வேணடா. எவ்வாறாயிறறும் யானிருக்கின்றேன்" என்று வீரத் தொனியில் பேசி நின்றனன அமமொழி களைக் கேட்ட சடியரசன் மிகவும் மனம் மகிழந்து மருகனை நோக்கி, "குமர, நீ விருசசையருடன பொருவ தறகு அரியபாலனவாகிய வித்தைகள இரண்டுண்டு அவை மாய விததையும மநதிரோபதேசமும் மாரும அவைகளை இப்பொழுதே பெறறுக்கொள்ளுவாயாக" என்று நிகிட்டனை அருகழைத்து, அவன் கரததிய மாய விததையையும மநதிராடசரத்தையும முறையே உபதேசித தருளினன் நிகிட்டன அவைகளை மிகுந்த பகதி சிரத்தையுடன மனத்திற பதித்து, அபபியசித்த வளவிலே மாயா தேவதை ஆகாய மார்க்கமாய் வந்து, "அரச குமரனே, யான செய்யும பணி யாது?" என்று வினவ, அவன் அதறகுரிய வந்தனை வழிபாடுகளியறறி, அத்தேவதையை நோக்கி, "யான உமமை வேண்டி நிறகும பொழுது எனமுன வந்து எனக்கு உதவி புரிக திடுக" எனக் கூறி, அதனை அதனிடத்திறகுப் போக விடுத்தனன்

இங்ஙனமாக மாய விததையுங கைவரப பெறறுக கறபக லோகாதிபதி யெனன எல்லோருங்கும் தனனடி பொருநதத நிகிட்ட நமபி யாவருடனும இனிது

குமாரிருக்கும் பொழுது விண்ணின் ஆருக வந்த இரண்டு விஞ்சைய தூதர் இளைய நம்பியின் செவி சுடும் வண்ணம் சில வார்த்தைகள் புகல்வாராயினர் "அரசர்களே, யாங்கள் வித்தியாதர குலத்தையாளும் அச்சுவ கண்டருடைய தூதர்கள் எம்மன்னர் நம் தமர்க்குக் கூறிய வாய் மொழியைக் கேட்பீர்களாக வெள்ளி மலையின் தக்கிண சேடியையாளும் வித்தியாதர வேந்தன் சுவலனசடியின் புத்திரியாகிய கன்னியைத் தருகின்றீர்களா? அல்லது அக்கன்னியை மணந்த காளையின் சென்னியைத் தருகின்றீர்களா? இரண்டிலொன்றை விரைந்து கூறுமின்" என்றனர் 'கன்னி' என்னும் சொல் சுடுசரம்போலத் திவிட்ட நம்பியின் செவியிற் பட்டதும், திவிட்டனுக்கு அளவில்லாத கோபம் மூண்டது, கண்களில் தீப்பொறி பறந்தன, இதழ்கள் படபடவென்த் துடித்தன, கோபாக்கினியினால் சரீரமுழுதும் உருகின்றதுபோல வியர்வைத் துளிகள் வெண் முத்தமென வழிந்தன கோபத்தின் மிகுதியால் திவிட்ட குமாரன் தனது தெய்வத் தன்மையுள்ள விசுவ சொரூபத்தினை அண்ட முகடுற எடுத்துநின்றனன் அருகிலிருந்தோர் யாவரும் ஆனந்தமும் அதிசயமும் கொண்டு, கண்ணிமைக்காமல், விண்ணவரே போலக் கைமெய்யாடாமல் திகைத்து நின்றனர் அப்பொழுது திவிட்ட குமாரன் அச்சுவ கண்டனுடைய தூதர்களை நோக்கி, "பேதைகளே, நீங்கள் தூதர்களாக வந்தமையின் உயிர் தப்பினீர்கள் இல்லையேல் இக்கணமே இயமனுல சேர்ந்திருப்பீர்கள் இனி நீவிர் அரைக்கணமும் தாழ்த்தாது இவ்விடம் விட்டகலுமின். புன்சொல் இயம்பிய நும் மன்னனுக்கு ஆண்மை யிருக்குமேல், பெண்களைப்போல் இங்ஙனம் புகலாது போருக்கு

வாச் சொல்லுங்கள்" என்று கூறி வெருட்டினன் அவர்களும் அவனது விச்சுவ சொரூபத்தினையும், விளம்பிய வீர வார்த்தைகளையுங் கேட்டு உளம் நடுங்கியவர்களாய் ஓடத் தலைப்பட்டார்கள் அச்சமயத்தில் இவிட்டனுட னிருந்த அரசர்கள் அச்சுவ கண்டனுடைய தூதுவர்களுரைத்த அற்ப மொழிகளுக்கு ஆருச் சினங் கொண்டு அவர்களைப் பார்த்து, "உம் அரசனது ஆஞ்ஞா சக்கரத்தையும் செல்வ நலத்தையும் பறித்து எம் இனிய நாயகிக்கு ஈந்த பின்னரே அவ்வேழை நமது வல்லமையை அறிவானன்றி அதற்கு முன்னர் அறியமாட்டான் வெள்ளி மலைக் கிறைவன் சுவலனசடியின் கன்னிகா ரத்தினம் நம் காளையை மணந்தாளென்று முன்னரே கேள்விப்பட்டிருந்தும் இதுகாறும் வறிதேயிருந்து இப்பொழுது மலை மறைவிலிருந்து வீரம் பேசுவானேன்? அவனுடைய வீரம் இத்தகையதோ!" என்று பேசி, பலவாறு இழித்துக் கூறி ஏசி, மீண்டும் அத்தூதர்களை நோக்கி, "அறிவியின் தூதர்களே, நும் மரசன் மானத்தை மதிக்காது உயிரையே பெரிதாக மதிப்பானேல் இக்குமாரனை வந்து பணியச் செய்க இல்லையேல், எம்முடன் போர் மலையச் செய்க" என்று கூறினார்கள் விரைந்தோடும் தூதுவர்கள் அறைந்து கூறும் அரசர்களது கடுமொழிகளையும் காதிலேற்றுக் கன்ன மார்க்கமாய்க் காற்றுய்யப் பறந்து சென்றார்கள் அச்சமயத்திலேயே ஆகாயத்திலே, "காளை இத்தக்க காளை அச்சுவ கண்டனது சிரத்தைக் கண்டிதம் செய்து வெற்றிமாலை சூடுவான்" என அசரீரி முகத்தான் ஒரு தெய்வ வாக்குப் பிறந்தது அதனைக் கேட்டோ ரெல்லோரும் உவகை யென்னுங் கடலு ளாழ்ந்தனர். தேவ துந்துபி தாம தாமென முழங்

திறந்து பூமகள் மேனி குளிர்ந்தாள். போதன மாநகர மெங்கும் பொன் மகள் தாண்டவம் புரிந்தாள். நகரத்தார் யாவரும் குதூகலத்தராய் விளங்கினர். திவிட்டனது திருமேனியில் தேஜோ மயமான ஒரு திவ்விய சோதி திகழ்ந்தது. ஆடவர்க்கு வலத் தோள்கள் துடித்தன. பெண்களுக்கு இடக் கண்கள் துடித்தன. வீரர் கையிலுள்ள வாளாயுதங்கள் தாமே பளபளவென ஒளி பெற்றுத் துலங்கின.

இங்கே இவ்வாறு நற்சகுனங்கள் நிகழ, பகைவர் பக்கத்தே இரத்தின பல்லவத்தில் முரசு முதலிய பறைகளில் அரவம் முதலிய விஷ ஜந்துக்கள் குடி கொண்டன. கொடுங்குடை நடுவில் தேள் கூடுகள் தோன்றித் தொங்கின. தேர்க்கூம்புகளிற் காக்கைகள் எதிரெதிர் நின்று கரைந்தன. களைத் தலத்தில் செந்நீர் மழை சொரிந்தது. மலைகளின் உச்சியில் கவந்தங்கள் எழுந்தாடின. மடமாதர் தம்மணாளரொடு மனம் வேறுபட்டுப் பிணங்கினர். அவர்கள் காதணிகள் தாமே கழன்று விழுந்தன. அரசர் சிரந்தொறும் மணி முடிகள் சரிந்து தெரிந்தன. அவர்களுடைய வெற்றி தரும் வேலாயுதங்கள் கூர் மழுங்கி ஒளி குறைந்து கிடந்தன. நெடுஞ் சிலைகள் அவர்தம் கையினின்றும் இற்றுக் கீழே விழுந்தன. ஆடவர்க்கு இடத்தோளும் இடக்கண்ணும் துடித்தன. மடவார்க்கு வலத்தோளும் வலக்கண்ணும் துடித்தன. சேனைகளின் நடுவே விண் மீன்கள் உதிர்ந்தன. இங்ஙனம் எண்ணிறந்த தீச்சகுனங்கள் நிகழக் கண்டும் மாற்றவர் பக்கத்தார் இவைகளினாலே துன்பம் வருமென்பதை எவ்வளவும் எண்ணாது, மானமே ஆன

பொருளாகக் கொண்டு, அவ்விஞ்சையராக வீரரும் எத்திசையும் யுத்த சன்னத்தராய் நின்றார்கள்.

அப்பொழுது போதனமா நகரம் சென்ற தூதுவர்கள் மீண்டு வந்து அச்சுவ கண்டனைக் கண்டு வணங்கி ஆண்டு நடந்த சமாசாரத்தைக் கூறினார்கள். அச்சுவ கண்டன் அச்செய்தி கேட்டதும் படத்தின்மேல் அடியுண்ட பன்னகம் போல அழன்று சிறுகக் கோப நகை புரிந்து, முன்னின்ற படை வீரர்களை நோக்கி, "நீங்கள் இன்னே போதனமா நகரம் சென்று மாநில மன்னனையும் கன்னியை வலியச் சென்று கொடுத்த சடியையும் கொன்று, வீரவாதம் பேசிய அச்சிறியனையும் அக்கன்னியையும் பிடித்து வாருங்கள்" என்று ஆஞ்ஞாபித்தான்.

அப்பொழுதே வித்தியாதர வேந்தரெல்லோரும் ஒல்லென ஒலித்துக் கரி பரி தேர் காலாட் படையெனும் நால்வகைப் படைகளையும் திரட்டி, அவைகளோடு போதனமா நகரத்தின்மேல் கடல் கிளர்ந்தெழுந்தது போல ஆரவாரித்துச் சென்றனர். அவ்வமயம் அச்சேனை சமுத்திரத்தில் முரச வாத்தியங்கள் கோடையிடி யெனக் குமுறின. சங்க நாதங்கள் எங்கும் செவிடுபட எழுந்தன. பறை வாத்தியங்கள் பத்துத் திக்கும் அதிரக் கறங்கின. இன்னும் பலவாகிய கொம்பு, தாரை, துத்தரி, சின்னம் முதலிய வாத்தியங்கள் அலைகடலெனக் கோஷித்தன. படையினிடையே பல சின்னங்கள் பொறித்த கொடிகளும் குடைகளும் குளிர் சாமரைகளும் மணிகள் பதித்த முடிகளுமே ஈண்டியிருந்தன. இவ்விதமாக விஞ்சையர்கள் சகல படை

அணிகளோடும் மணக் கோலம் சிறிதும் மாறாத போதனமா நகரத்தை வந்து நண்ணினர். அவர்களைக் கண்டு இவிட்டனுடைய படைவீரர்கள் வீராவேசங் கொண்டு, நால்வகைப் படைகளையும் அக்கணமே திரட்டி எதிர்நின்று ஆரவாரித்தார்கள். எங்கும் ஒரே பேரொலியாயிருந்தது. பூமியும் கம்பித்தது. மலையும் நிலை தடுமாறிற்று. மண்ணவரும் விண்ணவரும் மதி மருண்டனர்.

இங்ஙனமுள்ள இரு திறச் சேனைக்கும் உடனே போர்மூண்டது. தேரோடு தேரும் யானையோடு யானையும் புரவியோடு புரவியும் நெருங்கிப் போரிடுங்கால், மலையோடு மலையும் முகிலோடு முகிலும் கடலோடு கடலும் வெகுண்டெழுந்து மலைவதுபோல இருந்தது. முதல் மூன்று படைகளிலிருந்த வீரர்கள் இவ்வாறு மலைந்து, சேனை வீரர்களையும் வாகனாதி வரிசைகளையும் வெட்டி வீழ்த்திக் குன்றுபோலக் குவித்துவிட்டார்கள். காலாட்படையிலிருந்த வீரர்கள் வில் வாள் வேல் முதலிய ஆயுதங்களைத் தாங்கி, ஒருவரையொருவர் தாக்கியும் வெட்டியும் குத்தியும் அடித்தும் போர் புரிந்தார்கள். பகைவர் படைகளுக்கெதிரே பகலவன்போல அருக்ககீர்த்தி தோன்றி, வில்வளைத்துக் குணத்தொனி செய்து, வெங்கணைகளை விடுவிடெனப் பகைவர்மீ தெறிந்தனன். அதனால், சேனை வீரர்கள் கரம் வேறு, சிரம் வேறு, கால் வேறு, தோள் வேறு, தொடை வேறாக அறுப்புண்டு வீழ்ந்தனர். அருக்ககீர்த்தி தூணீரத்தினின்று மெடுத்துப் பாணங்களைப் பிரயோகித்தமையை எவரும் காணாது சேனை வீரர் யாவரும் மளமளவென்று மண்ணில் வீழ்ந்து மாள்வதையே கண்டனர். அதனால், இரத்த

வெள்ளம் எங்கும் பரந்தோடியது. அருக்க கீர்த்தியோடு தனி வீரராக எதிர் நின்று போர்புரிவார் எவரும் இன்மையால், விஜயைய வீரர் யாவரும் ஒருங்கு கூடி, வீரத்துடன் பலவாகிய ஆயுதங்களை வீசி எறிந்தனர். அவற்றைத் தடுக்க அருக்க கீர்த்தி அத்திரங்களைச் சரமாரியாகத் தொடுக்க ஆகாயமெங்கும் இருள் பாவியது. அவன் ஒரு கணை தொடுக்க அஃது ஆயிரமாகவும், ஆயிரம் தொடுக்க அவை நூறாயிரமாகவும் பெருகி, மண் தொடங்கி விண்ணளவாக எள்ளிட இடமின்றி எங்கும் கொடுங்கணைகளே நிரம்பியிருந்தன. அக்கணைகள் விண்ணிடை வரும் விஜயையர்களது கண்ணிடைப் புகுதலால் அவர்கள் கண்ணொளி இழந்து மண்ணிடை வீழ்ந்து மயங்கினார்கள். விஜயைய வீரர்களெல்லாம் இவ்வெதிர்ப்பால் ஒருமிக்க மண்ணில் விழுந்து மாண்டார்கள். எஞ்சியோரிற் சிலர் நஞ்சுண்ட காகம் படக்குமாறுபோல, மாண்ட படைகளின் நடுவே மாண்டார்போ லிருந்து, சமயம் வாய்த்ததும் எழுந்து அலறி ஆகாய மார்க்கமாக ஓட்டமெடுக்கலானார்கள். இவைகளையெல்லாம் கண்ட விஜயைய தூதர்கள் இரத்தின பல்லவத்திற்கு ஓட்டோடியுஞ் சென்று அச்சுவ கண்டனைக் கண்டு வணங்கி, "எம் மாசரே, நம் பெருஞ் சேனைகளெல்லாம் அருக்க கீர்த்தியின் கையம்புகளால் அழிந்தொழிந்தன. அவற்றிலே உயிர் தப்பிய வீரிற் சிலர் ஓட்டெடுத்து ஒளியலாயினர். இவற்றை யாங்கள் கண்டு வெருண்டு இவ்விடம் ஓடி வந்தோம்" என்று சாலவும் ஓலமிட்டார்கள்.

அம்மாற்றம் புண்ணிலே வேல் பாய்ந்தாற்போல அவன் மனத்திற் பாய்ந்து தைத்தது. அவன் அடங்

கர்க்க கோபங் கொண்டு, கையொடு கைதாக்கிக் கோப நகை புரிந்து, "விறலுடைய நம் சேனை வீரர்கள் திறன் சிறிதுமில்லாத அருக்கக் கோதியின் இரு தோள்களுக்கும் ஒரு வில்லுக்குமா மாண்டும் மறைந்தொழிந்தார்கள்? நமது விறலுந் திறனும் வெகு நன்று! வெகு நன்று!!" என்று கூறி, வீர வாதம் பல பேசி, மகா பலம் பொருந்திய சேனைகளோடும் தம்பிமார் துணைவர்களோடும் வெள்ளி விலங்கலை விட்டுப் போர்க்கோலங் கொண்டு புறப்பட்டு, அருங்கலம் என்னும் பெரும்பேர் பெற்ற குன்ற மொன்றினிற் றங்கிப் பாசறையிட்டனன். அப்படைவீட்டில் யாவரும் தங்கியிருக்கும்பொழுது, அச்சுவ கண்டனுடைய தம்பிமாருள் மூத்தவனான இரத்தின கண்டன், "நம்முடைய முன்னோனாகிய மன்னர் மன்னனது மனம் வருந்தத் தனஞ்சயன் செய்த சடியாசனை அவன் கிளைகளோடுங் கொன்று, அவன் மகளையும், அவளை மணந்த கணவனையும் பிணைத்து, அண்ணன் பாதத்தே கிடத்துவோம் இல்லையேல், இவ்வுயிரை இழப்போம்" என்று இன்சொற் கூறினன் அவனுக்குப் பின்னோன் நீல கண்டன், "மனிதர்தாமா நம்மை வெல்ல வல்லவர்?" என்று வளைந்த பற்களையுடைய வாயைப் பிளந்து கூவினன் அவன் இளவல் வைர கண்டன், "நான் ஒருவனே மாற்றலர் சிரங்கள் மண்ணிலுருளும்படி செய்வேன்" என்று யானை மருப்புப் போன்ற வளைந்த கோரத் தந்தங்கள் தோன்றும்படி கோப நகை காட்டிக் கூறினன். அவனுக்கு நேர் இளையவன் சுகண்டன், "புள்ளரசனாகிய கருடனோடு அரவங்கள் எதிர்ப்பதுபோல நம்மோடா மனிதப் பூடுகள் எதிர்க்கின்றன! இது வெகு நன்று! வெகு

னன்று!!" என்று கையோடு கையறைந்து வெடிபடு முழக்கம்போல் நகைத்தனன்.

இவர்கள் மொழிகளை யெல்லாம் கேட்ட அச்சுவ கண்டன் அகங் குளிர்ந்து, "எம்பியரே, நமது வல்லமை யையும் மகிமையையும் பொருட் படுத்தாத பகைவ ருடைய போர்க் களத்திலே நம் பெயர் என்றும் நின்று நிலவும்படி செய்வீர்கள்" என்று பணித்து, யாவ ருடனும் போதனமா நகரை வந்து அடைந்தனன். அச் சுவ கண்டனுடைய சேனைகள் பூமியில் இழியவும், திவிட்டனுடைய சேனைகள் சமுத்திர மென்னத் திரண்டு, கஞ்சுடனே கஞ்சு சென்று எதிர்த்தாற்போல் எதிர்த் துப் போர் செய்தன. போர் செய்த இரு திறத்துச் சேனைகளின் எண்ணிக்கை இவ்வளவின தென்று வரை யறுத்துக் கூற இயலாதாயினும், இத்தகைய சந்தர்ப் பங்களில் பெரியோர் கூறியபடி இரண்டு கடலென்ன லாம். கடலும் சிறசில் விடங்களில் திடர்களைக் கொண்டு விளங்குவதால், சிறிதும் இடை வெளி யில்லாத இப் படைகளுக்கு அதனையும் உவமித்தல் பொருந்தாது. இங்ஙனம் அளவில்லாத சேனை வீரர்களடங்கிய இரு திறச் சேனைகளும் கடலும் கடலும் கலந்தாற் போலக் கலந்து, பல் வித்ப் படைக்கலங்களைக் கொண்டு நெடு நேரம் போர்செய்ய, மகா பலம்பொருந்திய தனிவீரர்கள் தாம் தாம் நின்ற விடங்களி லிருந்தே பகைவர்களைப் பலவாறாகத் தாக்கிக் கொன்று அவர்கள் உடல்களைக் குன்றுபோலக் குவித்துவந்தார்.

அப்பொழுது அச்சுவ கண்டனுடைய தோழ னாகிய அரி சேனன் என்பவன் இடக்கையிற் கேடகு

ழும் வலக்கையில் வாட்படையும் தாங்கி, 'உயிரிழக்க வேண்டியவர்கள் என்னை எதிர்த்து வாருங்கள்! உயிர் பிழைக்க வேண்டியவர்கள் ஓட வழி பாருங்கள்!' என்று உரத்துக் கூவி வந்தனன். அவன் முன் அருக்க கீர்த்தி வந்து வில்லை வளைத்து அம்புகளைத் தொடுக்க முயன்றனன். அவ்வமயம் அவன் சேனை வீரனாகிய வியாக்கிரதன் முன் வந்து, "அரச குமர, இவ்வரி சேனன் நினக்கு நிகராகுபவ னல்லன். நிகரில்லா ரோடு போரிடுதல் முறைமை யன்று. ஆதலின், யான் இவனை எதிர்க்கின்றேன்" என்று கூறி, அனுமதி பெற்று, அரிசேனனுக்கு முன் சென்று அவனைப் பார்த்து, "ஏடா, அரிசேன, என்னை நீ அறிவா யல்லவா? என்னோடு போர் செய்ய வாடா!" என்று அறை கூவி யழைத்தனன். அதற்கு மாறாக அரிசேனன், "வியாக்கிரதா, உன்னை நான் நன்றாக அறிவேன். நீ விஞ்சைய ருலகில் பிறந்த கன்னிகையை மனிதன் ஒருவனுக்குக் கலியாணஞ் செய்து கொடுத்து அக்கனி யாள் வீட்டில் அறுசுவை யன்னத்தைப் புசித்துண்டு வாழும் பெரிய வீரனென்பதை அறிந்தே யிருக்கின் றேன்" என்று ஏளனமான வார்த்தைகளைப் புகன்று நகைத்தனன். அதைக் கேட்டு வியாக்கிரதன், "ஏடா அறிவிலி, கன்னியர்களுடைய மணம் விதி வழி முடியு மென்பதையும் இது பெரியோர் ஒப்ப முடிந்ததென் பதையும் நீ அறியாயோ? அறியாததனால்தான் அறி வீனனாகிய அச்சுவ கண்டனோடு கூடிய போருக்கு வந்தனை. உன் மதி மிக அழகிது! இன்னும் நீ என்னை நன்று யறியாய். இனி வீண் பேச்சுப் பேசி யாவ தென்னை? காலந் தாழ்த்தாது என்னோடு போர் புரிய வருவாய்!" என்று கூறி அவனை நெருங்கினன். அவ்

கள் இருவரும் வாளையும் கேடகத்தையும் தாங்கி, நீச்
சுழிபோல் இடசாரி வலசாரியாகச் சுழன்று தாங்கள்
கற்ற வல்லமை யெல்லாங் காட்டினார்கள். வாள் வீச
சில் வல்லமை மிகுதியும் பெற்ற அரிசேனன் முன்னாக
வீசிய வாளை வியாக்கிரதன் சாமர்த்தியமாய்த் தடுத்
துச் சமயம் பார்த்துக் கைவாளை ஓச்சி அவனது மார்
பகம் இரண்டு துண்டாம்படி அவனை வெட்டி வீழ்த்தி
னான். இதைக் கண்டு விஜையர் சேனைகள் அஞ்சி
யோடின. திவிட்டன் சேனைகள் வெற்றியின் களிப்
பினால் முரசு மறைந்து கடல்போல் ஆர்த்தன. அப்
பொழுது அச்சுவ கண்டனுடைய சேனா வீரர்களில்
ஒருவனான குணசேனன் என்பவன் திவிட்டனுடைய
சேனைக்குட் புகுந்து, மிக்க வீராவேசத்துடன் வாளை
வீசி சேனைகளைச் சின்னபின்னப் படுத்தினான். அவனை
அருக்க கீர்த்தியின் சேனா வீரன் இந்திர காமன் என்
பவன் பலமா யெடுத்துக் கைவாளினால் வெட்டி வீழ்த்
தினான். அதனைக் கண்டு வர சேனன் என்பான் வலிய
வில்லொன்று தாங்கி, அதில் பல அம்புகளைப் பூட்டிச்
சேனைகளின் நடுவே அம்பு மாரியென விடுத்தனன்.
அதனால் திவிட்டனுடைய சேனைகள் நிலை குலைந்தன.
அவ்வமயம் அருக்க கீர்த்தியின் படைத் தலைவர்களில்
ஒருவனான காமுகன் என்பான் நெடுஞ்சிலை யொன்
றைக் கையிலேந்தி வந்து, வர சேனன் எய்த அம்பு
மாரியை விலக்கிக் கொடுங்கணைகளை யெய்து அவனைப்
பிளந்து கொன்றான். அவன் இறந்ததும், அச்சுவக்
கிரீவனைச் சார்ந்த அரி கேதனன் என்பவன் வீர
வார்த்தைகள் பல கூறிக் கையில் சூலப்படை யேந்தி,
ஆலகால விடத்தை யுண்டவனைப்போலச் சேனையிற்
புகுந்து பல்லோர் அப்படைக்கு இரை யாக்கினான்

அவனே வியாக்கிர ரதன் எதிர்த்தனன். இருவரும் மாறிமாறிப் பலவிதமான மாயப்போர்களைச் செய்தனர். முடிவில் அரிகேதனன் தன் முழுப் பலத்தையுங் கொண்டு வியாக்கிர ரதன் மார்பிலே ஒவ்வொரு குத்துக் குத்தினான். அது தன் மார்பிற் பாயு முன்னரே வியாக்கிர ரதன் அதை இருதுண்டமாகும்படி வெட்டியெறிந்து, அவன் சிரத்தையுங் கொய்தனன். அதைக் கண்டு விஞ்சையர் சேனைகள் அஞ்சிப் புறமிட்டோடின. அந்தச் சமயத்தில் மேக கூடாதிபதியான தூமகேது வென்பவன் இடையிற் கச்சையை வரிந்து கட்டி, அங்கத்தில் வைரக கவசம் பூண்டு, கையில் தண்டமேந்திக் கண்டோர் எவரும் கலங்க, மத யானை யொன்றின் மீது ஆரோகணித்தது,

"மலையெடுத் திடுகோ? மாநிலம் பிளக்கோ?
மறிகடல் அறவிறைத் திடுகோ?
உலமடுத் துலகம் பதலையா வூழித்
தீமடுத் துயிரனைத் துணகோ?
சிலையிடத் துடையார் கணைவலத் துடையார்
சிலரிங்கிருந் செயலறிய கெனஞே!
நிலையிடத் தவருள் நிகரெனக் குளரேல்
நேடுமின் சென்றென நின்றான்"

அங்ஙனம் வீர வார்த்தைகள் கூறிவந்த அவன் முன்னே அமராபுரத் தரசனும் சுவலனசடியின் தம்பியுமாகிய சுவலன ரதன் தோன்றி, அவன் கூறிய வீர மொழிகளைப் பரிகசித்தது,

"மலையெடுத் திடுவாய், மாநிலம் பிளப்பாய்,
மறிகடல் அறவிறைத் திடுவாய்,

உலைமடுத்த தலகம பதலையா ஊழித்
தீமடுத்த தயிர்கண்ட டுண்பாய்,
நிலையிடத் துளரோ நிகரெனக் கெண்பாய்,
நின்றனை நிகருனக் காகித்
தொலைவிடத் தல்லாற சொல்விவை துயக்கட
கொழியுமோ துமகே தவனே!"

எனக் கூறி எதிர்த்தனன் சக்காயுத பாணியாகிய அவ் விருவரும் நெருங்கிக் காலனும் கண்டு கலங்கும்படி கடுஞ்சமர் புரிந்தனர். கடைசியில் சுவலன் தன் தனது கைத்தண்டத்தால் தூம கேதுவை மோதி யறைந்து கொன்றனன். மலைபோல் இருந்த தூம கேது மண்ணிற் சாய்ந்து மாய்ந்ததும், விஜயைபருடைய சேனை வீரர்கள், "தூம கேதுவும் மண்ணில் விழுந்து படுவதோ!" எனக் கூறிக்கொண்டு, நெஞ்சில் ஈரமில்லா ராய் அஞ்சி யோடுவா ராயினர்.

அது பொழுது அங்கு மாபுர மன்னனுகிய அங்கார வேகன் அஞ்சியோடும் விஜயையர் சேனை வீரர்களைக் கை காட்டி யழைத்து, அவர்களை ஒருங்கு திரட்டி, அவர்களுக்கு வீர மொழிகள் பல புகன்று தைரிய மூட்டி, மீளவும் உடன் கொண்டு வந்து திவிட்ட னுடைய சேனைகளை எதிர்த்தான். அவனைத் திவிட்ட குமாரனுடைய சேனை வீரனான தேவசேனன் எதிர்த் தான். அவ்விருவரும் வேலினாலும் வாளினாலும் மாறி மாறித் தோள் வீசி வீரவாதம் பேசி நெடுநேரம் கடும் போர் செய்தனர். அப்போர் எவரும் கண்டு அஞ்சத் தக்கதா யிருந்தது. அவர்கள் இவ்வாறு போர் புரிந்து

பினனா, அஙகார வேகன, "இவனோடு இததனை கோம போா புரிவதா! இபபொழுதே இவவேலால இவனைக கொல்லுகினறேன!" எனறு இடிபோல முழஙகிக கூறித தோலாத வடிவேலைத திரிததுக தேவ சேனனமீது எறிநதான தேவ சேனன அதைத தனது வெறறி வாளால தகாததது இரு துணட மாககிப போடடான எயத வேல இரு துணட மாதலும அங கார வேகன அடஙகாக கோபங கொணடு, சிஙகம போலக காசசிதது, வேறொரு வேலெடுதது மேல வரவும், தேவசேனன அவன வடி வேல் பிடிதத தோளை வெடடி வீழததினை அஙகார வேகன அறறுபபுணடது போக எஞசிய ஒரு கையிலே வாளேநதிப போாககளை முழுவதும ஒரு கைச சூரனெனறு புகழுமபடி மாறற வரைக கணட துணட மாககி மாயததது முடிவில தேவ சேனனைப பலமா யெதிாததான, தேவ சேனன வலககை யிழநது இடககை யொனறிறைலேயே அரிய யுததம செயயும அஙகார வேகனது ஆணமையை வியநது மன மிரஙகி அவனை நோககி, "அஙகார வேக, உனது வலலமையை மிக மெசசினேன இனி நீ போா புரிய வேணடா உனனிடம செலக" எனலும, அவன அதனைச சிறிதும கேளாது, அடஙகா வீரததுடன அவனை மீணடும எதிாததுப போா புரியவே, தேவ சேனன தன கை வாளினால அவனது சிரததைக கொயது அவனுயிா கவாநதனன, சுதத வீரனை அஙகார வேகன சடியாசன மைததுனனுன தேவ சேனனால அஙஙன மாயினமை கணடு விஞசையா சேனை வெருணடு பினனிடடது அபபொழுது கருடத துவசன எனபவன அசசுவக கிரீவன பக்கம

'மைதோய் மலையு மண்ணகமு
சமதாச் செய்வேன், செய்யேனேல்
செய்தார் அமரர் உலகாள்வன,
இரண்டில் ஒன்று திண்ணமிதே"

என்று கூறிக்கொண்டு திவிட்டன் சென்று சமுத்திரத்திற் புகுந்து கலக்கினன். அதனைக் கண்டு திவிட்டன் மாமனாகிய சுவலனசடி பட்டத்து யானை ஒன்றின்மீது அமர்ந்து போர்க்களம் புகுந்து, வில்லை நாணேற்றிட்டு, விசேஷமான கொடுங்கணைகளைக் கருடத் துவசன்மீது பிரயோகித்து அவனை எதிர்த்தனன். கருடத் துவசன் தன்னை எதிர்க்கும் சடி யரசனை நோக்கி, "பெரியீர், நீர் எனக்கு வயதினால் முதிர்ந்து குரவராய் விளங்குதலின் என்னோடு போர் புரிதலைத் தவிர்ப்பீர். முதியோரை இளையோர் வாட்டுதல் முறையன்று அன்றியும், அஃது அறத்திற்கு அழகு அன்று. மேலும், எம்மோடு போர் செய்தல் உமக்கு இயலாத காரியம். நீர் சென்று தம் பக்கலுள்ள வலியாரை அனுப்புக" என்றனன். அதற்குச் சடி யரசன், "குரவரெனினும் உபசாரம் அவ்வளவிலே நிறுத்துக. போரில் இந்நியாயம் பொருந்தாது. எதிர்த்தவர் எவரேயாயினும் அவரோடு போர் புரிதலே முறைமை. நம்மிருவருள்ளும் வலியார், வலியிலாதார் என்னும் பகுப்பை நீ போரின் முடிவில் காணுகுவை" என்று கூறிச் சில்லை வளைத்துக் கருடத்துவசன்மீது கணை மாரி பொழிந்தனன். அதன் பின் இருவருக்கும் பலமாய் விற்போர் நிகழ்ந்தது. அப்போரில் சடியரசன் பகைவன் வில்லையும் சாதத்தையும் இறுத்து அவன் இயற்றிய மாயத்தையும் குலைத்தனன். கருடத் துவசன் அதற்குமேல் விட்டேறு, சக்கரம் முதலிய ஆயு

தங்களைக் கொண்டு கடும்போர் செய்ய, அவ்விருவர் வேழங்களும் ஒன்றோடொன்று விரோதித்து மருப்பால் குத்தியும் துதிக்கையால் எற்றியும் மதருக்கத்தால் தாக்கியும் போரிட்டன.

சிறிது நேரத்திற்குப்பின் அவற்றில் கருடத்துவசனது கரி பின்னிட்டது. கயம் பின்னிடவே, கருடத்துவசன் அதன் மத்தகத்தினின்றும் குதித்து, வாளும் கேடகமும் ஏந்திக் கால் நடையாகச் சென்று, சுவலனசடியின்மீது பாய்ந்தனன். சுவலனசடி வில்லில் பல சரங்களைத் தொடுத்துச் சுடச்சுட விடுத்து அவனது கரத்தையும் சிரத்தையும் போக்கினன். கருடத்துவசன் ஆவி சென்றதும், அமாத்தியர்களதவி இருந்த அசுவக்கிரீவன் சேனைகள் அங்கு நிற்பதற்கு அஞ்சித் தத்தமக்குப் புகலிடந் தேடி ஓடின.

இங்ஙனம் சேனைகள் அஞ்சி ஓடுவதையும் மாற்றார் வெற்றி முரசறைந்து எக்களிப்பதையும் கண்ட ஸ்ரீசேனன், "என்னே! என்னே!!" எனக் கூறிச் சிரித்து, புறமிட்டோடும் விஞ்சையர் படை வீரர்களை நோக்கி, "வீரர்களே, நீங்கள் இப்பொழுது பகைவர் நகைக்கத் தோற்றோடினால் நாளை உங்கள் பத்தினியர் முகத்தில் வெட்கமில்லாமல் எப்படி விழிப்பீர்கள்? இவ்வுடலம் அழியும் இயல்புடையது. இதனைக்கொண்டு தேடும் கீர்த்தியோ என்றும் அழியா இயல்புடையது. இதை விட்டு இவ்வுடலை ஏன் சுமந்து ஓடுகின்றீர்கள்? தன் மயிர் ஒன்றிழப்பினும் உயிர் தரியாத கவரிமானினைக் கண்டாவது உங்கள் மானத்தைக் காப்பாற்றுங்கள்" என்று கூறி வீர மூட்டினன். வித்தியாதர சேனை புதிய

வீரம் பெற்று அவனுடன் மீண்டது அவன் அச் சேனையுடன் போர்க்களம் சென்று தனது ஆண்மைச் சுடர் எங்கும் பிரகாசிக்கும்படி யுத்தம் செய்தனன். அப்பொழுது இரு திறத்துச் சேனைகளுக்கும் கடுமையாகப் போர் நடந்தது. இரண்டு பக்கத்துப் படைவீரர்களிலும் பலர் கண்ட துண்ட மாயினர். எங்கும் செந்நீர் பெருக்கெடுத்தோடியது. தங்கும் தோகளெல்லாம் தகர்ந்து முறிந்தன. ஸ்ரீ சேனன் ஒரு குதிரை மீதேறி மாயப் போர்க் கியற்றி,

"மண்ணின் மேல்வரு வாரொடு
மண்ணின் மேல்செரு வல்லனே!
விண்ணின் மேல்வரு வாரொடு
விண்ணின் மேல்செரு வல்லனே!"

என்று கூறி, "வல்லமை யுள்ளவர்கள் யாவரே யாயினும் என்னுடன் போர் புரிய வாருங்கள்" என்று அறை கூவி யழைத்தான். அப்பொழுது கிவிட்டனுடைய சேனா வீரர்களுள் ஒருவனான ஸ்ரீபாலன் என்பான் நல் விலக்கணம் வாய்ந்த புரவி யொன்றின் மீது இவர்ந்து வந்து ஸ்ரீ சேனனை எதிர்த்துப் போராடினன். இருவரும் வில்லினாலும் வேலினாலும் நெடுநேரம் பல பல யுத்தங்கள் செய்தபின் முடிவில் விண்ணில் எழும்பிக் கடுஞ் சமர் செய்தனர். கடைசியில் ஸ்ரீ பாலன் தன் முழு வல்லமையும் கொண்டு தாக்கி, அவனது சிரத்தை அறுத்து மண்ணில் வீழ்த்தினன். நிருநிலய நகர்க்கு அதிபனான ஸ்ரீ சேனனது சிரம் அறுபட்டு மண்ணில் விழுந்து புரளுவதைக் கண்ட வெள்ளிமலை வீரர்கள் வீரம் ஒழிந்து முதுகு காட்டி யோடினார்கள்.

அப்பொழுது அச்சுவ கண்டன் மகன் கனக சித்திரன் ஸ்ரீ சேனன் கூறியதுபோலப் போர்க்கு உடைந்து ஓடும் வீரர்களைப் பார்த்து வசை மொழிகள் பல கூறி, "நம்மை எதிர்த்தவர் வானவருமல்லர், தானவருமல்லர், மண்ணில் வாழும் எளிய மானிடரே. இவர்க்கா விளசையா அஞ்சுவது? இது விந்தையிலும் விந்தை! வெகு வேடிக்கை!" என்று கோப நகை செய்து பேசி, வீர வாளுருவி, மாற்றலர் சேனையுட் புகுந்து, அண்டினர் எவரையுங் கண்ட துண்டமாக்கி மாய்த்துவந்தான். அவன் நின்றவிடத்தில் நில்லாமல் கால் சக்கரம்போலப் பாத சாரியாகவே சுழன்று போர் செய்ததால், போர்க் களத்தில் எங்குப் பார்த்தாலும் அவனுருவமே காணப்பட்டது. அவன் செய்த கடும் போரினால் யானைகளும் குதிரைகளும் வெட்டுண்டு மாண்டன, தேர்கள் பொடிப் பொடியாய்ச் சிதறுண்டன, அரசர்களின் சிரங்கள் பனங்காய்களைப் போல உருண்டன, கால் கை யறுப்புண்டவர்கள் இரத்த வெள்ளத்தில் ஆழ்ந்து தத்தளித்தார்கள். இதைக் கண்டு திவிட்டனுடைய சேனைகள், "இனி இவனோடு போர் புரிதல் இயலாத காரியம்" எனக் கூறிக்கொண்டு வெருண்டு ஓடின.

அச்சமயத்தில் அச்சுவ கண்டனுடைய தம்பியர் நால்வரும் தம் குமாரன் கனக சித்திரன் ஒன்றியாய்ச் சென்று வாட்போர் செய்கின்றான் என்பதைக் கேள்வியுற்றுத் தாமும் அவனுக்கு உபபலமாக இருந்து உதவி செய்ய யானைகளின்மீது இவர்ந்து அவனோடு சேர்ந்து அருஞ்சமர் செய்தனர். அவ்வமயத்தில் முன்னாய போர்க்கு ஆற்றாது தோற்றோடிய வித்தியாதரர் சேனை

கள் எல்லாம் திரும்பி வந்து அவர்கள் பக்கல் சேர்ந்து
கொண்டன. அதனால் திவிட்ட குமாரனுடைய சேனை
களிற் சோர்ந்த பல வீரர் கர மறுப்புண்டும் சிர மறுப்
புண்டும் வீழ்கின்றனர். அவர்களையெல்லாம் அவ்வமரக்
களத்தி லுண்டாகிய இரத்த வெள்ளம் வாரிக்கொண்டு
சென்றது. திவிட்டனுடைய சேனைகள் அவர்களோடு
போர் செய்வதற்கு முடியாமல் சித்திரப் பதுமைகள்
போலத் திகைப்புண்டு நின்றன. அந்தச் சமயத்தில்
திவிட்டன் தமையனான விசய குமாரன் திடுமெனத்
தோன்றிக் கையிற் கலப்பை ஆயுதத்தைத் தாங்கி,
அமர்க்களம் புகுந்து, ஏந்திய அக்கொடும்படையால்
பகைவர் உடல்களை உழுது, புகழாகிய வித்து விதைப்ப
பயிர் விளைப்பா ரானான். அங்ஙனம் அவன் அமர்
செய்கின்றமையைக் கண்ட அச்சுவ கண்டனுடைய
தம்பியரும் தமயரும், "நம்மை ஒரு பொருட் படுத்தாது
மிக்க வீரத்துடன் இவ்வமர்க்களத்தே புகுந்து துள்ளிப்
போர் புரியும் இவ்வெள்ளையன் யாவன்?" என்று வின
வினார். ஆண்டு நின்றோர், "இவன்தான் பயாபதி பயந்த
புதல்வருள் மூத்தவனான விசய னென்போன்" என்ற
னர். அதைக் கேட்டதும் அவர்களுக்குக் கோபம்
அதிகரித்தது. உடனே அவர்கள் யாவரும் ஒருங்கு
கூடி விசயனை வளைத்துக்கொண்டு, தாம் தாம் ஏந்திய
படைகளினால் உக்கிரமான போர் செய்ய லானார்கள்.
அப்பொழுது எக்காரணத்தினாலோ, 'விசயன் விஞ்சைய
ருக்குத் தோற்றழிந்தான்' என்ப போர்க்கள முழு
வதும் ஒரு பொய் வதந்தி உலாவியது. அதைக் கேட்
டுத் திவிட்டனுடைய சேனைகள் எல்லாம் கடல் அலை
யடங்கின்றபோலத் தோற்றுப் பின்னிட்டோடின. அந்
தச் சமயத்தில் விசய குமாரனுக்குத் தெய்வ சகாயத்

கால் ஆன் சிங்கம் ஒன்று வாகனமாகவும், புதிய கலப்பைப் படை ஆயுதமாகவும் வந்து பொருந்தின. அவன் தெய்வானுகூலத்தால் கிடைத்த அந்தச் சிங்கத்தின்மீது கனருக ஆரோகணித்துக் கலப்பைப் படையைக் கையிற் றுங்கி ஒருவனாகவே நின்று மாற்றலரை எதிர்த்தனன். அவ்வமயம் அவனுக்கு ஊர்தியாயமைந்திருந்த அரசசியம் அகண்ட கடாகம் நடுங்கும்படி ஒரு தரம் கர்ச்சித்தது. அக்கர்ச்சனையால் அசுவ கண்டனுடைய சேனைகள் உள்ளம் நடுங்கி உணர்வற்றவை போலச் சோர்ந்து கீழே விழுந்தன. பகைவர்கள் அங்ஙனம் வந்த விசயன்மீது பற்பல விதமான படைக்கலங்களை ஏவிப் போர் செய்தார்கள். விசய குமாரன் தனது நாஞ்சிற் படையால் அப்படைகளை விலக்கிப் பகைவர்களது மார்பகங்களையும் அவர்கள் ஏறிய அசுவங்களையும் உழுது கொன்று ஒழித்தான். அவன் ஒருவனாகவே நின்று விஞ்சையர் வீரரில் பலரையும் கொன்று, மிக்க பராக்கிரம சாலிகளான வச்சிர கண்டன், நீல கண்டன், சுகண்டன் என்னும் மூன்று வீரர்களது ஆவியையும் முடிவடையச் செய்ததனைக் கண்ட கனக சித்திரன் கடுங் கோபங் கொண்டு தன் வாளை யுருவி மிக்க பலத்துடன் போர் செய்யலானான். அவன் தோளினும் அக்கலப்பைப்படை அழுந்தியது. அவனுடைய ஆவியும் அவன் உடலை விட்டுப் பிரிந்தோடியது. இதனைக் கண்ட இரத்தின கண்டன் மிக்க கோபாவேசத்தனாய், 'இச் சிலத்தவர் செய்யும் போரையும் ஆண்மையையும் இப்பொழுதே முடித்திடுகின்றேன்!' என்று தீர்மானித்து, ஆகாய மளாவிய ஒரு பெருமலையினைத் தன்னிரு கைகளாலும் பிடுங்கிக்கொண்டு, கண்டோர் எவரும் நடுங்க, வரிந்த கச்சையும் முரிந்த புருவமும் விரிந்த தாடி

யும் உடையனாய்ப் பெரிய வடிவத்தோடு நிவிட்டன் சேனையை எதிர்க்க விரைந்து நெருங்கினன் அவனைக் கண்டு அச்சேனை அஞ்சிப் புறமிட்டோடியது அப்பொழுது அருக்க கீர்த்தி நன்று தூணீரத்திலிருந்த அரிய வைர வாளி யொன்றினை எடுத்துச் சிலையில் தொடுத்து மந்திரித்து, அவன்மேல் இலக்கு வைத்து ஏவினன் அக்கொற்ற வாளி அவன் ஏந்திய பெருவளையையும் அவனையும் பிளந்து கீழே வீழ்த்தியது எடுத்த பெருமலையோடு அடுத்து மற்றொரு கருவரையும் கீழ் விழுந்து புரண்டதுபோல், இரத்தின கண்டன் போர்க் களத்தில் விழுந்து மாண்டதைக் கண்ட அச்சுவ கண்டனுடைய ஒற்றர்கள் ஓடோடியும் சென்று தங்கள் மன்னனைக் கண்டு வணங்கித் தம்பியரும் தநயனும் மற்றும் தானையிலுள்ள சேனாவீரரும் விசய குமாரன் நாஞ்சிற படையாலும் வித்தியாதர குமாரனை அருக்க கீர்த்தியின் கைக்கணையாலும் இறந்தொழிந்த வரலாற்றை எடுத்துக் கூறினார்கள் அவன் அம்மொழிகளைக் கேட்டு, இடியேறுண்ட அரவம்போல் வருந்தி, 'இனிச் சும்மா விருப்பதிற் பிரயோசனமில்லை இவ்வுலகில் வாழும் எல்லா உயிர்களையும் ஒரே காலத்தில் வாரிக் கட்டுள்ள தன்னும் ஆற்றலுள்ள மாயா தேவியினைத் தியானித்தலே தகுதியாகும்' எனக் கொண்டு அத்தேவியைச் சிந்தை செய்தான்

சண்ட வேகை யென்னும் பெரிய மாயா தேவதை அவன்முன் தோன்றி, "என்னை யாது காரணமாகச் சிந்தித்தனை? யான் செய்யும் பணி யாது?" என்று வினவிற்று. அச்சுவ கண்டன் அத்தேவதையை நோக்கி, "தெய்வமே, இப்பூமியில் என்னை எதிர்த்த

பகைவர் எவருமே இல்லா வண்ணம் அவர்களை யெல்லாம் கொன்றொழித்து எனக்கு உதவி புரிந்திடுக" என வேண்டினேன். அத்தேவதை, "அங்ஙனமே செய்வேன்" எனக்கூறிக் காவலினை யழைத்து, 'சங்கிரேசுவரன் ஆஞ்ஞையால் இன்று பகலவன் அந்த மலையை அணுகுமுன் இப்பூமியிலுள்ள எல்லா வுயிர்களையும் உன் வாய் மடுக்க யான் கருதிச் செல்கின்றேன், சகல உயிர்களும் இன்று உன்னால் முடிவடையும், ஆதலின், நீயும் உன் முறைத்தொழிலின் முறைப்படி நடத்துக" என அறிவித்தது. அதனை விரும்பிய அநேக பிசாசங்களும்,'இப்பொழுதே எம் வயிறு நிறையப்போகின்றது' என்று களித்துத் துணங்கைக் கூத்தாடிக் கைகளிற் சூலப்படை யேந்தித் தன்னைச் சூழ்ந்து வரப் பயாபதி மன்னன் படையை நோக்கிச் சென்றது. அதைச் சூழ்ந்து தெற்றி நடக்கும் பாதமும், உயர்ந்தெழுந்த கண்களாலும், முட்டியிழிகளும் முழங்காலும், ஒட்டியொடுங்கிய நெடுவயிறும், குகையைப் போன்ற பெருவாயும், மயிர்கள் முளைத்த நீண்ட நகமும், எலும்பு மாலையை யணிந்த தலையும், கழற்காய் போலச் சுழலும் வட்டக் கண்ணும் உடையனவான கூளிப் படைகள் போராரவாரம் செய்தன. அவைகள் நடந்த வேகத்தினாலும் மாயா தேவதை செய்த மாயத்தினாலும் மலைகளெல்லாம் நிலைபெயர்ந் துருளும்படி பிரசண்டமாருதம் வீசி எழுந்தது. எவ்விடத்திலும் ஊழித் தீப்பற்றி எரிந்தது. முந்நீர்க்கடல் பூமி யதிரும்படி அலைகளை வீசியது. இங்ஙனம் எழுந்த பிரசண்ட வாயு மலைகளையும் மரங்களையும் களைந்தெறிய, அவைகளை ஊழித் தீயானது தன் வாய் மடுப்ப, எல்லாப் பொருள்களையும் கடல் தன்னிடம் கொள்ள மாயங்க ளியற்றிச் சண்ட

வேகை அண்டமுகட்டுற வளர்ந்த ஒரு பெருவாயினைத்
தெரிந்தெடுத்து, உலக முழுதும் இருள்பரவக் கவிழ்த்து
மூடியது. அதனால், உலக மெங்கணும் நெருங்கிய
இருள் பரவியதால், பயாபதி மன்னன் சேனை வீரர்கள்
கண்ணொளி யிழந்து, ஒருவரோ டொருவர் முட்
டிக்கொண்டும், தாளொடு தாள்கள் தெற்றுண்டும்,
தோளொடு தோள்கள் இடிபட்டும், அலமந்து சிதறி
னார்கள். இங்ஙனம் நிகழ்ந்த அலங்கோலத்தைக் கண்டு
திகைத்திட்ட குமாரன் அருக்க கீர்த்தியை நோக்கி, "மைத்
துனா, இங்ஙனம் பயங்கரமாகப் பேராவாரஞ் செய்து
வருவது யாது?" என வினவினான். அதற்கு அவன்,
"அசுவ கண்டன் ஏவலை மேற்கொண்டு பகைவரெல்
லோரையும் ஒருங்குண்ணும் ஆற்றல் படைத்த சண்ட
வேகை யென்னும் மாயா தேவதை வருவது போலும்!
அவனால் அஃது ஏவப்பட்டதாயின், நம்மெல்லோரையும்
உண்ணின் அன்றிப் பிறிதோரிடம் வழியே செல்லாது.
அதனைத் தடுக்க வல்லவரும் இலர்" என்றான். அவன்
அங்ஙனம் சொல்லவே, இளைய நம்பி அருக்க கீர்த்தியை
நோக்கி நகை செய்து, "நன்று சொன்னாய் மைத்துனா!
ஒரு பேய் எரியுமிழ்ந்து நம்மேல் வருமாம்! அது நம்
மெல்லோரையுங் கொல்லுமாம்! நீயும் அதற்கு மிக
வும் அஞ்சிவிட்டாய்!" என்று கூறி, அகத்தில் சினம்
மிகக் கொண்டு, கண்டோரஞ்ச, நெடுமாலே போல
மண்ணும் விண்ணும் முட்ட விசுவரூப மெடுத்தனன்.
அப்பொழுது உற்றவிடத்துதவும் நற்றோழனே போல
அவன் வலக்கரத்தில் பாஞ்ச சன்னியம் என்னும் சங்க
மும், இடக்கரத்தில் சாரங்கம் என்னும் வில்லும் வந்து
தோன்றின. அவற்றைப் பெற்றதும் அவன் வலம்
புரியை வாயில் வைத்து அட்ட திக்கும் செவிடுபடும்படி

ஊதிப் பெருந்தொனி எழுப்பி, நெடுஞ்சிலையை வளைத்து நாண் பூட்டிக் குணத்தொனி உண்டாக்கி, ஒரு தரம் வாயினால் ஆங்காரத்துடன் ஹுங்காரம் செய்தனன். கண்டோர் வெருளும்படி பேருரு வெடுத்த சண்டவேகை என்னும் மாயா தேவதை திவிட்டனது விசுவ ரூபத்தினையும், அவன் எழுப்பிய சங்கத்தொனி, குணத்தொனி, ஹுங்காரத் தொனி முதலியவற்றையும் கண்டும் கேட்டும் உளம் நடுங்கி, 'இவனிடத்தில் நமது பூச்சாண்டி வேடம் பலிக்காது' எனக் கொண்டு, பேருருக் கரந்து, பண்டை யுருவோடு நின்று, கூரிய படையுடன் காற்றுயப் பறந்தோடியது.

அம்மாயா தேவதை அங்ஙனம் ஓடியதைக் கண்ட அச்சுவ கண்டன் கையோடு கை புடைத்து, 'இப் பேயின் ஆற்றல் இவ்வளவுதானோ!' என நகைத்துக் கண் களிற் கோபக்கனல் சிதற, இதழ் மடித்துப் பற்கவ்வி, அருகிருந்தோரை உற்று நோக்கி, "அரசுவாவினைப் பண்ணுறுத்திக் கொணர்க" என்றான். அக்கணமே அவர்கள் அரசு வேழத்தினைக் கொண்டுவந்து நிறுத்த, அவன் அதன்மேல் ஆரோகணித்து யுத்த சன்னத்தனாய்த் திவிட்டனது சேனையை நோக்கிச் சென்றான். அவன் வருதலைக் கண்டு அச்சேனைகள் அஞ்சியோடின. அப்பொழுது திவிட்ட குமாரன் சாரங்க மென்னும் வில்லை யெடுத்து நாணினைப் பூட்டினன். அச்சமயத்தில் வளைந்த மூக்கும் கிளர்ந்தொளிரும் சிறு கண்ணும் செந்நிறச் சிறகுகளுமுடைய கருடப் புள் ஆகாயப் பரப்பினைச் சிறகுகளாலேயே கூரைவேய்ந்த தெனும்படி நீண்ட சிறகுகளை விரித்துக்கொண்டு விண்ணூடாக வந்து, நீல மணி வண்ணனாகிய திவிட்ட குமாரன்

முன்னே நின்றது அவன் அப்புள்ளரசை வல்ல கொண்டு அதன் மீதேறி, தன்னை நோக்கி வரும் அச்சுவ கண்டன் முன்னே சென்றனன். அச்சுவ கண்டன் அவனை நோக்கி, "ஏ வீரனே, உன்னைப் போல அறிவில்லாத அசுர மக்களிற் சிலர் என்னை யெதிர்த்துப் பின்பு என்றிறல் அறிந்து எனது அடியில் வீழ்ந்து, உயிர்ப் பிச்சை தந்தருள்க!' என இரந்து பெற்று வாழ்ந்தனர் அவர்களில் ஏனையவர் என்னடி தொழுது வாழ்வு பெற்றிருந்தார் அமரரோ என்னைக் கண்ணுறும் அஞ்சி ஆகாயத்திலே மறைந்து வாழ்கின்றனர். அவர்கள் வெல்லாம் அங்ஙனம் அஞ்சி உயிர் வாழ, அற்ப மானுடனாகிய நீ ஏன் என் கைக்கு இரையாகின்றாய்? அன்றியும், அச்சுவ கண்டன் எளிய மானுடனோடு போருக்குப் போயினனென்று எவரும் என்னை இகழ்வர் நீ சொல்லியனுப்பிய செவி சுடும் சொற்களைக் கேட்டும் நான் இதுகாறும் பொறுமை கொண்டிருந்தேன் என்பதை யுணராது, நீ உன்னுயிர்மேல் ஆசையின்றி என்னை அலைக்கின்றாய்" என்றனன். கிளிட்ட நம்பி அவனைப் பார்த்து, "நன்று! நன்று! மீண்டும் என்ன சொன்னாய்?" என்று கூறி குறுநகை செய்து, "ஏடா, அச்சுவ கண்டா, இவ்வுரைகளை நீ உனது வெளி வாயினின்று கரைவதன்றி, என் முன்னிலையிலுமா மொழிய முன்வந்தாய்? இனி உன் மொழிகளைக் கேட்டு நான் பொறுமையோடிரேன். இப்பொழுதே நீ வீண் வார்த்தைகளைக் கூறுவதை விட்டு வில்லில் நாண் பூட்டி என்னோடு போர் செய்வாய் வல்லையாயின் வில்லெடு" என்றனன்

அம்மாற்றம் கேட்டு அச்சுவ கண்டன், 'இச்சிறுவன் சொற்கள் என் செவியைச் சுடுகின்றன. இனிப் பொறுமை கொள்ளேன். கடல் சூழ்ந்த இந்நில வுலகத்தில் இவனது பெயர் இரா வண்ணம் கடுக அழித்து விடுகின்றேன்!' என்று மனத்துட் கொண்டு, வில்லைக் கோட்டிக் குணத்தொனி எழுப்பிக் கணை மாரி பொழிந்தனன்.

அவன் விடுத்த அம்புகளையெல்லாம் உவணராஜன் தன் சிறகால் உதறிவிட, அவைகள் யாவும் பக்கங்களிலே விழுந்து நெரிந்தன. அச்சுவ கண்டன் அதைக் கண்டு மனம் வெம்பி, இளைய நம்பியின்மீது தெய்வப் படைக்கலங்களைச் செலுத்தக் கருதி, முதலில் நாகாஸ்திரத்தைப் பிரயோகித்தனன். அவ்வஸ்திரம் ஆயிரம் பணாமுடிகளோடு கூடி ஆகாய மார்க்கத்தே கடு விஷத்தைக் கக்கிக்கொண்டு வருதலைக் கண்ட திவிட்ட குமாரன் அதற்கு மாற்றாகச் சிலையில் கருடாஸ்திரத்தைத் தொடுத்து விட்டனன். அது சென்று அவ்வுரகாஸ்திரத்தைத் தனது வளைந்த மூக்கால் இரு துண்டாகச் செய்தது. அதற்கு மேல் அச்சுவ கண்டன் ஊழித் தீயினும் கொடியதான அக்கினி அஸ்திரத்தை விடுத்தனன். அஃது எங்கும் அக்கினியைக் கக்கிக்கொண்டு ஆகாய வழியாக அதிவேகமாய்ச் சென்றது. அதைப் பழிக்கத் திவிட்ட நம்பி வருணாஸ்திரத்தினை ஏவினன். அது மண்ணும் விண்ணும் இருளச் செய்து, எங்கும் புயல் மூடிச் சோனை மழையெனச் சொரிந்து, அவ்வக்கினி அஸ்திரத்தை அவித்தது. மீளவும் அச்சுவ கண்டன் உலகமெல்லாம் துயில்விக்கும் மோகனாஸ்திரத்தை விடுத்தனன். அந்த அஸ்திர விசே

டத்தால் உலகத்திலுள்ள எல்லாப் பிராணிகளும் தம் மறிவு மறந்து மயங்கித் தூங்கினர். அதனை நீக்கத் திவிட்ட குமாரன் உடனே உணர்வுண்டாக்கும் மோகன விலக்கு அஸ்திரத்தை அபிமந்திரித்து விட்டனன். அதனால் மோகனப் படை அழிந்து உலகமெல்லாம் மயக்கத் துயிலினின்று மெழுந்தது.

அஸ்திரங்களெல்லாம் அங்ஙனமாகவே, அச்சுவ கண்டன் அகம் வெதும்பி, 'இனி இவ்வஸ்திரங்களைப் பிரயோகிப்பதில் பிரயோசனமில்லை, ஆஞ்ஞா சக்கரமொன்றினாலேயே இவனை அழித்தல் வேண்டும்' என்று தீர்மானித்துக்கொண்டு, கையில் வெய்ய ஆழியினை ஏந்தி, திவிட்ட குமாரனை நோக்கி, "வீரனே, இன்னும் என்னுடன் நீ போர் செய்ய வல்லையோ?" என்று கூறி நகைத்தான். அதற்குத் திவிட்ட குமாரன் அவனை நோக்கி, 'அச்சுவ கண்ட, நீ இதுகாறும் செய்த போரினை நான் அறியேனோ? அஸ்திரங்கள் தொடுத்து நீ மிக இளைத்தாய். அதனை வெளியிற் காட்டாது மிக்க ஆண்மையுள்ளவன்போலப் பாவனை காட்டி இங்ஙனம் சிரிக்கின்றனையோ? உனது ஆஞ்ஞா சக்கரத்துக்கும் வெருட்டலுக்கும் நான் சிறிதும் அச்சங் கொள்ளேன்' என்றான்.

அங்ஙனம் அவன் மொழியவே, அச்சுவ கண்டன் தனது ஆழியினைத் திரித்து அபிமந்திரித்துத் திவிட்டனை இலக்கு வைத்து எறிந்தனன். அச்சக்கரப் படை காலாக்கினிபோல எங்கும் அக்கினிச் சுவாலையை வீசிக் கொண்டு திவிட்டன்மேற் சென்றது. அதன் சுவாலையால் திவிட்ட குமாரன் மூடப்பட்டான். எவர் கண்ணினும் அவன் அகப்படவில்லை. அகப்படாமற் போகவே,

யாவரும், 'திவிட்டனுக்கு யாது விளையுமோ !' என்று அஞ்சினர். அந்தச் சமயத்தில் அந்த ஆழிப் படை நீல மணி மலையை வலம் வந்த பரி போலத் திவிட்ட நம்பியை வலம் வந்து வலப்பக்கத்திலே நின்றது. அவன் அதனைத் தொழுது வலக் கையான் வாங்கித் திரித்து, அச்சுவ கண்டன்மீது விட்டனன். அது அதி வேகமாகச் சென்று அச்சுவ கண்டனது மார்பைப் பிளந்து, மணி முடி தரித்த சிரத்தை யறுத்து, அவன் ஏறி வந்த பட்டத்து யானையையுங் கொன்று வீழ்த்தி யது. மலையினுச்சியிற் படிந்த மேகமானது அதனின் றும் புரண்டு வீழுமாறு போல அச்சுவகண்டன் அரசு வாவினின்றும் விழுந்து மண்ணிற் புரண்டனன். நன் னெறி பற்றி யொழுகும் நீதிமா னொருவனுக்குத் தீநெறி பற்றிய துஷ்ட னொருவன் செய்த தீமை அந்நீதிமானை அழிக்காது தீமை செய்தோனையே அழிக்குமாறு போல அச்சுவகண்டன் திரித்து விட்ட ஆழியே மீண் டும் வந்து அவனையே கொன்றது. இதனைக் கண்டோர் யவரும் அச்சுவகண்டனுடைய பெருமையும் அருமை யும் முன்னறிந்துள்ளா ராதலின், அவர்களெல்லோரும் யாக்கை நிலையாமை, செல்வ நிலையாமை, ஆற்றல் நிலை யாமை, வனப்பு நிலையாமை முதலிய நிலையாமையின் நிலைபெற்ற தன்மையைக் குறித்துப் பேசி இரங்கினர்.

அந்தச் சமயத்தில் அச்சுவகண்டனுடைய பட் டத்துத் தேவியான கனக சித்திரை யென்பவள் ஆண்டு வந்து, தன் கணவன் யுத்த களத்தில் மாண்டு வறுநிலத்தில் வீழ்ந்து கிடக்கும் கோலத்தினைக் கண்டு, கண்ணீரை ஆறுபோற் பெருக்கி அவன்மீது வீழ்ந்து புரண்டு ஆவியை நீத்தாள். அச்சுவகண்டன் சுற்றத்

தாராகிய வேற்று மகளிர் பல்லும் அச்சுவகண்டனது வெற்றுடலங்களைக் கண்டு, கூந்தல் அவிழ்ந்து சரிய, மணாளனின் மயில் சாயலதுபோல ஆவென அலறிக் கீழ் விழுந்து புரண்டு ஏங்கிப் பின்பு எழுந்து, யாவர் மனமும் கரைந் துருக,

"அரைசர் கோவே! அடலாழி
வல்லவ! ஆரக்கத் தோளாய்!
புரிசை நகரம் நூறெழுப(து)
உடையாய்! பூமி முழுதாண்டாய்!
உரைசெய் துலகம் பாராட்டும்
ஒளியாய்! ஓடை யானைமேல்
வரைசெய் தனைய திரடோளாய்!
மறிதல் பெரிதோ வயவேந்தே!

"பொன்னும்மணியும் உடன்கஞ்சும்
வரையாய்! மன்னர் மணிமுடிமேல்
தேனும் வண்டும் பலசென்று
கிளைக்கும் செம்பொற் செறிகழலாய்!
கான மணணி துகிலதேகி
காவி கமழும் எழிலாகம்
என் மணாளன் இவ்வாகாண
கிடத்தல் இனிதோ இயல்வேந்தே!

"குழவி ஞாயிற் றொழிலேய்க்கும்
குழம்பார் கோலக் குங்குமமே
மெழுகி மீதோர் மணியாரம்
வீசிக் கிடந்த விரையாகம்
ஒழுகு குருதிச் சேறாடி
ஓடை யானை நுதன்மீது
வழுவி வீழ்ந்த கைகாட்டின்
மாயம் போலும் மறவேந்தே!"

என்று அவன் பெருமையைப் பலவா றெடுத்துக் கூறிய புலமையினர், அப்பொழுது அந்தணர் அங்கு வந்து, அவர்களை யெல்லாம் விலகும்படி செய்து, அச்சுவத்தாமனைப் பஞ்சுத் துகிலும் பூம்பட்டுஞ் சேர்ந்த பாயலின் மேல் கிடத்திச் செந்தீ வாய்ப்பெய்து தகனம் செய்தனர். அதன் பின்னர், அமர்க்களத்தில் துஞ்சிய அச்சுவத்தாமனுடைய தம்பியரையும் அவன் மகன் கனகசித்திரனையும், மற்றும் சமராகிய மன்னரையும் எரிவாய்ப் பெய்து தீக்கடன் ஆற்றியதும், அரச பரிவார மகளிர் யாவரும் தம் கணவரை எண்ணித் தாம் அணிந்திருந்த பலவாகிய ஆபரணங்களைக் களைந்து, கைம்மை விரதத்தை மேற்பூண்டு, கடவுளை மனத்திருத்தி நோன்பியற்றுவா ராயினர்.

இஃதிங்ஙனமாக, அக்கினி மயமான பிரகாசத்தையுடைய ஆழியைப் பெற்ற கிரீட்ட குமாரன் வெற்றி யடைந்தமைக்காக அவன்மீது விண்ணவர்கள் மலர் மாரி பொழிந்து, 'பல்லாண்டு பல்லாண்டாக வாழ்க!' என வாழ்த்துக் கூறினர். விண்ணிலிருந்து தேவ துந்துபி தாமதாமென முழங்கின. அப்பொழுது, "கிரீட்ட குமாரன் அச்சுவத்தாமன் ஏவிய அஸ்திரங்க ளத்தனையும் அறுத்துத் தள்ளிச் சக்கராயுதத்தைக் கைக்கொண்டது அற்புதம்! அற்புதம்!" என்று ஆகாயத்தினின்றும் ஒரு வாக்கு எழுந்தது. போரில் இறவாத விஞ்சையர் கிரீட்ட குமாரன் அடியில் விழுந்து, "நாங்கள் பெரிதும் அஞ்சினோம் காத்தருள்க" என வேண்டினர். அவன், "நீங்கள் அஞ்சன்மின், நீவிரும் விஞ்சையருலகம் சென்று, அறநெறி நின்று ஆட்சி புரிமின்" என்று கூறி விடுத்தான். யாவரும் அகிய, "விஞ

சையர்கள் தங்கள் தங்கள் உலகு சேர்ந்து வாழ்வார்க ளாக" எனப் பறையும் சாற்றுவித்தனன். அவர்களெல்லாம் தங்கள் தங்கள் ஊரை யடைந்து, அவன் ஆணை வழி நின்று ஆட்சி புரிந்துவந்தார்கள்.

அதன்பின் திவிட்ட குமாரன் காமோதிய கருடனை விட்டிறங்கி அரசர்கள் பின் தொடர்ந்துவர அரசுவா ஒன்றின்மேல் ஆரோகணித்து, விசய குமாரன் தங்கியிருந்த பாசறைக்குச் சென்று, அவனையும் அழைத்துக்கொண்டு, பயாபதியி னிடத்திற்குப் போய், அவனுடைய பாதங்களைப் பணிந்து நின்றனன். பயாபதி மன்னன் அரச குமாரரோடு வணங்கிய அரசர்களை நோக்கி, "அரசர்காள், இவ்விரு புதல்வர்களையும் பெற்றதால் யான் எவரும் அடையாத பெரும்பேற்றினைப் பெற்றேன். இப்பெரும்பேறு யான் முன் செய்த தவப் பயனால் எனக்குக் கிடைத்ததாகும். இதனைப் பெற்ற யான் இவ்விரு புதல்வர்களின் அரச கோலத்தையும் உங்கள் முன்னிலையிற் காண அவாக் கொண்டுள்ளேனாதலால் நீங்கள் யாவரும் உடனிருந்து இவ்வைபவத்தினை நடத்தி வைக்கக் கோருகின்றேன்" என்று கூறினான். சடியரசன் முதலாயினோரும் மிக்க மகிழ்வுடன் அக்கிரியையிற் றலையிட்டு, ஊரெங்கும் அரச குமாரர்களுக்கு மகுடாபிஷேகமென முரசம் அறையச் செய்தனர்.

மகுடாபிஷேகத்திற்கென்று குறித்த நன் முகூர்த்தம் வந்ததும், பூமண்டலத்தரசர் யாவரும் கங்கை, சிந்து முதலிய புண்ணிய தீர்த்தங்களுக்குச் சென்று, நீரைப் பொற்குடங்களில் முகந்து வந்து, மங்கல வாத்

நியமங் கோவிதக, மறையவர் முனிவர் முதலிய பெரியோர்கள் ஆசி கூற, விசயதிவிட்டர்களைத் திருமஞ்சன நீராட்டுவித்தனர். அதன் பின் தேவர்கள் திருப்பாற் கடலினுள்ள பாலை அரதனங்களிழைத்த குடங்களிற் கொண்டு வந்து, அவ்விரு குமாரர்களின் சிரமேற் சொரிந்து சிறப்புச் செய்தார்கள். விஞ்சையர்கள் தங்கள் வெள்ளி மலையிலுள்ள புனிதமான அருவி நீரைக் கொணர்ந்து, அரச குமாரர்களின் மணி முடிமீது பொழிந்து அபிடேகம் செய்தார்கள். அதன் பின்னர் யாவரும் ஒருங்கு சேர்ந்து, திருமகள் சேர்தற்கேற்ற திருவுருவினாலும் அறிவினாலும் ஆண்மையினாலும் அழகினாலும் ஞானமரபினாலும் திவிட்ட குமாரனை உலகம் புரக்கும் சக்கரவர்த்தியாகத் தக்கவனெனத் தீர்மானித்து, ஒளி வீசும் மணி முடியை அவன் சிரத்திற் றரித்து, 'இவனே வசுதேவன் குமாரனாகிய வாசுதேவன் என்னும் கிருட்டிண மூர்த்தி' எனக் கொண்டாடினார்கள். பெரிய நம்பியாகிய விசய குமாரனை, 'உருவத்தாலும் படைக் கலத்தாலும் ஆண்மையாலும் இவனே பலராமன்' என்று கொண்டாடி, அவனுக்கு அரதனங்களிழைத்த மணி முடியைத் தலையிற் சூட்டி மகிழ்ந்தார்கள்

அந்தச் சமயத்தில் மங்கல தூரியம் எண்டிசையும் செவிடுபட முழங்கின. பெரியோர் பலர் ஆசி கூறினர். அரிவையர் பலர் ஆர்த்தி யெடுத்து மங்கல வாழ்த்துப் பாடினர், கசடறக் கற்ற புலவர்கள் துதி கவி பாடிப் போற்றினார்கள், அவனி காவலர் மணி முடி தாழ்த்தி வணக்கம் செய்தனர். இங்ஙனமாகிய வைபவத்துடன் திவிட்ட நம்பி மணிமுடி கவித்து ஏக சக்கராதிபதியாய்

அரியாசனத்தில் சிறக்க அமர்ந்திருக்கும்பொழுது முன்னே வந்த பொருந்திய சங்கு சக்கரம் தனுவோடு தண்டும் வாளும் வந்து சேர்ந்தன. அப்பொழுது திவிட்ட குமாரன் கந்த சங்கு சக்கரம் தண்டு வாளுடன், சுதரிசனம், கௌமோதகி, நாந்தகம், பாஞ்ச சன்னியம், சார்ங்கமென்னும் பஞ்சாயுதங்களையும் தாங்கிக் காக்கும் கடவுளின் அம்சமாகிய கமலக் கண்ணனே போல் விளங்கினான். அவனுக்கு இவையுமன்றிச் சங்க நிதி, பதுமநிதியாகிய நவநிதிகளும், சிந்தாமணி, சூளாமணி முதலிய தேவ மணிகளும் வந்து சேர்ந்தன. இங்ஙனம் அருங்கலங்கள் எல்லாம் ஒருங்கே அடையப் பெற்ற திவிட்ட குமாரனது பட்டாபிஷேக வைபவத்தினைப் பயாபதி கண்ணாரக் கண்டு களிபெருவகை கொண்டான். இவ்வைபவம் இனிது நிறைவேறியதும், சக்கரத் தெய்வம் அதற்கென அமைத்த கோயில் சென்று வைகியது. மற்றை ஆயுதத் தெய்வங்களும் தத்தமக்கென நிருமித்த மணிக் கோயில் சென்று அமர்ந்தன. புள்ளரசனாகிய கருடனும் கனகக்கொளச் சமைத்த அழகிய மாளிகையிற் புகுந்தனன்.

பின்பு, புராண சரிதங்களைப் பூரணமாகக் கற்றுணர்ந்த புலவர்கள் இளைய நம்பியை நோக்கி, "எங் கோவே, ஆதிநாள் தொட்டு இந்நாள்காறும் உலகாண்ட மன்னர் சரிதங்களைக் கூறும் புராண நூல்களில் தங்களது திவ்விய சரித்திரமும் கூறப்பட்டுள்ளது. பல தேவரோடு கூடித் தாங்கள் பகைவரை வென்று பஞ்சாயுதங்களையும், கருடனையும் சீதேவியாகிய எழுவகை அருங்கலங்களையும், சங்கநிதி பதுமநிதி யென்னும் இரு

பெருநிதிகளையும், பதினாறாயிரம் நகரங்களையும் நாடுகளை-யும், சிவந்தா கூட்டங்களையும் பெற்றபின் திவிட்ட குமாரன் கோடிக்குன்ற மொன்றினைப் பெயர்த்து எடுத்தவன் என்று முக்காலச் செய்தியையும் முறையறிந்துரைக்கும் முனிவர் பெருமான்கள் தாங்கள் இயற்றிய புராணங்களிற் கூறியிருக்கின்றார்கள். அவர்களுடைய வாக்குகள் என்றும் பொய்யாகா. புராண நூல்களுள் கூறிய சக்கரவர்த்திகளுள் தாங்களே புண்ணியரும் புலமை மிக்குடையரும் சிறந்தவருமாவீர்கள்" எனப் புகழ்ந்தார்கள்.

அங்ஙனம் அவர்கள் கூறியதைக் கேட்ட திவிட்ட குமாரன் அவர்களை நோக்கி, "புலவீர்காள், புராண நூல்கள் கூறும் சரிதங்கள் உண்மையே. இப்பூமியைப் புரந்த மன்னர் கடல் மணலினும் பலராவர். அவர்களுள் நானும் ஒருவனே. இன்னும் இவ்வையகம் எத்தனை வேந்தர்களைக் காண இருக்கின்றதோ!" என்று தனது செருக்கில்லாத அமைந்த வாழ்க்கையின் தன்மையை வெளிப்படக் கூறி, அரியாசனத்தினின்று இழிந்து, அரசரும் பிறரும் தன்னைச் சூழ்ந்து வரப் புராண நூலிற் கூறிய கோடிமாசிலை யென்னும் பெரிய பெருவரையினைக் குறுகி, கடகமணிந்த இரண்டு கையையும் நிலத்தின் ஊன்றிப் பிலமாகும்படி அழுத்தி, அம்மலையை அடியோடும் பெயர்த்துக் கையிலேந்திக் குடையெனப் பிடித்து நின்றனன். அதனைக் கண்ட அரசர்களும் பிறரும் "ஆச்சரியம்! ஆச்சரியம்!!" என்று கூறி மனத்தில் அச்சமுடையராய், "இவனே வாசுதேவன்! எல்லாம் வல்ல இறைவன்!" என்று புகழ்ந்து அவனை வணங்கினர். திவிட்ட குமாரன் சிறிது நேரம் கோடிக்

குன்றத்தை எவரும் காண ஏந்தி நின்று, பின்பு பண்டு போல அதனை அவ்விடத்திலிருந்தே வைத்துவிட்டுத் தன் பரிவார சனங்கள் கொண்டாந்த ஆராவாரவின்மீது ஆரோகணித்து, அரசர்கள் போற்றி செய்ய, மங்கல வாத்தியம் முழங்க, வெண்சாமரை அருகிரட்ட, முத்துக் குடை மேல் நிழற்ற, கிளிமொழி மாதர் மங்கல வாழ்த்துக் கூறி ஆரத்தியெடுக்கத் திருமகளின் அம்சமாகிய சுயம்பிரபை யென்னும் பட்டத்துத் தேவியோடு போதனமா நகரம் புகுந்தான்.

அங்கு மாந்தர்கள் மாளிகையின் வாயில்தோறும் வெண் முத்து மாலையை நாற்றி, வெண் முளைப் பாலிகைகள் வைத்து, பூரண கும்பங்கள் அமைத்து, வாழை, கமுகு முதலியவைகளை நிறுத்தி, மகர தோரணம் கட்டி, மணம் வீசும் மலர்களை எங்கும் பரப்பி, வாசனை வீசும் பனிநீர் தெளித்து, சகல பூஷண அலங்கிருதர்களாய்ப் பொற்றட்டில் வாசனைப் பூமாலையும் சந்தனக் குழம்பும் மற்றும் வாசனைத் திரவியங்களும் வைத்து ஏந்தி, வழிவாய்ப் புகுந்த அரசர்க்கரசனான திவிட்ட குமாரனை எதிர்கொண் டழைத்தார்கள். அரசகுமாரன் அவைகளையெல்லாம் கண்டு அக மகிழ்ந்து கொண்டே அகத்துள் பிரவேசித்தனன். ஆங்கு வாழும் அரச மக்களும் மாதரும் திவிட்ட குமாரனது பவனியைக் காண உயர்ந்த மாளிகைகளிலேறிச் சாளரங்களின் வழியே தங்கள் தங்கள் தலையை நீட்டித் திருமாலும் திருமகளும் போன்ற திவிட்ட குமாரன், சுயம்பிரபை என்னும் இருவருடைய பேரழகையும் கண்டு ஆனந்த பரவசர்களாகி, அருகிருந்தோரை நோக்கி,

"சேந்தாம் மரைபுரையுஞ் செழுங்கண்ணும்
தடக்கையும் பவள வாயும்
அந்தாம் மரைநாறும் அடியிணையும்
அவையவையே காணமின்! காணமின்!
மந்தாம் மரைநாடன் கைகயிலங்கு
மணியாரம் கவின்ற மார்பம்
பைந்தாம் மரைமடந்தை பாராட்டப்
பொலிந்திலங்கும் படியுங் காணமின்!

"அருமணிசேர் விமானத்தின் ஆகாயப்
பளிங்கியன்ற வீதிமபி றுலும்
திருமணியின் ஒளிமேனி நிழலெறிப்பத்
திகழ்ந்திலங்குந் தெய்வப் பாவை
கருமணியின் கதிர்தழற்றிக் கடைக்கருட்டிக்
கைசெய்து வாரத்த போலும்
புரிமணிஞெண் நுழலிழைப் பொன்னணைமேல்
இனிதிருந்த பொலிவு காணமின!"

என்று அத்தம்பதிகளினது திருமேனியின் இலக்கணத்தைக் கூறி மகிழ்வாராயினர். இங்ஙனம் மகிழ் சிறந்த அவ்வீதியிலே மடமாதர் பலர் பாதங்களி லணிந்த சிலம்புகள் கலீர் கலீரென ஒலிக்க, அரச தம்பதிகளை எதிர்கொண்டு வணங்கிப் புகழ்ந்து போற்றினர் காளையராயினோர் வாச மலர்களையும் பொற்சுண்ணங்களையும் வாரி அவர்மீது வீசிக் களி சிறந்தனர். இத்தகைய சிறப்புக்களையெல்லாம் இவிட்ட குமாரன் கண்ணுறக் கண்டு களிகூர்ந்துகொண்டே தனது திருமாளிகையை அடைந்தனன். அன்றைய பொழுதெல்லாம் களிசிறந்த அரச குமாரனது திருக்கோலத்தினையே கண்டு திளைத்த கதிரவனும் அத்த கிரி யடைந்தான். விஞ்சைய வா

சரும் மாநில வாசரும பிறரும தததம இருக்கைககு ஏகினா.

அதன பின்னா, இளைய நமபி, "நாளையே சுயம பிரபைககுப பட்டததுத தேவியெனற நாமம சூட்டும நல மஙகலநாள்' என நகரஙகளுமம அறிய முரசறை யச் செயதனன சுயமபிரபையின தோழியா அவ ளுககு மஙகலக காபபணி அணிநதனா சூரியோதய மானதும, பலவகை இன்னிசை வாததியஙகள முழஙக, மஙகையா மஙகலவாழததுக கூறச சுயமபிரபை தேவிப பட்டம அடைநதனள

இமமஙகல விழா இனிது நிறைவேறியதும, திவிட்ட குமாரன தன மாமனாகிய சுவலனசடிககுப பலவாகிய சிறபபுகளைச செயது, "நீரே உததர தககிண சேடி முழுவதையும ஆளககடவீா" என்று சொலலிச செலவு கொடுததுப பினசென்று அனுபபிவிட்டு, மறற வாககும கூறுவன கூறி, அவரவா தேயம ஏக விடை கொடுததனன தேவாகள திசை முகங காபப, சஙக நிதி பதுமநிதி ஏவல செயய, அரசாகள போறறிசைப் பத திவிட்ட குமாரன அருகு பகவானை அகததிருததித திருமகளே போலவாளாகிய சுயமபிரபையோடு இனிது வாழநதிருநதனன.

## VIII

### சுயம்வரம்

இப்பால் திவிட்ட குமாரன் இருநிதிப் பெருக்கத்தாலும், தரும நெறி தவறாத தார் வேந்தர் பதினாறாயிரவ ரன்னடி வணங்கும் சிறப்பாலும், வித்தியாதர மன்னர்கள் தன்னாணைக்குள் அடங்கி அரசு புரியும் மாட்சியாலும், பதினாறாயிரம் தேவதைகள் பக்கத்திலிருந்து காவல் செய்யும் தன்மையாலும், உலகத்தைத் தன்னடிப்படுத்தி ஒரு குடைக்கீழ் ஏக சக்கராதிபதியாய் இறைமை செலுத்திவந்தான். இத்தகைய அரசச் சிங்கத்திற்குக் கனியினும் இனித்த தேன்மொழியும், கலைமகளினும் மிக்க பெருமதியும், கமலச் செல்வியினும் கட்டழகும் வாய்ந்த நங்கையர் திலகமாகிய சுயம்பிரபை உயிர்த் துணையாயிருந்தனள்.

இங்ஙனம் அரச தம்பதிகள் வாழ்நாட்களுள் ஒருநாள், சுயம்பிரபை தனது தந்தை உலகத்தினின்றும் கொணர்ந்த பாரிசாதம் அரும்புகளைக் கண்டு மகிழ்வெய்தி, அதற்குக் காம வல்லிக் கொடி யென்னும் கன்னியினைச் சேர்த்திக் கடிமணமியற்றி ஒரு திருவிழாக் காண விருப்புக்கொண்டு, தன் தோழியரில் ஒருத்தியை அழைத்து, "நீ நம் கோவினிடம் சென்று பாரிசாதம் அரும்பு வைத்திருக்கின்றதெனவும், யாம் அதனுக்குக் காம வல்லிக் கொடி யென்னும் கன்னி

லையைப் வதுவை செய்து காணவிருக்கும் திருவிழா விற்கு வருகவெனவும் கூறி வருவாயாக'' எனக் கட்டளையிட்டனுப்பினள். அவள் அக்கட்டளைப்படியே அரச குமாரன் கோயிலை யடைந்து, நம்பியைக் கண்டு வாழ்த்தி, 'ஐயன்மீர், அடியேங்களைக் கொண்டு நீரூற்றி வளர்த்த விஜயை யுலகத்துப் பாரிசாதம் அரும்பி யிருக்கின்றது. அதற்குக் காமவல்லியென்னும் நாமத்தை மணம் புரிந்து விழாக் கொண்டாட எம்பெருமாட்டியார் விரும்பியிருக்கின்றார். அதனைக் காணத் தேவரீர் அங்கு எழுந்தருளல் வேண்டும்'' என்று விண்ணப் பித்து, "இஃது எம் அரசியார் வாயுரை'' என உரைத் தனள். அம்மொழி கேட்ட திவிட்ட குமாரன் புன் னகை செய்து, "நங்கையே, மிகவும் நன்று! நாமும் எம் நங்கைமார் அங்கு வந்து காணுகுதும்'' என்று கூறி அவளை விடுத்தனன். அவள் சென்று தன் தலைவிக்கு அரசன் மண விழாவுக்கு வருவதாகத் தெரிவித் தாள்.

திவிட்ட நம்பி தன் தேவி இயற்றும் திருவிழாக் காண ஏக முயன்றபோது, விதூடக வேஷமிட்டொருவன் அவனருகு வந்து சேர்ந்தான். அவன் காலில் குண்டலங்களாகச் சங்கு காட்ட, உச்சிக் குடுமியில் மலர்மாலை நிரம்பக் கட்டி, ஒரு கையை இடையிலே ஊன்றி, மற்றொரு கைபால் அங்கவஸ்திரம் பிடித்து, கனைகோணற்றினறு, அரசன் முகிழ் நகை கொள்ளத் தனது சரீரத்தை வளைத்து, வகைவகையான விநோதப் பாடல்கள் பாடி, தகதகவெனக் கரணம் போட்டு நடித்து, அசதியாடி னன். அதனைக் கண்டு திவிட்ட குமாரன், "நன்று!

நன்று!! மிக நன்று!!!" என்று கூறிப் பெருங்கை செய்தான். அதற்குமேல் அவ்வேதியன் இரண்டு கைகளினாலும் தன் பெருவயிற்றைப் பிசைந்துகொண்டு, புழுதி படிய பூமியில் விழுந்து புரளவாரம்பினான். திவிட்டன் திகைத்து, "வேதியரே, உமக்குற்றது யாது? இங்ஙனமேன் மண்ணிற் புரளுகின்றீர்?" என்றனன். அதற்கு அவன், "ஐயன்மீர், மோதகம் உண்ட வாஞ்சையினால் என் உதரம் ஊதி ஊதி மோதுகின்றது" என்றான். "அங்ஙனமாயின், நீ மோதகம் என்று உண்டாய்?" என்று கடிதின் வினவ, "என்றுமில்லை, இன்று என் அரசியார் இயற்றும் மண விழாவில் உண்ணப் போகின்றேன். அதை நினைந்து நினைந்து எனது வயிறு மொக்குளிக்கின்றது" என்றான். திவிட்டன் வயிறு குலுங்க நகைத்து, "வேதியரே, வேதாந்தியனுஞ் செய்யும் வேதியாக்கன்றி உம் போன்றார்க்குக் கொழுக்கட்டை கிடைப்பதரிதாகுமே!" என்னப், அவன், 'அண்ணலே, அவ்வேதியர் பலரையும் வாதத்தில் வென்றிடும் வல்லபமும் என் தொந்தியும் அரசியார் முன்னமே அறிந்திருக்கிறார் அதனால், எல்லாக் கொழுக்கட்டையும் எனக்கே கிடைக்கும்" என்றான். நம்பி அவனை நோக்கி, "நீர் வேதம் அறிவீரே! வேதியரை எங்ஙனம் வெல்லுதல் கூடும்?" என்று வினவ, அதற்கு அவன், "அவர்கள் வாயாலே வேதம் ஓதினால், நான் என் கையாலே அவர்களை மோதி வெல்வேன்" என்றான். அரசகுமாரன், "நல்லது. உமது வாதத்தின் வல்லபத்தை அங்கே வந்து கண்டு மகிழ்கின்றோம்" என்று கூறி, அவனையும் மெய்காப்பாளரையும் உடனழைத்துக்கொண்டு, மலர்ப் பொழிலுக்குள் போய்ச் சேர்ந்தனன்.

அப்பொழிலில் பழுத்துத் தொங்கிய கொழுங்கனிகளை வேதிய விதூடகன் கண்டு, வாய் அங்காந்து, "ஆகா! நல்ல கனிகள்! நல்ல கனிகள்!! இவற்றையுண்டு என் உள்ளம் குளிரேனோ! காண்பதனாலே என் ஆசை நிறையுமா?" என்று கூறி, ஆங்காங்கே நின்றும், வாயில் நீர் ஊறக் கைகுவித்து அவற்றை வாயிலிடுவான் போலப் பாவனை காட்டியும், அரசன் பின்னாலே ஓடோடியும், அரசனை வழி மறித்து, "இவற்றை உண்ணும் உண்ணும்!!" என வேண்டியும் சென்றனன். அப்பொழுது அரசன், "இன்னும் நல்ல கனிகள் முன்னே நிரம்ப இருக்கின்றன சும்மா மெல்ல மெல்ல வாரும்" என்று கூறி, வேதியனை அழைத்துச் சென்றனன். அவன் அரசன் பின்னே தனது இயற்கைத் தன்மையை விடாது கோணக் கூத்தாடிக்கொண்டும் பாடிக்கொண்டும் வல்லே சென்றான்.

அங்ஙனம் செல்கின்ற மார்க்கத்தே ஒரு பக்கத்தில் காய் கனிகள் வெடிப்புண்டும் கடிப்புண்டும் சிதறுண்டும் மாத்தடிகளிற் கிடப்பதைக் கண்டு மனம் பகீர்க்கையுற்று, "என்னே! என்னே!! கதிரவன் கிரணமும் உள் நுழையா இக்காவினுள் கள்வர் நுழைய அவர்களுக்கு எங்ஙனம் மனம் துணிந்ததோ!" என்று மிகுந்த கோபாவேசத்துடன் அரசனை நோக்கி, "காவலரே! உமது காவல் வெகு நன்று! கோட்டை கொத்தளங்களில் பல வீரர்கள் நின்று காவல் புரிகின்றனரே! அவர்கள் எதற்காக அங்கு நின்று காவல் புரிய வேண்டும்? பொருளில்லாத விடத்தில் காவல் வைத்திருப்பது வெகு நன்று! வெகு நன்று!!" என்று வாய் குழறப் பேசினன். பின்பு மரங்களின் உச்சிக் கிளைகளில் நீண்ட

வாலோடு கூடிய குரங்கின் கூட்டத்தை விருத்தலைக் கண்டு, "இதோ கள்வர்! கள்வர்!" என மெல்லிய குரலுடன் கைகளால் சமிக்கை காட்டினான். அரசன், "கள்வர் அனேகர். இங்கே நமது வல்லமை ஒன்றும் பலிக்காது. இரையாமல் மெல்ல இவ்விடம் விட்டகல்வதே தக்கது. விரைவில் வாரும்! விரைவில் வாரும்!" எனக் கூறிக்கொண்டு நடக்கலானான். வேதியன் அவ்வுரை கேட்டுப் பயந்து சிந்தையனுயப் படபடப்புடன் நடந்து, அரசனது இரு பக்கங்களிலும் சாய்ந்து சாய்ந்து கண்களைச் சாய்த்துச் சாய்த்துப் பார்த்துக்கொண்டே செல்வானாயினான். சிறிது தூரம் சென்றதும், அவ்விருட்கண் பசுமை மரங்களின் செறிவிருளாய் இருக்கக் கண்டு, "அம்மம்மா! இவ்விருளில் எப்படிச் செல்வது!" என வெருவ, அவனைப் பார்த்து அரசன், "அந்தணரே, இஃது உண்மையான இருள் என்று; தருக்கள் சூழ்ந்த சோலையின் இருள்" என்று கூறி அவன் வெருளலைப் போக்கினன். அதற்கப்பால் அவ்வேதியன் ஒரு தருவினைக் கண்டு மருள மருள விழித்து மெய் நடுங்கிக் கைபிசைந்தனன். மன்னன் அதனைக்கண்டு, "வேதியரே, நீர் இங்ஙனம் அச்சமடைவதற்குக் காரணமென்ன?" என்று வினவலும், அவன், "ஐயனீர், உலகத்தில் சோலையும் போர்த்தொழில் தொடங்குவதுண்டோ? இதோ நம்முன் ஒரு மரம் இருப்புக் கவசம் பூண்டு சண்டைக்கு எதிர் நிற்கின்றதே!" என்று கூறி வெருண்டு அரசன் பின் ஒதுங்கினன். அவனை நோக்கி அரசன், "நீர் சிறிதும் அஞ்சாதீர்! இங்கே நம்முன் நிற்பது ஒரு மகிழமரம். இதனை வயவு நோய் கெட நம் மகளிர்கள் தம் பவள வாயிலிருந்து தேனை இதன்மேல் உமிழ, இதிலிருந்து எழுந்த நறு

நாற்றத்தால் கருநிறமுள்ள சுரும்பினங்கள் வந்து மொய்த்துக்கொண்டிருக்கின்றன. அவைகளே உமது பார்வைக்கு இருப்புக் கவசம்போலத் தோன்றின" என்று கூறி அவன் அச்சத்தை நீக்கி அழைத்துச் சென்றனன். சிறிது தூரம் சென்றதும் விதூடகன் மிக்க வியப்புடன் கையைக் கொட்டி, அரசனைப் பார்த்து, "ஐயன்மீர், அசோகமரத்தின்மேலுள்ள கிளைகளில் இளந்தளிர் விடுவதற்குக் காய்ந்த அடி மரத்திலும் சிவந்த தளிர் விடுவதுண்டோ?" என்று கூறி விலாப்பக்கம் குலுங்கச் சிரித்தனன். அரசன் அவனைப் பார்த்து, "அறிவில்லாதவரே, இதன் அடிவாரத்திற் றோன்றுவது இளந்தளிரன்று. இதற்கேற்பட்ட வயவு நோய் நீங்க நம் மகளிர்கள் செம்பஞ்சுக் குழம்பூட்டிய சிவந்த அடிகளால் இதன்மீது மிதித்த அடையாளமேயாகும்" என்றனன். இவ்விதமாக விநோத வார்த்தைகளாடிக்கொண்டே சென்று, அரசன் ஆங்கே இருந்த ஓர் அழகிய படிக மேடைமீதேறி யமர்ந்தான்.

அம்மணிச் சிலாதலத்தின் பக்கத்தே விதூடகன் சார்ந்து, சிறிது நேரம் எங்கேயோ கவனித்திருந்து, பின்பு அப்படிக ஒளியைப் பார்த்தனன், பார்த்ததும், மனம் மருண்டு, கண்கள் புரள விழித்துக் கைகளெறிந்து, உடல் நடுங்கி ஓடலாயினன். அவனைக் கண்டு அரசன், "வேதியரே, யாது கண்டீர்? ஏன் இவ்வண்ணம் நடுங்குகின்றீர்?" என்று வினவினன். பூசுரன், "மன்னரே, பூதம்! பூதம்!! இது நம்மைப் புடைத்துண்ணும். ஏதம் விளையுமுன் இங்கே நில்லாமல் விரைந்து ஓடுவோம் வாரும்! வாரும்!!" என்றனன். அரசன், "அப்பூதத்தின் உருவம் எப்படியுள்ளது?

என்று கேட்க, அவ்வேடுவன், "ஐயன்மீர், இவ்வுருவத்தைக் காணவும் பயமா யிருக்கின்றது! காதில் மணிக் குழையும் வளையமும் தொங்கி அசைகின்றன. கண்கள் காதளவும் அகன்று, நாற் பக்கமும் பிறழ்ந்து, காண்போரை அச்சுறுத்துகின்றன. கைகள் குவிந்திருக்கின்றன. வயிறு பருத்துத் தொந்தியும் சரிந்திருக்கிறது. அம்மம்ம! இதன் உருவம் மிகப் பயங்கரமா யிருக்கிறது! நாம் இங்கே காத்திருந்தால், இது நம்மை விழுங்கிவிடும் அரசரே, எழுந்திரும், எழுந்திரும்" என்றனன் வேடுவன் படிகச் சுவரில் காணும் தன் பிரதிபிம்ப ஒளியையே கண்டு மருளுகின்றானென்பதை அரசன் அறிந்து, அவனை நோக்கி, "மறையவரே, இது பூதம் அன்று. உமது நிழலே உமக்கு இவ்வாறு தோற்றுகின்றது. படிகத்தில் பொருள்களின் பிரதிபிம்பம் தோன்றுவதைக் காணவில்லையா? இதனைக் கண்டு இவ்வாறு அஞ்சுவாரும் உண்டோ?" என்றனன். அதற்கு வேடுவன், "அரசரே, நன்றாய்ச் சொன்னீர்! என் நிழல் என்னோடு தொடராமல் இக்கல்லினுள் புகுமா? இவ்வுருவம் பார்க்கப் பயங்கரமா யிருக்கின்றதே! நான் இப்படியா இருக்கின்றேன்? உண்மையில் இஃது ஓர் உருவன்று, பூதமே" என்று மறுபடியும் வெருண்டு ஓடுவானாயினன். திவிட்ட நம்பி மீண்டும் அவனை யழைத்து, "பேதைமை கொண்ட வேடுவரே, இது நிழலே. நீர் செய்யும் தொழிலே இதுவும் செய்கின்றது. பாரும் இதைக் கொண்டு உம் மன மருளை நீக்கும்" என்றனன். வேடுவன் அச்சிலா தலத் தெதிரில் கையையும் காலையும் அசைத்துக்கொண்டு கோணக் கூத்தாடினன். அப்படியே சிலா தலமும் பிரதிபிம்பித்துக் காட்டியது. அவன் அதனைக் கண்டு, "இது நம்மைப்

பரிகசிக்கும் பூதமோ!" என்று ஐயப்பட்டுக் கூறினன். அரசன், "இது உமது நிழலே ஐய முறுதிர்" என்றுரைத்துப் பல வகைச் சான்றுகள் காட்டி அவனைத் தெளிவித்தனன் அதன் பின் அவன் அச்சிலா தலத்தின் ஓரத்தில் ஒரு பக்கத்தில் உட்கார்ந்தான்.

இவர்கள் இங்ஙனம் அமர்ந்திருக்கும் பொழுது, கன்னியர் பலர் காவல் சூழ இன்னுயிர்த் தோழிகளுடன் தெய்வத் திருமேனி படைத்த சுயம்பிரபை அன்னமென மெல்ல நடந்து சோலையை வந்தடைந்தாள். அடைந்தவள் அரசன் மணிச் சிலா தலத்தில் அமர்ந்திருத்தலைக் கண்டு, அவனோடு விளையாட விரும்பி, விஞ்சையின் வல்லபத்தால் தன்னைப் பிறர் அறியா வண்ணம் செய்துகொண்டு தன் தலைவன் பக்கத்தே போய் நின்றாள். அப்பொழுது விதூடக வேதியன் அரசனை நோக்கி, "வேந்தரே, இவ்வசோகத் தரு அலரும் வண்ணம் அலத்தகம் ஊட்டிய அடிகளை வைத்தவள் அவனி மாதோ! விஞ்சையர் வஞ்சியோ! உரைத்தருள்க" என்னலும், அரசன், செம்மையாயும் செறிந்தனவாயும் இடையிலவாயு முள்ள விரல்களையுடையதாய் அழகிய தசை நிரம்பப்பெற்று மெல்லென வைத்திருக்கும் அடிச்சுவட்டை நோக்கி, "இவ்வடியின் அழகினாலே நான் இவள் மேனி முழுவதும் அறிவேன். இவள் விஞ்சைய மடந்தை, வையகமாளும் அரசனுக்குரியாள்" என்றனன். சுயம்பிரபை தன் நாயகனது மொழிகளை உள்ளவாறு உணராது தன் விஞ்சையை மாற்றி, வேந்தன் காண, கண்கள் காதளவும் ஓடிச் சிவக்க, நுதல் வியர்க்க, அரசனது ஆக்கையைப் பருகுவாள்போலக் கன்றி நின்றனள். வேதியன் அங்ஙனம் கோபத்

துடன் நின்ற அரசியைக் கண்டு மிகப் பயந்து, கால் பிடரியிற்பட ஓடி ஒரு புதருக்குள் மறைந்துகொண்டனன். அரசகுமாரன் சயம்பிரபையின் கோபாவேசத் தோற்றத்தைக் கண்டு, அந்தணனோடு பேசியிருந்தவனைச் சட்டென விட்டு, 'இனி ஏதம் யாது விளையுமோ!' எனப் பயந்த சிந்தையுடை அவளை நோக்கி,

"மன்னன்மக ளே!மகர வார்குழன் மடந்தாய்!
அன்னமனை யாய்!அமிர்தின் மேலுமமிர் தொப்பாய்!"

என இனிய மொழிகளால் விளித்து, "என்றுமில்லாத கோபம் உனக்கு இன்று வந்ததற்குக் காரணம் என்ன? யான் செய்த ஏதம் என்ன?" என்று மிகவும் மெலிய குரலிற் கேட்டனன். அவள் சிறிதும் சினம் மாறாதவளாய் அவனை நோக்கி, "சிவந்தனவாயும் செறிந்தனவாயும் திரண்டனவாயு முள்ள விரல்களை யுடையதாய அழகிய கழை நிரம்பப் பெற்ற அடியின் அழகினாலே அறிந்துகொண்ட அரசகுமரிய விசைய மடந்தை எவளோ?" என்றனள். அவன் அம்மொழி கேட்டுத் தாங்கமாட்டாதவனாய், அவளை மிக வணங்கி, 'அடிச்சுவட்டால் அறிந்த மகள் நீயே" என்றனன். அவள் அம்மொழி கேட்டுச் சினம் மாறி, "குற்றம் அரசா! நீயில்லை. இதற்குக் காரணனாயிருந்தவன் பார்ப்பான். அவனைப் பிடித்து வாருங்கள்" என்று தன் பாங்கியர்களுக்குக் கட்டளையிட்டாள். அவர்கள் அக்கணமே யோடிப் புதரில் மறைந்திருந்த அந்தணனை மடி பிடித்தீர்த்து வந்து மகாராணியின் முன் விட்டார்கள். அவள் அவனது பேதைமையையும், அவன் கண்களைப் புரளப் புரள விழித்து அச்சங் காட்டி உடல்

ஒடுங்கி நிற்பதையுங் கண்டு புன்னகை செய்து, சேடியர்களைப் பார்த்து, "இவனைக் கோத்த மாலையால் கட்டி இழுத்து வாருங்கள்" என்று ஆஞ்ஞாபித்து விட்டுப் பரிவார மங்கையர் சூழப் பொழிலினுள் செல்லலானாள். அப்பொழுது அவளுடன் சென்ற அரசன் விநோத வார்த்தைகள் பல பேசி அவளை மகிழச் செய்து, "மங்கையர்க் கரசீ, மர்க்கடன் ஏதொன்றுஞ் செய்திலன் அவன் மிகப் பேதையன். நீ அவன்பால் கொண்ட சீற்றத்தை மாற்றி அருள் காட்டுக" என்னும், அவள் பாங்கியர்களை நோக்கி, "அப்பாரப்பான பிணிப்பையும் தணிப்பீர்" என்றனள். அவர்கள் அங்ஙனமே அவன் இரு தோளிலும் யாத்திருந்த பூ மாலையைத் தணித்து விட்டார்கள். அவன் பிணிப்பிலிருந்து விடுபட்டதும் பேரானந்த முடையனாய் ஆனந்தக் கூத்தாடி, அரிமன மகிழ்ச்சியில் ஆடல் பாடல்களைச் செய்யலானான். அங்ஙனம் செய்பவன் அச்சோலையிலுள்ள கனிகளின்மீது தன் மனம் ஓடுவதையும் அவைகளைத் தின்ன வாய் ஊறுவதையும் குறித்துக் காட்டி, அச்செய்கையின் நன்கு புரிய வாயாலும

"ஓடு மேமனம் ஓடுமே!
கூடு மேசணி கோதையாய்!
காடு சோகனி காண்டோறும்
ஓடு மேமனம் ஓடுமே!

"ஊறு மேயெயி றூறுமே!
வீறு சோவிசி கோதையாய்!
சேறு சோகனி காண்டோறும்
ஊறு மேயெயி றூறுமே!

"வேண்டு மேமணம் வேண்டுமே!
பூண்ட பொன்னணி மார்பினாய்!
நீண்ட மாங்கனி நேரொறும்
வேண்டு மேமண மவேண்டுமே"

என்று பாடினன். சுயம்பிரபை அவனுடைய ஆடலையும் பாடலையுங் கண்டு கேட்டு மகிழ்ந்து, அவன் விரும்பிய கனிகளைத் தருக்களினின்றும் கருவித்து அருந்தக் கொடுத்தப் பின்னர் அரசனுடனும் மற்றும் பரிவாரங்களுடனும் இரத்தின வேதிகையின் நடுவண் வளர்க்கப்பட்ட பாரிசாதத் தருவினை யடைந்தாள்.

ஆண்டு அடைந்ததும், அரசியும் அரசனும் பாரிசாத மகனுக்குக் கலியாணஞ் செய்யும் வேலையை மேற்கொண்டார்கள். அரசி தன் தோழியரைக் கொண்டு இயந்திரத்தின் வழி வரும் தண்ணீரினால் பாரிசாதத்தை நீராட்டுவித்துப் பல அணி பணிகளைச் சார்த்தி, காமவல்லிக்கும் பனி நீரினால் மங்கல நீராட்டி, இரத்தினாபரணங்களைப் பூட்டிச் சோதித்து, மங்கல வாத்தியம் முழங்கப் பாரிசாதத்திற்குப் பொழிலரசு என்றும் காம வல்லிக் கொடிக்குப் பொழிலரசி யென்றும் பட்டஞ் சூட்டிக் கொண்டாடினாள். அரசன் தேவியுடனிருந்து அந்த மண விழாவினைக் கண்டு மகிழ்ந்தான். 'இன்னகைப் புதல்வர் செல்வம் யாவரே யினிதென் னாதார்?' இவ் விழாவின் காட்சியில் அரச தம்பதிகளுக்குப் புத்திர வாஞ்சை மேலிட்டது

பாரிசாத மணம் முடிந்ததும் சுயம்பிரபை பார்த்திபனைப் பிரிந்து தன் பரிவார மகளிருடன் பொழில்

விளையாடல்களுங் கேட்பாள். பார்த்திபனும் அத்தமையுடன் ஆணமீனக் கேட்குபவன் போலப் போக்குக் காட்டி, மகளிர் விளையாடும் பொழிலின் ஒரு பக்கத்தில் விருக்ஷத்தின் வல்லபத்தால் தங்களை மறைத்துக் கொண்டு அம்மகளிர் விளையாடுவதைக் கண்டு களிப்பா ஞயிருந்தார். அப்பொழுது மாதர்கள் மன்னன் மனைக் கேகினனென்று எண்ணிக்கொண்டு, தங்கள் விஷ்டம் போலப் பேசியும், பாடியும், ஆடியும், மலர் பறித்தும், மாலை கட்டியும், அதனை அணிந்தும், அணிவித்தும், இளந்தளிரொடித்துத் தங் காதிற் செருகியும், கை கோத்து விளையாடலானார்கள். அரசன் அவ்விளையாடல்களை பகற் கருமையென்னத் தனக்குள் புகழ்ந்து மகிழ்ந்து கொண்டிருந்தான். மாதர்கள் பொழில் விளையாட்டை முடித்துக்கொண்டு, குன்றேறி விளையாடுதலை விரும்பிச் செய்குன்றத்தை யடைந்தார்கள். ஆண்டடைந்ததும், அவர்கள் மலையேறி ஊவல், அம்மானை, கழங்கு, பந்து முதலிய விளையாடல்களைச் செய்து, இஷ்ட தெய்வத்தின் திருப்புகழைக் குறிக்கும் பாடல்களையும் இன்னிசையுடன் பாடுவாரானார்கள்.

இவ்வண்ணம் அவர்கள் பாடிக் களிகொண்டிருக்கும் பொழுது இஷ்ட குமாரன் சுயம்பிரபையோடு விளையாடக் கருதி, ஒரு மாயா தெய்வத்தை யழைத்து, அவர்கள் முன்னே மதயானையாக உருக்கொண்டு வா என்னை அத்தெய்வம் அப்படியே வர, மானைப் போலும் நோக்குடையார் மிக மருண்டு நாலா திக்கிலும் ஓடுவாராயினர். அப்பொழுது சுயம்பிரபை அச்சமடைந்து, 'எம்மடிகள் எங்குள்ளார்?' என்று கூவ,

10

திட்ட குமாரன், 'எங்காய், யான் இங்ஙனே யுள்ளேன் அஞ்சேல்! அஞ்சேல்!!' என்று சொல்லிக் கொண்டு அவள்பா லடைந்து, அங்கே வந்த யானையைப் போக்கித் தேவியைத் தேற்றி, யானை கண்ட மருட்சியால் ஓடியபோது ஏற்பட்ட நிலைகுலைந்த ஆடையணிகளைத் திருத்தி அவளைக் களிப்பித்தனன்.

அப்பொழுது ஆதித்தன் உச்சமானான். பொழில் விளையாடல் புரிந்த மாதருக்கும் மன்னனுக்கும் அங்கமெல்லாம் முத்தன்ன வியர்வைகள் அரும்பின. அரசன் பாங்கிகளோ டுடன் கூடிக்கொண்டு சென்று சாந்த வாவி, பொற்றாமரை வாவி, செங்குவளை வாவி, படிக வாவி முதலியவைகளிற் படிந்து நீர் விளையாடல் செய்தனன். பின்னர் அவர்கள் அப்பொழிலினகத் துள்ள பளிங்கு மண்டபத்தை யடைந்து, ஈரம் புலர்த்திய புதிய பட்டாடைகள் சுற்றிச் சாந்து பூசி, வாசப் பூமாலை சூடி, அறுசுவையோடு கூடிய நால்வகை யுண்டிகளையும் உண்டு களி சிறந்திருந்தார்கள்.

அவ்வமயம் விஞ்சைய னொருவன் விண்ணின்று வந்து அப்பொழிலிடை யிறங்கி அரசனைக் கண்டு அடிபணிந்து நின்றனன். அரசன் அவனுக்கோர் ஆசனங் காட்டி அதிலிருக்கச் செய்து, "எம் மாமனார் சடியரசர் முதலியோர் க்ஷேமமோ?" என்று அவனைக் குசலம் வினவினன். அவன், 'அரசரே, வாழி! மாமனா ராதியோர் சுகமே' என்றுரைத்துத் தான் கொணர்ந்த நிருபத்தினை நிருபனுக்குக் காட்ட நல்ல அமயம் பார்த்தான். அரசனும் அரசியும் ஒருங்கு அமர்ந்திருக்கும் அமயமே நல்ல சமயமெனக் கொண்டு மங்

கலம் பொறித்த திருமுகத்தினை அவர்கள் முன் நீட்டி னான். அப்பொழுது அரசியின் அருகிருந்த தோழி யொருத்தி அதனை வாங்கி வாசித்தாள். அவ்வாசகங் கேட்டு அரசன் அகம் மகிழ்ந்து, அவனுக்கு முடியணி யொழிய மற்றை யணிகளையெல்லாம் மனங் களிக்கு மாறு கொடுத்தனன், அரசியும் பல கலன்களை நல்கி, "இத்திருமுக வாசகத்தினை நீயே உன்வாயால் உணர்த் துக" என்றனள். அவன் தொழுது, "சுரேந்திர காந்த மென்னும் வடமலை நகராளும் மன்னன் மேகவாக னன் பயந்த சோதி மாலையென்னும் சுந்தரியை எம்மர சன் திருக்குமாரன் அருந்தகீர்த்தி மணம் புரிந்தான்" என்று தெரிவித்தனன். அரசு கமப்பதிக ளுட்பட யாவ ரும் எல்லையில்லா ஆனந்த சாகரத்தில் மூழ்கி அவ னுக்கு விடை கொடுத்தனர். அவன் அவர்களை வணங் கிக் ககனத்திற் கிளம்பி ஆகாய வழியாக விசயாக நகரம் போய்ச் சேர்ந்தான். அப்பொழுது சூரியனும் அத்த மலையை அடைந்தான்.

இரவு வந்ததும் திவிட்ட சமயியும் அரச கன்னி யரும் பற்பல ஆடல் பாடல்களில் மகிழ்ந்து பின்பு அவரவர்கள் தத்தம் சயனக் கிருகஞ் சேர்ந்து துயில் கொள்வா ராயினர். துயிலுகையில் சுயம்பிரபை தன் வாயினுள்ளே தண் நிலாவுமிழும் வெண்மதிய மொன்று புகுந்து வயிற்றில் தங்கியதாகக் கனாக் கண்டு அச்ச மடைந்து கணவன் தோளைக் கட்டிப் பிடித்தாள். திவிட்ட சமயி கண் விழித்து, 'அஞ்சாதை!' என்று அவளைத் தேற்றிப் பின்னர், "அச்சமுற்றதற்குக் கார ணம் என்?" என வினவினன். அவள் உற்றதைச் சொல்ல, அவன் அவளைப் பார்த்து, "அணங்கே, இஃது

ஒரு நன்னிமித்தமே. யாதும் தீதிலது. ஒரு குடை
நீழலில் இவ்வுலக மனைத்தையும் அடக்கி ஆளும் புத்தி
ரனொருவன் உன் வயிற்றுள் தங்கினன். சின்னாட்களுக்
குள் அத்தகைய மைந்தனைப் பெற்றெடுப்பை" என்று
கூறினன் அப்பொழுது அரசி வயிற்றுள் தான்
புகுந்ததை மெய்ப்படுத்துவான் போலச் சந்திரனும்
அத்தமித்தனன். சூரியனும் சுயம்பிரபையினிடத்தே
தோன்றும் குழவியும் என்போன் றிருக்குமென்று
காட்டுவான் போலக் குண திசை எழுந்தனன்

அன்று முதல் அரசி கருப்பவதியா யிருந்து,
நாளும் கோளும் நட்பாட்சி புச்சங்களிற் பொருந்தச்
சுவாதி நக்ஷத்திரத்தில் ஒரு புத்திரனைப் பெற்றெடுத்
தாள் அப்பொழுது எங்கும் நற்சகுனங்கள் நிகழ்ந்
தன, மங்கல வாத்தியம் கடலொலிபோல முழங்கின,
மத்தளப் பாணியும் கைத்தலத் தாளமும் சித்திரக கீத
மும் எத்திசையும் பரவி இன்பம் விளைத்தன, மாளிகை
களின் முன்றிலதோறும் மகர தோரணங்களும் மலர்
மாலைகளும் தொங்கின சிறைக்கூட மெல்லாம் அறக்
கூடமாயின அருக ஆலயங்கடோறும் அணி விழா
மலிந்தன எழு பகலளவும் சுண்ணமும் கலந்த நெய்
விழவு கொண்டாடிய பின்னர் உறவினர் அக்குழந்
தைக்கு அருகன் அடிக் கமலங்களில் அருச்சித்த புட்ப
முதலிய சேடங்களைச் சேர்த்தினார்கள்.

அப்பொழுது விசயதிவிட்டரும் பயாபதியும் அவ
ரவர் தேவிமாரும் மற்றும் எழுபெருங் கிளைஞரும்
ஒருங்கு கூடி அப்புத்திரனை எடுத்துத் தழுவி உச்சி
மோந்து தமக்குள்ளே பெருமகிழ்வு கொண்டு சந்தோஷ

சாகரத்தில் மூழ்குவா ராயினர். அதே காலத்தில் அந்தணரும் பல தேயத்து அரசரும் மற்றும் பெரியோரும் அங்கு வந்து குழுமி, அச்சேயின் அங்க விலக்கண விசேடத்தால் பெற்றோர்க்கும் மற்றோர்க்கும் வரும் சீரும் சிறப்புஞ் சிறக்கச் சொல்லி வாழ்த்திய பின்னர், அப்புதல்வனுக்கு விசயன் என்று நாம கரணஞ் செய்தார்கள். திவிட்டன் அந்தணர் முதலியோர்க்கு அநேக தானங்கள் செய்து, ஆசை யுள்ளளவும் கொள்கவென்று ஆதுலர்க்குப் பொக்கிஷச் சாலையைத் திறந்து விட்டனன்.

இச்சுப செய்தியைத் திவிட்ட குமாரன் நக்கின சேடிக்கும் அறிவிக்கத் தூதுவனை விடுத்து, அவன் வரவை எதிர் பார்த்துக்கொண்டிருக்கும் சமயத்தில், விசும்பாறுக விஞ்சைய ருலகினின்றும் ஒரு விமானம் போதனபுர நகரம் வந்தது. அதனைக் கண்டோர் அரசனுக்கு அறிவிக்க, அவன், "விமான மூர்ந்து வந்தவரை எதிர்கொண்டு அழைத்து வாருங்கள்" என்று அவர்களுக்குக் கட்டளையிட்டனன். அவர்கள் அங்ஙனமே அழைக்க, விஞ்சைய மாதர்களும் கஞ்சுகக் காவலர்களும் விமானத்தினின்று மிழிந்து திவிட்ட நம்பியை யடைந்து, அவன் பாதத்தில், 'போகிக!' என்று நெய்யைச் சொரிந்தார்கள். அவன் அம்மகளிர்களை யெல்லாம் அந்தப்புரஞ் செல்கவென்று அனுப்பினன். அவர்களெல்லாம் அரசன் தேவியிருக்கும் அந்தப்புரம் சென்று அடைந்தனர்.

அதன் பின்னர்ச் சுவலனசடி யனுப்பிய விஞ்சையரில் ஒருவன் திவிட்டனை யடைந்து வணங்கி, "மன்னா

மன்னரே, எம் மரசன் அருக்க கீர்த்தியின் மனைவி சோதிமாலை மஞ்சத்தில் படுத்துத் தூங்குகையில் ஆகாயத்தினின்றும் சந்திரன் இழிந்து வந்து தன் தொடைமீதிருக்கச் சொப்பனங் கண்டு, அன்று முதல் கருப்பவதியாகிப் பத்துத் திங்களுக்குப்பால் கிரகங்களும் நக்ஷத்திரங்களும் நன்மையாகப் பொருந்த, நல்ல சுப முகூர்த்தத்தில் ஒரு புத்திரனைப் பெற்றெடுத்தனள். அப்புத்திரனுக்குப் பெற்றோரும் மற்றோரும் சேர்ந்து அமிர்ததேசன் என்னும் பெயர் வைத்தனர். அப்புத்திரனைத் தாங்கள் காண வரும்பொருட்டுத் தங்கள் மாமனார் தங்களுக்கு இம்மங்கல உரையைத் தெரிவித்து வர எங்களை யனுப்பினார். நாங்கள் சுண்ணமும் செய்யுங் கொண்டு தங்கள் சமுகம் வந்தோம். இதுவே எங்கள் வரவின் விசேடம்" என்று உரைத்தனர். அம்மங்கல மொழியைக் கேட்ட திவிட்ட குமாரன் கழி பேருவகை கொண்டு விஞ்சைய ரூரிலிருந்து வந்த யாவருக்கும் பல உபசாரங்கள் செய்து, அவர்களை அவர்களூர் செல்ல விடை கொடுத்து அனுப்பினன். இது நிற்க.

திவிட்ட நம்பியின் புதல்வன் விசயன் ஐவகைத் தாயர் கையிலும், தந்தையின் மார்பிலும், தாயார் மடியிலும், தந்தையின் தாதை தோளிலும் தவழ்ந்து விளையாடிப் பூருவ பக்ஷத்துச் சந்திரனேபோல நாளொரு மேனியும் பொழுதொருவண்ணமுமாக வளர்ந்து, ஐந்து வயதினனாய்க் கல்வி கற்றற்குரிய பருவத்தினை யடைந்தனன். அவன் அப்பருவ மடைந்ததும், பெற்றோரும் சுற்றத்தாரும் சேர்ந்து, சுப முகூர்த்தத்தில் கல்வி யறிவொழுக்கங்களிற் சிறந்த ஆசிரியர் முன்னிலையில் வித்தியாரம்பஞ் செய்வித்தனர். விசயன் வித்தகக் கலை

ஞானங்களைப் பயின்று வருகையில், சுயம்பிரபை
ஒரு புதல்வியையும் பெற்றெடுத்தாள். அப்புத்திரிக்குப்
பெற்றோர் சோதிமாலை யென நாமகரணஞ் செய்து, இச்
சுப செய்தியை வித்தியாதர வுலகிற்கும் தெரிவித்து
மகிழ்ந்திருந்தனர்.

அப்பெண்மணியும் தன் தாயரும் தாதியரும்
சீராட்டி வளர்க்கப் பொற்பில் பூமகளையும் புலமையில்
கலைமகளையும் நிகர்த்து மணத்திற்குரிய பருவத்தினை
யடைந்தனள். பெற்றோர்கள் அவளது மணப்பருவத்
தினை யறிந்து அவளுக்கு மணம் முடிக்கும் ஆலோசனையி
லீடுபட்டார்கள். திவிட்ட குமாரன் அறிவாற் பெரியா
ராகிய அமைச்சர்களுடன் மந்திர சாலை புகுந்து, மண
வினை குறித்து ஆலோசித்துச் சுயம்வரம் நாட்டுதலே
தக்கதென முடிவு செய்துகொண்டு, நாடெங்கணு
முள்ள மன்னர்க்கெல்லாம் தூது போக்கி, நகர மெங்
கும் அறிய முரசறைவித்தனன். சுரமை நாடு முழு
வதும் மன்னன் மகளது மண விழாவையே பெரு
விழாவாகக் கொண்டாடினர்.

சுயம்வரத்திற்கெனக் குறித்த நாள் சமீபித்ததும்,
பற்பல தேய மன்னர்களும் அரசிளங் குமாரர்களும்
விஞ்சைய வேந்தர்களும் போதனமா நகரம் வந்து
சேர்ந்தார்கள். திவிட்ட ராசன் மைத்துனன் அருக்க
கீர்த்தி தன் புத்திரனோடும் புத்திரியோடும் போதனமா
நகரத்தின் புறமாகவுள்ள சோலையில் வந்து தங்கினன்.
அவர்களை யெல்லாம் திவிட்ட குமாரன் எதிர்கொண்டு
அழைத்து உபசரித்தனன். கார் வண்ணனாகிய திவிட்ட
னும் தவள வண்ணனாகிய விசயனும் பொன் வண்ண

ளாகிய அருக்ககீர்த்தியும் மற்றும் எழுபெருஞ் சுற்றத்தாரும் இச்சுயம்வர வினையை மேற்கொண்டு செய்யவல்லோர்கள் செய்வினையாளரைக் கொண்டு சுயம்வர மண்டபம் பொன்னுலகத்திலும் மண்ணுலகத்திலும் இல்லாத விதமாக இயற்றினார்கள். அம்மண்டபம் கண்டோர் கண்ணைக் கவர்தக்க அழகினை எழிலுடையதாக விளங்கியது. மண்டபத்தின் ஒருபால் ஆடரங்கமும், மற்றொருபால் மன்னர் தங்கும் மஞ்சமும், பிறிதொருபால் மன்னர் மகளிர் தங்கும் பொன்னாசனங்களமைந்த இடமும், வேறொருபால் அந்தணர் முதலிய பெரியோர்கள் அமரும் அழகிய இடமும் வகுக்கப்பட்டிருந்தன.

முகூர்த்த காலம் சமீபித்ததும், 'அரசர்கள் யாவரும் சுயம்வர மண்டபத்தை அடையலாம்' என்று குறிப்பிக்கும் மங்கல முரசு ஒலி கடலொலிபோலெழுந்தது. அதைக் கேட்டதும், இக்குவாகு குலத்துள் தோன்றிய அயோத்தியரசனும், குரு குலம் விளக்க வந்த அத்தினபுர வேந்தனும், நாத குலத் துதித்த குண்டல புரத்துக் காவலனும், உக்கிர குலத்து உற்பவித்த வாரணவாசிப் புரவலனும், அரி குலத் தவதரித்த சூரியகாந்த கோமானும், சந்திர குலச் செல்வன் மதுரை மன்னனும், இன்னோரன்ன ஐம்பெருங்குலத்தரசரும், பிறரும் சுயம்வர மண்டபத்திற் புகுந்து, எள் விழுதற்கிடமின்றி மஞ்சங்களின்மீது அமர்ந்திருந்தனர். அவர்களுக்குப் பின் அருக்ககீர்த்தியின் குமாரனாகிய அமிர்தசேனனாதிய விஞ்சைய அரச குமாரர்கள் ஆண்டடைந்து, தமக்கென நிருமித்த ஆசனங்களில் அமர்ந்தார்கள்

மன்னரும் பிறரும் மண்டப மடைந்ததும், இவிட்ட குமாரன் தன் புதல்வியைச் சுயம்வர மண்டபத்துக்கு அழைத்து வரத் தோழியர்களுக்குக் கட்டளை யிட்டனன். அவர்கள் அவளுக்கு மங்கள நீராட்டுவித்து, மணவணி புனைந்து, மாலை சூட்டி, மங்கையர் பலர் சூழ்ந்து,

"பொன்னோன மணிக்கொம்பே! பூமிமேல்
ஆரணங்கே! போற்றி! போற்றி!!
அன்னே! எம் மாசாகுலத் தனிவிளக்கே!
ஆரமிர்தே! போற்றி! போற்றி!!"

என்று போற்றுங் கூற, அவளைப் பூந்தார்களால் நிறைந்த வீதியூடே நடத்திச் சுயம்வர மண்டப நடுவண் கொண்டுவந்து விட்டனர். அப்பொழுது மங்கல தூரியம் பல வாய்விட்டுக் கோஷித்தன. காவலர் பலரும் கண்ணைப் பறிக்கும் மின்னற்கொடி போல்பவளாகிய சோதி மாலையைக் கண்டு, 'இக்கட்டழகியைப் பெறுபவனே இணையில்லாத பாக்கியவான். அந்தப் பாக்கியம் நமக்குக் கிடைக்காதா! நமக்குக் கிடைக்காதா!!' என எண்ணி எண்ணி ஏக்கம் கொண்டனர். மன்னரொழிந்த மற்றையோர் அவள் பேரழகைக் கண்டு வாய் அங்காந்து நின்றனர். அப்பொழுது சோதி மாலையின் உயிர்த்தோழி அரச கன்னிகைக்கு ஆண்டு வீற்றிருந்த பூமண்டலாதிபதிகளை ஒவ்வொருவரையும் பிரம்பு கொண்டு சுட்டிக் காட்டி, அவர்களது குலமும் பல பராக்கிரமும் குணவிசயங்களும் கூறுவா ளாயினள்.

"ஆரணங்கே, இதோ வீற்றிருக்கும் இறைவனைப் பார். இவர் இக்குவாகு குலத்துதித்தவர், அறவாழி

யணணலாகிய அருகப பரமேடடியை அனவாதமும
மறவாதவராய, ஆதி நாதா அருள வழி வநத மணிமுடி.
யைக கவிதது அரசு செயபவா இவருககு நிகாான
வா அரசில ஒருவருமிலலை இவா பககததே அமாந
திருபபவா கடனமீதிலும தமமாணை செலலுமபடி உல
கெலாம ஒரு குடைககீழாணட பரதேசுவர சககர
வாததியின வழி வநதவா இவாால நில மடநதை பரிவு
தீரநது வாழநதனருள பாகா வழித தோனறலாகிய
இவவேநதாது குலமும குணமும யான உரைகக
வேணடுவதிலலை இவை உலகம அறிநதவை இவாது
இளமையும எழிலும அததகையவை இவருக்கு இடப
பககததே வீறறிருபபவா குருகுலக கோமானா இவா
தரும சககரப பிரவர்ததகராகிய அருகக் கடவுளின்
திருவருளினாலே அகனற இவவுலககதின துயா கெடும
படி தமது ஆஞஞா சககாததை யுருடடி, அரசாகளது
முடி கம அடியிலபட ஆட்சி புரிநதவரும, அமாாகள
சபத மேகஙகளை ஏவி நீரைச சோறு மாரியாகச சொரி
விதத காலததில சாககூடஙகடடி அதனைத தடுதத
அதிவீராமாகிய குரு குல முதலவருடைய வழி வநத
வா. இவாது பெருமை அளபபரிது இவருககு இட
மருஙகில வெணகொறறக் குடை மேலகிழறறப
பொஙகு சாமரை அருகிரடட இனிது வீறறிருபபவா
வட மலை மேவாசாணடு, பினனாத துறவாசாரய விளங
கிய சுயம்புவின சநததியாா, அமரரும பாாாட்டும அழ
குடையாா இவா மருஙகேயிருபபவா இவவுலகை ஒரு
குடைககீழாணட சககாவாததிகள முறையே வரிசை
யாகப பிறநத உககிரசேன ராஜ வமிசததி லுதிததவா.
இவா உருவின மிக்கா, பெருமையிற பெரியாா. இவ
ருககுப பககததே யிருப்பவா நாத குல விளககாய் வநது

குண்டலபுரத் தரசர். இவர் அருகிருப்பவர் அரி குலத் தவதரித்த சூரியபுரக் காவலர் இவர் அரசாக்குச சிங்கம் ஒப்பார். இவரை மாலை சூட்டினால் புண்ணியம் பெறு தாயே. இவருக்கு அண்மையி லிருப்பவர் வள நாடும் கெழு நிதியும் படைத்த மதுரை மன்னர்; அதி மணம் வீசும் சந்தன மரங்களும் மற்றும் பிற சாதி மரங்களுஞ் செறியப் பெற்று விளங்கும் பொதிகை மலை தம் நாட்டி லிருக்கப் பெற்றவர், அரசருள் திலகம் போன்றவர். இவர் சமீபத்தே புள்ளவர் காம்புரத்துக் கோமானார் இவர் பாரிசத்தி லிருப்பவர் உறந்தையம்பதிக் கோமா னார். இவர் ஏமாங்கத நாடர் இவர் கலிங்க நாடர் இவர் அங்க நாடர். இவர் வங்க நாடர் இவர் மகத மன்னர் இவர் அவந்தி மன்னர் மற்றவர் கோசலத் தார்'' என்று அரசருடைய குல கோத்திரங்களையும் செல்வ நலங்களையும் எடுத்துக் கூறி, அவைகளிவான மண்டபத்தில் சோதிமாலையை வலமாகக் கொணர்ந்து, வட பாரிசத்தில் சிறக்க வமர்ந்திருக்கும் விஞ்சைய வேந்தரின் பெருமைகளை விரித்துக் கூறி வந்தாள். அங் ஙனம் கூறி வரும் தோழி அருகக சீதத்தி புதல்வனான அமிர்த தேசனைக் காட்டி, அவன் இன்னான், இன்ன திறலுடையான் என்று உணர்த்தா முன்னரே, சோதி மாலையினுடைய கண்கள் அவனுடைய பேரழகில் சிக் குண்ண, அவள் அக்காளைக்கே மாலை சூட்டி நாணங் கொண்டு தலை கவிழ்ந்து நின்றனள்

சோதிமாலை தன் மைத்துனன் குமாரனாகிய அமிர்த தேசனுக்கு மாலை சூட்டியதை யறிந்த திவிட்ட குமா ரன் மிக்க மகிழ்ச்சி யடைந்து, தம்பதிகளைக் கங்கை, சிந்து முதலிய புண்ணிய தீர்த்தங்களால் மங்கல நீராட்டு

விந்து, மங்கல வாத்தியம் கோஷிக்கப் புரோகிதர் செந்தீ வளர்த்து ஓமாதி கிரியைகள் செய்ய, விவாக மகோற்சவத்தை யாவரும் கண்டு களி கூர, இனிது நிறைவேற்றினர். அருந்ததி தரிசனமும் பூரணகும்ப வலமும் மற்றைய கிருத்தியங்களும் முறையே நிறைவேறிய பின் தம்பதிகள் தங்கள் மாளிகை யடைந்தார்கள்.

இந்த விவாக மகோற்சவம் இனிது நிறைவேறியதும், விஞ்சைய அரசகுமாரன் அருக்ககீர்த்தி தன் புதல்வி சுதாரைக்கும் சுயம்வரமென மன்னர் பலர்க்கும் தெரிவித்து, அவர்களை யெல்லாம் ஆண்டு வருவித்து, மங்கல நாழிகை வந்ததும் மகளைச் சுயம்வர மண்டபத்துக்கு அழைப்பித்தனன். விஞ்சைய கன்னி தோழியர் பலர் சூழ அன்னமென மெல்ல நடந்து அம்மண்டபத்தில் வந்து சேர்ந்தனள். அவளுக்கு அவள் உயிர்த் தோழி ஆங்கு வீற்றிருந்த நிலவுலகத் தரசர்களையும் மலையுலகத் தரசர்களையும் காட்டி, அவர்களது வரலாறுகளைக் கூறி வரும்பொழுது, திவிட்ட குமாரனை விசயனுக்கே மாலை சூட்டி மகிழ்ந்து நின்றனள். அது கண்டு அருக்ககீர்த்தி அகமகிழ்வெய்தி, அக்கினிக் கடவுள் முன்பாக விசயனுக்கும் சோதிமாலைக்கும் விவாகத்தை நடத்தி வைத்தனன். யாவரும் அம்மணத்தினைக் கண்டு மகிழ்ந்தனர்.

பின்னர் விசயனும் அவன் மனைவி சுதாரையும் போதனமா நகரத்திருந்து இனிது வாழ, சோதி மாலையும் அமிர்த தேசனும் விஞ்சைய ருலகு சென்று, இனிது வாழ்வாராயினர். திவிட்ட நம்பி தன் பட்டத்துத் தேவியோடு ஏக சக்கரேசுவரனாகவும், அவன் மகன் விசய குமாரன் இளவரசனாகவும் இருந்து உலகை ஒரு குடைக்கீழ்ப் புரந்துவந்தனர்.

# IX

## தருமோபதேசம்

திவிட்ட குமாரன் வித்தியாதர கன்னிகையை மணந்து மக்களைப் பெற்று மாட்சியம் அடைந்து ஏக சக்கரேசுவரனாகி இன்புற்று வாழ்தலையும், எங்கரிலும் போதனபுர நகரமே பொன்னகரம் போலப் பொலிவுற்று விளங்குதலையும் பயாபதி யரசன் கண்டு களிபேருவகை கொண்டிருந்தனன். இங்ஙனம் பயாபதி மன்னன் எல்லாப் பேற்றினையும் அடைந்து வாழும் பொழுது, ஒருநாள் திவிட்டனுடைய புதல்வனும் புதல்வியும் அவன் மருங்கு அடைய, அவர்களை அவன் கட்டித் தழுவி உச்சி மோந்து முத்தாடிக் களிக்கையில் அவனுக்குச் சில நல்ல எண்ணங்கள் தோன்றின. அவை வருமாறு:

"பூவுலகிலுள்ள அரசர் பலருள்ளும் தான் மேன்மை பெற்று விளங்க, பலராம கிருஷ்ண அவதாரங்களைப் போல் விசயதிவிட்டர்கள் குமாரர்களாய்த் தோன்றவும், விஞ்சைய ருலகத்து வேந்தன் தன் அரும் புதல்வியை வலியக் கொணர்ந்து திவிட்ட குமாரனுக்கு விவாகஞ் செய்து கொடுக்கவும், திவிட்டகுமாரனுக்குப் பிறந்த புத்திரனும் புத்திரியும் மாருட்டாக்கு மேலாய விஞ்சையர் பதவியினை அடையவும் செய்தது யாம் செய்த தவத்தின் விளைவன்றோ? இனியும் யாம் தவம் செய்வோமானால், இதனினும் மேலான பதவியை நாமும் நம் மரபும் அடையலா மல்லவா?

பண்டு இவ்வுலகிலிருந்த முடி சார்ந்த மன்னரும் மற்று முள்ளோரும் பிடி சாம்பராய் வெந்து மாண்ணுறே யன்றி எவரும் நிலை பெற்றிலரே! உண்பன உண்டு, பூண்பன பூண்டு, போற்றி வளர்த்து 'நான், நான்' என்று அபிமானஞ் செலுத்திகிய உடலும், பால யௌவன வயோதிக நிலைமைகளை முறையே அடைந்து, இறுதி யில் நரை திரை மூப்பு பிணிகளினால் சாக்காடு பெறு மானால், மற்றைப் பொருள்களின் தன்மைகளை ஆராய வும் வேண்டுமோ?

'தோகைமலர் அலங்கல் சூட்டித்
தூற்றுஞ் சுண்ணம் அப்பிப்
புகைகனி கமழ ஊட்டிப்
புறஞ்செய்யப் பட்ட மேனி,
சிகையினோ சிறுமுள் நீண்டச்
சிதைந்தழுக் கொழுகும் ஆயின
ஈகைபெரி துடைத்து நாளும்
இதனோரம் மகிழ்தல் நெஞ்சே!'

என்று இவை போன்ற பற்பல விடயங்களைச் சிந்தித்து, இனி நாம் இங்ஙனம் எண்ணுதன் வெண்ணிக் காலத் தையும் வீணாக்காமல், கடுகவே, 'நிலையில்லாதன கொண்டே 'நிலை பெறுவதாகிய தருமத்தைத் தேடிக் கொள்' என்று சாஸ்திரங்கள் கூறுகின்றபடி, நிலை யில்லாத இவ்வுடலத்தைக் கொண்டே இம்மை மறுமை யாகிய இருமைக்கும் பயன் தரும் அறத்தைத் தேட வேண்டும்'' என்று முடிவு செய்துகொண்டு, மந்திரி களை யழைத்து, மந்திர சாலையிலிருந்து அவர்களுடன் பின் வருமாறு ஆலோசிக்க லாயினன்

"மதியிற் சிறந்த புலவீர், பகை வேந்தரால் எவ்வகையினாலும் கொள்ளப்படாததாகவும், கள்வரால் கொள்ளை கொள்ள முடியாததாகவு முள்ள சாசுவத செல்வத்துக்கு ஊனம் வருவது முண்டோ? அது வருமாயின், அதனை எங்ஙனம் தவிர்த்துச் செல்வத்தைக் காப்பாற்ற முடியும்? நீங்கள் ஆராய்ந்து எனக்கு அறிவியுங்கள்" என்று வினவலும், அமைச்சர்கள், "அரசரே, ஆள்வினை, மாட்சி இரண்டானும் அரசு செய்து, தோள்வலிக்குத் தக்க துணைவலியும் உள்தாய், நல்வினையும் பொருந்தி, கூற்றமுங் குறுகா திருக்குமாயின், அச்செல்வத்தை எப்பொழுதும் ஒழியாது அனுபவிக்கலாம்" என்றார்கள். அரசன் அவர்களை மீட்டும் நோக்கி "அக்கூற்றம் கொள்ளக் கிடப்பது யாது? அதனை உரைமின்" என்னலும், அவர்கள், "நமது வாழ் நாள் கழிந்த காலத்து நமது உயிரையே அக்கூற்றுவன் கவருவான்" என்றார்கள் அரசன், "அங்ஙனமாயின், அக்கூற்றுவனுக்குத் தூதனுப்பி, ஆன்மாவைக் கவரா வண்ணம் சமாதானம் செய்துகொள்ளலாமோ? அல்லது அவனது நட்பினைச் சார்ந்து அவனூனம் வாராமல் ஒழிக்கலாமோ? அல்லது இவ்விரண்டையுங் கைவிட்டு, அவன் மேற் படையெடுத்து அவனை வெல்லலாமோ? எவ்வகை உபாயத்தால் அவனை வென்று ஆன்மாவைக் காப்பாற்றிச் செல்வத்தை அனுபவிக்கலாம்?" என்று அவர்களை வினவ, அவ்வமாத்தியர், "வேந்தரே,

'பீழைமை பலவுஞ் செய்து
பிணிப்பிட்ட பரப்பி வந்து
வாழ்வினைப் பொழிந்து வவ்வி
வலிந்துயிர் வாங்கி யுண்ணும்'

கூற்றுவனை வெல்லுஞ் சூழ்ச்சி யாங்கள் அறிந்திலோம்" என்றனர். அரசன் அவர்களை நோக்கி, "அமைச்சர்களே, அப்படியானால், யாமெல்லோரும் அந்தகன் வாயிலிருக்கின்றோம். நமது செல்வமும் பிறர் மாட்டுள்ள செல்வம். இங்ஙனமுள்ள நமது வாழ்க்கையோ, மான் ஒன்று தன்மேல் புலி பாயவிருக்கும்பொழுது நல்ல புல்லை ஆய்ந்து மேய்ந்த தன்மையினை நிகர்த்திருக்கின்றது" என்றுரைத்தனன். அவர்கள், "ஆம்! ஆம்! அரசே, அஃதுண்மையே. நாமெல்லோரும் யானைவாய்க் கவளம் போலக் காலன் வாயிலகப்பட்டு அவன் பல்லுக்கு இரையாக இருக்கின்றோம். அவன் உயிர் கவர்தலும் இமைப்பொழுதினும் அதி விரைவாக இருக்கின்றது" என்றார்கள். அரசன், "அங்ஙனமாயின், காலன் வாய்ப் படாமல் தப்பும் இடம் பிறிதில்லையோ?" என்று கேட்டனன். அவர்கள், "அரசே, சகல ஆசைகளையுந் துறந்து பஞ்சேந்திரியங்களையு முனிந்த தாபத முனிவர்பால் அறங் கேட்டு, அருக பகவானது அடிக் கமலங்களில் அடைக்கலம் புகுவதல்லது வேறோர் அரணுமின்று" என்று கூறினார்கள். அரசன் அம்மொழி கேட்டுச் சுடர் விளக்கில் நெய் பெய்திட்டுத் திரியைத் தூண்டியதுபோலப் பெருமகிழ்வெய்தி, அப்பொழுதே அருகிருந்தோரை நோக்கி, "அசோக நீழலமர்ந்த அருகப் பரமனுக்கு இன்று விழாவென்று நகரத்தில் முரசறைமின்" என்று சாற்றினன். அவர்கள் அங்ஙனமே செய்ய, நகர மாந்தர்கள் நகரத்தை நாகலோகமேயென அலங்கரித்துத் தங்களையும் ஆடை யணிகளால் அணி பெறச் செய்துகொண்டார்கள்.

அப்பொழுது வேதியர் பலர் வெண்டுகி லுடுத்து, வெண் சாந்து பூசி, வெண் மாலை சூடி, வெள்ளணி யணிந்து வெண் மருப்பு இரண்டுடைய வேழங்களின் மீது அருச்சனைக் குரிய பொருள்களை ஏற்றி வீதிவாய் வந்தனர். அரசர் பலர் செம்பட்டாடை யுடுத்துச் செஞ் சாந்து பூசி, செம்மலர் மாலை சூடிச் செவ்வணி யணிந்து, செம்முக அசுவங்களின்மீது ஆரோகணித் துச் செந்நவதிபே பாலி வந்தனர். பீதாம்பர முடுத்துச் செங்குவளை மலர் சூடிச் செம்பொற் சுண்ணம் அப்பிச் செம்பொன்னணி யணிந்து, வைசியரும் சூத்திரரும் அவர் பின்னே தொடர்ந்து விரவி வந்தனர்.

இவ்வண்ணம் அந்தணர், அரசர், வைசியர், சூத்திரர் ஆகிய நான்கு வருணத்தாரும் சூழ்ந்துவரப் பயாபதி யரசன் பட்டத்து யானையின்மீ தமர்ந்து, நீரப்பலி, விரைப்பலி, பூப்பலி முதலிய அருச்சனைப் பொருள்களைக் கொண்டு அணங்கன்ன பெண் மடவார் கவரி வீச, வெண்கொற்றக் குடை மேல் நிழற்றச் சென்று, சிகரம் அடைந்து, ஆலயத்தை மும்முறை வலம் வந்து, அருக கடவுளின் பாத கமலங்களுக்கு அருச்சனை புரிந்து, அப்பரமனது பெரும் புகழினைப் பின் வருமாறு பாடித் துதித்தனன்

“பூவடிவி னுவிரண்டு சூழ்சுடரு நாண
முழுதுலக மூடியெழின் முளைவயிர நாற்றித்
தூவடிவி னிலங்கு வெண்குடையி னிழற்
சுடரோயுன் னடிபோற்றிச் சொல்லுவதொன் றுண
சேவடிகள் தாமரையின் சேவிதழ்கள் தீண்டச் [டாலச்
சிவந்தனவோ? சேவடியின் செக்கதிர்கள் பாயப்

பூவடிவு கொண்டனவோ பொங்கொளிகள் சூழ்ந்து
புவனகொள்ள வாலெமக்கெம புண்ணியாதய கோவே!

கருமாலை வெவ்வினைகள் காறளர் ஞறிக
கடையிலா வெண்ஞானக் கதிர்விரிக்தா யென்றும்
அருமாலை நன்னெறியை முன்பயந்தா யென்றும்
அடியேமுன் னடிபரவு மாறறிவ தல்லால்
திருமாலே! தேனுரும ஆவிக்க மேர்தும
திருவணயகு சேவடியாய்! தேவாதி தேவ!
பெருமானே! நின்பெருமை நனருணர மாட்டா
பிணங்குவார் தமமைவினைப் பிணக்கொழிக்க லாமே!

"ஒளியாகி உலகாகி நீவிரிந்தா யென்கோ?
உலகெலாம் நின்னொளியின் உள்ளடங்கிற் றென்கோ?
அளியார வுலகாநீ யாலமிலை யென்கோ?
அமருலகு தானின்ன தடியடைந்த தென்கோ?
விளியாத மெய்ப்பொருளை நீவிரிந்தா யென்கோ?
நீவிரிந்த வாறேமெய்ப் பொருள்விரிந்த தென்கோ?"
தெளியாம விலலலகின திருவடிகண மெயம்மை
தெளிந்தாரு செவ்வனே தெரிந்துரைக்க லாமே!

"களியானை மாறகோட்ட தொன்றுடைய செல்வன
கண்ணோர் யிரமுடையான் கண்விளக்க மெய்தும்,
ஒளியானை வழிமுத லானானை யோகவி
உலகளவு மாயுயிர் தமக்குறுகண செய்யா
அளியானை ஆரழலன் சோதிவாய சூழந்த
அருளாழி யானையினை யடிபரவு வாரகட
கெளியானை எந்தைபெரு மானேயே யல்லால்
இறையாக சுவகொருவர் எண்ணுமா றென்னே!"

"தெருளாமை யால்வினவற பாலதொன றுணடு:
திருவடிகள் செம்பொனு ராவிந்த மேகத

இருளாழி யேழுலகும் சூழொளியின் மூழ்க
இமையாத செங்கண்ணின் இமையோர்கள் தேத்த
உருளாழி யானுமொளி மணிமுடிமேற் கைவைத்
தொருபாலில் வாழ்வுலக நினனுழைய தாக
அருளாழி முனசெல்லப் பின்செல்வ தென்னோ?
அடிப்பட்ட தாயின்ற அகஞானம் உணடோ?

“வானோர்தம் உலகுடைய மாநீல வண்ணன்
மகிழ்ந்திறைஞ்சு மாலையணி மணிமுடிமேல் வைகா
வானுரும் அறவாழி உடைமால் யானை
உடையானதன் ஒளிமுடியின் மேலுரையோ திறகது
தேனுரும் அரவிந்தஞ் சென்றேறத்தம் பொழுது
திருவடிகள் செந்தோடு தீண்டாவே யாகில்
ஆனுவிம் மூவுலகும் ஆளுடைய பெம்மான
அடியுறுவார் இன்மைதாம் அறிவுண்டு தனறே?

‘நேனருளி மந்தாரச் செந்தாமரைத் தாழாது
திரள்வரைய செம்பவளம் வம்பாக வூன்றி
வானருளி மாணிக்கச் செங்கதிர்கள் வீசி
மதிமருட்டும் வெண்குடையோர் மூன்றுடைய வாமன்
யானருள வேணடிப்படி யிணையணியும் பொழுதும்
இமையவர்கோன் ஆயிரச் செங்கணுள் வந்து
தானருளு மாறென்று தாளபணியும் பொழுதும்
தகையொன்ற தேவிறைமை நக்கதே யன்றே!

“விண்டாங்கு வெவ்வினை வேரூடறுத்து ஞானம்
விரிகின்ற மெய்ஞ்ஞானச் சுடர்விளக்கு மாட்டிக்
கண்டார்கள் நின்னிலைமை கண்டொழுக யானின்
கதிர்மயங்கு சோதியாற் கலைவிசைக்கப் பட்டுத்
தண்டாது மழைமலரின் மேனடக்தா யென்றும்
தமனியப் பொன்னணையின் மேலமர்ந்தா யென்றும்

வண்டார் சோலையிழல் வாயமர்ந்தா யென்றும்
வாழ்த்திலுல வாராயோ! வானவர்தங் கோவே!

"கருவார்ந்த பொருணிகழவுங் காலங்கள் மூன்றும்
கடையிலா ஞானக் கதிர்கொண்ட வாறீ
ஒருவாறின் கவொளியின் நின்னுள்ள மாகில
உலகெல்லாம் நின்னுள்ளத் தேயொளிக்க வேண்டா
திருவார்ந்த தண்மரமா! தேவாதி தேவ!
திரளரைய சொந்தவிர சோகமர்ந்த செல்வ!
வருவாரும் வையகமும் நீயுமவே றுங்கி
மணிமேனி மாலே! மயக்குவதிங் கென்னே?

"சேய்க்கணெடு மாலே! செறிந்திலங்கு சோதித்
திருமுயங்கு மூர்த்தியாய்! செய்யதா மரையின்
அங்கணடி வைத்தருளும் ஆதியாய்! ஆழி
அறவரசே! என்றுநின் அடிபணிவ தல்லால்
எங்கணிடா அகலுமா றிங்கிலைமை பெயதி
இருளுலகம் நீக்குமருள் கருக்கீ பென்று
வெங்கணிரு வினையையற வென்றுயமுன் னின்று
விண்ணப்பஞ் செய்யும் விழுத்தகைமை யுண்டே?"

அதன்பின் அரசன் அருகக் கடவுளின்து பாத சேடங்களைச் சிரமேற் சூடிக் கோயிலை வலம் வந்து அயலி லுள்ளதொரு மண்டபத்தை அடைந்தனன். அங்கே முற்றத் துறந்து தியானச் சோதியி லாழ்ந்து அமர்ந்திருந்த முனிவரை அரசன் வணங்கி அவரது கருணை நோக்கத்திற்கு எதிர் நோக்கிக்கொண்டிருந்த னன். முனிவரும் சிறிது நேரத்திற்குப் பின் தியான நிலையினைக் குலைத்துத் தம் முன் நிற்கும் அரசனையும் அவனுடைய பரிவாரங்களையும் கண்ணுற்றனர். அம்

பொழுது அரசனுடைய அமைச்சர்கள் அவர் பாதங்களில் வணங்கி, "அடிகளே, எம்மரசர்க்குப் பிறவிப் பிணி யொழித்துப் பிழைக்கும் நன்னெறியினைக் காண்பித்தருளல் வேண்டும்" என்று பிரார்த்தித்தனர். முனிவர் பெருமானும் அரசனை ஆசீர்வதித்துத் தரும மார்க்கத்தினை உபதேசித்தனர்.

தபோதனர் உபதேசித்த தருமோபதேசத்தைக் கேட்ட பயாபதி மன்னன் அவர் பாதங்களில் வணங்கி, "சுவாமி, இனி அடியேன் அரைக் கணமும் தாழ்த்தாது பேரின்ப மளிக்கும் வீட்டுலக நெறியே கைப் பற்றுவேன்" என்று கூறி எழுந்தான். அப்பொழுது அமைச்சர்கள் அரசனை நோக்கி, "அரசரே, இத்துய தபோதனர் திருவாய் மலர்ந்தருளிய உபதேச மொழிகள் விலக்கத் தக்கன அல்லவாயினும், உலக பாலனத்தை விடுத்துச் செல்லல் நீதியாகாதே!" எனத் தடுத்தார்கள். அரசன் தபோதனருடைய அரிய உபதேசமாகிய அமிர்தத்தை யுண்டு ஞான உரம் பெற்றானாதலால், அவன் அவர்களை நோக்கி, "நான் முடிவான வீட்டுலகம் எய்தலே முயல்வே னன்றி வேறொரு பாலனத்தையும் மேற்கொள்ளேன்" என்று கூறினன். அவர்கள் அரசனது மனவுறுதி யறிந்து, 'தவஞ் செய்யச் செல்வோரைத் தடுத்தல் நீதி யாகாது' எனக் கொண்டு, அவ்வாறே செய்யுமாறு தாங்களும் மன மிசைந்தார்கள்.

X

## சூளாமணி

மனமிசைந்த மந்திரிகள் பயாபதி மன்னனை நோக்கி, "அரச பூமானே, தபோதனர் அருளிக் கூறிய பயங்கரமாகிய இருள் நரகத்திடையே பல்லாண்டு காலம் இருந்து வருந்தும் ஓரான்மா முன் எப்பொழுதோ செய்த ஒரு புண்ணிய விசேடத்தினால் அந்நரகத்தினின்றும் மீண்டு மேற்கதி யடையப் போகும் தருவாயில் ஒருவன் தடுத்து, 'மீளவும் அந்நரகத்திலே குதி அதுவே நன்மையாகும்' என்றுரைத்தால், அவ்வான்மா உவந்து அதனைக் கொள்ளுமோ? அரசனாற் சிறை வைக்கப்பட்ட ஒருவன் அச்சிறைத் துன்பத்தை அனுபவித்து மீண்ட பின், மீளவும் அவன் அச்சிறையுள் புக விரும்புவானோ? அப்படியே, எப்பொழுதும் துக்கக் கருவாகிய இவ்வாழ்க்கைப் பிணிக்குப் பயந்து இதினின்றும் விலகி, என்றும் மாறாப் பேரின்ப மளிக்கும் வீட்டுலக நெறியைக் கைப்பற்றித் தவம் செய்ய முற்பட்டவர் தம்மை முன்னேற விடாது ஆசா பாசத்தி லாழ்த்தும் தொடர்புடைய புத்திர மித்திர களத்திர பந்து வர்க்கங்களைச் சிறிதும் கவனியார். அரச போகத்தை அவர் காலி லொட்டிய தூசெனக் கருதுவர் ஆதலால், அரசரே, காலத்தை வீண் போக்காது, தேவரீர் தலையில் தரித்த மணி முடியை இறக்கித் தவஞ் செய்யச் செல்லுதலே முறைமை" என மொழிந்தார்கள்.

அதன் பின்னர் அரசன் தன் புதல்வரை அழைத்து அவர்களை நோக்கி, "குமாரர்காள்,

'பொருளிலார்க் கிவ்வழிப் பொறியின் போகமும்
அருளிலார்க் கறத்தினும் பயனும் நூல்வழி
உருளவிலா மனத்தவர்க் குணர்வும் போன்மனார்
தெருளிலார்க் கிசைவிலன் திருவின் செல்வியே'

என்றபடி பொருளில்லாதார்க்கு இவ்வுலகில் அனுபவிக்கும் இம்மை யின்பம் யாதும் இல்லை. அருளில்லாதார்க்கு மறுமையில் அனுபவிக்கும் முத்தி யின்பம் இல்லை. கல்வி யறிவில்லாதார்க்கு நுட்ப புத்தி யில்லை. அவைபோல, நற்குணத் தெளிவில்லாரிடத்துச் செல்வம் சேர்தல் இல்லை. அங்ஙனம் சேரும் செல்வம் எவ்விடத்தும் நிலையாக நிற்பதில்லை. அதன் தன்மையை விரித்துரைக்கின்றேன், அமைவுடன் கேட்பீராக. அச் செல்வம் தன்னைப் பெற்றிருந்தவனை இகழ்ந்து தனக்குச் சமயம் வாய்த்ததும் வேறொருவனிடஞ் செல்லும். எவ்விடத்தும் நிலையாகத் தங்கியிராது, எவரையும் சாசுவதமாக உறவு பாராட்டாது, கைப்பொருள் உள்ளளவும் கூடி யிருந்து, அப்பொருள் குறைந்ததும் அகலும் வஞ்சகர் போல, அச் செல்வமும் ஒருவன் மாட்டுப் புண்ணிய முள்ளளவு மிருந்து, அது குறைந்ததும் தானும் அவனை விட்டு அகலும். அது ஒருவனிடம் சேர்ந்ததும், அவனுக்கு இயற்கையாக வுள்ள நற்குணத்தை மாற்றிச் செருக்கு, சினம் முதலிய தீக்குணத்தை யுண்டாக்கும், கற்றவர் என்றும் கற்றவர் என்றும் உயர்வும் உறவும் பாராட்டாது. ஆதலால், குமாரர்களே, நீங்கள் அதன்மாட்டு அன்பு ஒருபோதும்

செய்யாதீர்கள் எப்பொழுதும் அதனை அயல தென்றே கருதி யிருங்கள், கற்றறி மாந்தர்மீதே காதலைச் செலுத்துங்கள், அவர்களையே உற்றாரெனக் கொண்டு உய்மின்கள்.

"மக்காள், இனி அரசின் இயல்பையுங் கூறுகின்றேன்; ஆர்வத்துடன் கேட்பீராக. இறவும், 'இவர் குலத்தாலும் குணத்தாலும் செல்வ நலத்தாலும் மிக்கோர்' என்று பாராட்டுங் குணமில்லாதது, வலிமையும் சூழ்ச்சியும் எவன் உடையவனோ அவனைச் சேரும் இயல்புடையது, பண்டு இதனை யடைந்து இனிது வாழ்ந்தோர் கடல் மணலினும் பலர். ஒருவரோடாயினும் அது சென்றதன்று, நெடும் பகல் தன்னை யாண்டுவந்த திருப்பன் இவனென்று எவனிடத்தும் இது பற்றுவைப்பதில்லை. எவன் தன்னை வந்து பற்றுகின்றனோ, அவனையே இது சாரும் இதன் தன்மையை இவ்வளவும் நீட்டி உரைக்க வேண்டுமோ? சுருக்கிச் சொல்லுமிடத்து, சென்ற நாழிகை வரையுந் தன்னை அடைந்து அரசாண்ட காவலன் போர்க்களத்தில் வீழ்ந்து மடியச் சிறிதேனும் இரக்கமின்றித் தன் காவலனை வருத்தியவனையே பின்னாழிகையில் அது அடையும் இதன் தன்மை இத்தன்மையது. ஆதலின், நீங்கள் இதனைப் பொருள்படுத்தி, இதனிடத்துப் பற்று வையாதிருங்கள். பூ பாரத்தைத் தாங்கும் பருவம் வந்ததும் உங்கள் மக்களிடத்து நீங்கள் சுமக்கும் பூ பாரத்தை இறக்கி விட்டு, உயிர்க்கு உறுதி பயக்கும் துறவறத்தினை மேற்பூண்டு, பேரின்பத்தினை யடைவீர்களாக.

"புதல்வர்களே, இனி யான் இவ்வுலக அரசாட்சியை வேண்டாது, முத்தி யுலக ஆட்சியை விரும்பி

யுள்ளேன். இக்கால் தொட்டு இப்பூ பரிபாலனம் உங்கள் வசத்ததாகும். நீங்கள் என்னுடனிருந்து இனிது கழித்த நாட்கள் சில. இனி என்னைப் பிரிந்து கழிக்க வேண்டிய நாட்களோ பல. ஆதலால், கற்றறிவினை மாணப்புடைய நீங்கள் எனது பிரிவிற்குச் சிறிதும் வருந்தாதீர்கள். யான் பெருந்துறையாகிய தவத்துறையி லிறங்கி இன்ப சாகரத்தினை அடையப்போகின்றேன்" என்று மக்கட்குத் தனது விருப்பினையும் உறுதி மொழியையும் கூறி முடித்தனன்.

விசயதிவிட்டர் இருவரும் கூப்பிய கையராய் நின்று, "யாங்கள் தங்கட்கு இழைத்த பிழை யேதுமில்லையே! எதற்காக எங்களைத் துறக்க வேண்டும்?" என்று கவன்றுரைத்தனர். அரசன், "நீவிர் ஒரு பிழையும் இழைத்திலீர்" என்றுரைத்து, அதோடு, அவர்களுடன் உரை யாடுவதையு மொழிந்து அயலவன்போலாயினன். அதன் பின்னர் அரசன் தனது இன்னுயிரொத்த அமுதம்போலப்பவளான மனைவியை அழைத்து, "பெண்ணணங்கே, யான் தவஞ் செய்ய எழுந்தேன். நின் கருத்து யாது?" என வினவினன். அவளும் "யானும் தவஞ்செய்வேன்" என்று கூறி, அரசனுடன் புறப்பட்டனள். இது கண்ட மந்திரிமார்களும் "இனி இமைப்பொழுதும் தாமதித்து இங்கு இருக்கலாகாது" என்று சங்கற்பித்துக்கொண்டு, தம் மந்திரச் சுமையை மைந்தர்பால் இறக்கித் தவக்கோலம் பூண்டு அரசனைத் தொடர்ந்தனர்.

அப்பொழுது பயாபதி மன்னன் அமரர் கொணர்ந்த பாற்கடல் நீரிலே முழுகித் தானணிந்திருந்த ஆபரணங்

கலை யெல்லாம் விலக்கி, முனிவர் கூறிய முறைப்படி தவக் கோலம் பூண்டு முனியரசாயினன். அதனைக் கண்ட குறுநில மன்னர் ஓராயிரவரும் தாம் தாங்கிய அரச பாரத்தை மைந்தர்பால் சுமத்தி, அணி பணிகளை நீக்கித் துறவோர் கோலமாகி, முனியருடன் தாமும் தவஞ் செய்யச் சென்றனர்.

இங்ஙனம் தம் பிதா மணி முடி நீக்கி மாதவம் புரியச் சென்றமையைக் கண்ட விசயதிவிட்டர் கண்களினின்றும் நீர் ஆறாகப் பெருக்கி, "ஐயன்மீர், யாம் இதுகாறும் நும் காதற் புதல்வராயிருந்து இப்பொழுது அன்னிய ராயினேம்!" என்று வாய் விட்டுக் கூறிப் புலம்பினர். அடிக்கடி அவர்களுக்குத் தம் பிதாவின் பிரிவு தம் மனத்தை வருத்த, அவர்கள், "அரசர்கள் வந்து அடி பரவத் தாங்கள் எங்களை இரு கைகளாலும் ஏந்தி மார்பேடணைத்து முகந்திட்டுக் கொண்டாடி இன்று எங்களைப் பிரிந்து அன்னியர்போலச் செல்கின்றீரே! இது பெரிதும் கொடிது! கொடிது!" என்றும், "அன்று மார்பி லணிந்த தங்கள் மாலையை வாங்கி நாங்க ளணிந்தும், மார்பைப் பற்றியும், தோள்மீதேறியும் விளையாடிய எங்கள் செயலினைத் தேவரீர்க்கு இனி எவர் செய்யப் போகின்றார்?" என்றும் கூறி வருந்தினர். அவர்களை முனிவர்கள் நோக்கி, "அரச குமாரர்களே, நிலையில்லாத இத்தேகத்தைக்கொண்டு மூவுலகும் போற்றும் நிலைபெற்ற முத்தியுலகைக் கைவல்யமாகப் பெற்று எல்லா வுலகையும் தன்னடிப் படுத்த முயன்ற இவ்வீரச் செல்வர்க்கா நீங்கள் வருந்துகின்றீர்கள்?" என்று கூறித் தேற்றினர்கள். அவர்கள், "அப்படியானால், யாங்கள் வாய் விட்டுப் பிதற்றியது குற

றமே; எம் பிதாவின் நினைவின்படியே எல்லாம் ஆகுக'' எனக் கூறி, வருத்தம் நீங்கி, முனிவரடிகளை வணங்கித் தம் நகரடைந்தார்கள் மற்றக் குடிபடைகளும், 'அரச போகத்தையும் உலகக் காவலையும் பாதத்தி லொட்டிய பொடியாகவும் மதிக்காத நம் மன்னர் நம்மை ஒரு பொருளாக மதிப்பவ ரல்லர்' என மனத்துட் கொண்டு, பயாபதி யென்னும் முனி வீரனைத் தொழுது, தம் நகர் போய்ச் சேர்ந்தனர்.

அறவு மேற்பூண்டு தவம் செய்த பயாபதி முனிவர் மொழிந்தருளிய நெறியில் நின்று, பஞ்சேந்திரியங்களையு மடக்கி, ஐம்புலனையும் சுட்டறுத்து, உட்பகையைக் கடந்து, முத்தி யென்னும் நித்திய பேரின்ப வாழ்வைப் பெற்றனன் இவ்வாறு கடவுள் தன்மை யடைந்து அறவாழியாகிய அமிர்த வாரியுட் குளித்துப் பேரொளி பரப்பி நின்ற பயாபதி மூர்த்தியைத் தேவர்கள் அடி பரவித் துதி பல கூறிப் பெருஞ்சிறப் பியற்றித் தத்தம் உறைவிடம் சென்றடைந்தனர். பயாபதி தான் முயன்று பெற்ற கேவலப் பேரொளியால் இம்பர் உலகெலாம் விளக்கி, உலகின் முடிக்கு ஒரு சூளாமணி யானான்.

திவிட்ட குமாரன் தன் சகோதரனை விசயனுடனிருந்து உலகைத் தன் ஆழியின் வழி நிறுத்தி ஒரு குடை நீழலில் குடி படைகள் மகிழ்ந்திருக்க, அருகப் பரமனுடைய அடிக் கமலங்களை அகத்திருத்திப் பல லாண்டு பல்லாண்டாய் இனிது அரசு புரிந்து மகிழ்ந்து வாழ்ந்துவந்தனன்.

"ஞானபோதினி" அச்சுக்கூடம், சென்னை.